# பூக்கொடுத்துப் பாருங்கள்!

"ரசனை வேண்டும் சார்! கொஞ்சம் மென்மையான ரசனை வேண்டும். அது மட்டும் இருந்து விட்டால் பூக்கள் அளிக்கும் இன்பமே அலாதிதான். மன உல்லாசத்தின் பிரதிபலிப்பு, பூக்கள். தெரியாமலா சொன்னார்கள், 'ஸே இட் வித் ஃப்ளவர்ஸ்' என்று? மலர்க் கொத்தைப் போன்ற அற்புதமான பரிசு வேறொன்று உண்டா என்ன?'' என்று பொரிந்து தள்ளினார் சசிகலா.

"மலர்க் கொத்துகளும், பூச்செண்டுகளும் பரிசாகக் கொடுப்பதனால் என்ன பிரயோஜனம்? அடுத்த நாளே வாடி விடப் போகிறது, அவ்வளவுதானே?" என்று கொஞ்சம் சீண்டிப் பார்த்ததன் விளைவு!

''புத்தாண்டு போன்ற சந்தர்ப்பங்களில் நிறைய பேருக்கு வாழ்த்துத் தெரிவிப்பது வழக்கம். அப்போது எல்லோருக்கும் ஏதாவது பரிசு வாங்கித் தர நம் நிதி நிலைமை இடம் கொடுக்காமல் இருக்கலாம். வெறும் கையோடு வாழ்த்துத் தெரிவிப்பதை விட, ஒரு ரோஜாவைக் கொடுத்து விட்டு வாழ்த்துவது என்பது சிறந்ததுதானே? மலர்களைப் பெற்றுக் கொள்பவர்களின் முகங்களில் அப்போது உண்டாகும் மகிழ்ச்சியை கவனித்திருந்தால் நீங்கள் இப்படி ஒரு கருத்தை வீசியிருக்க மாட்டீர்கள். எங்கள் திருமணங்களில் கூட மலர் கொத்துக்கள் மிக அத்தியாவசியமான அம்சமாக விளங்குவது இதனால்தான்" என்றார் செல்வி இஸபெல்லா.

சென்னை அண்ணா சாலையின் மையப் பகுதியில் "கண்ட்ரி ப்ளா





# மறுபடியும் த்ரீ-டி!

**ப**தினோரு வருடங்கள் கழித்து 'மை டியர் குட்டிச்சாத்தான்' மறுபடி ரிலீஸ் ஆகியிருக்கிறது! தமிழ் நாட்டில் மட்டும் பத்து தியேட்டர்களில் திரையிடப்பட்டிருக்கும் கு. சாத்தானை ரீலீஸ் செய்திருப்பவர் கே.ஆர்.

வெள்ளி உலோகப் பூச்சு தரப்பட்ட ஸ்பெஷல் திரை, புரொஜக்டர்களில் ஸ்பெஷல் லென்ஸ், புதிதாக 3டி கண்ணாடிகள் என்று ஏக செலவு கேயாருக்கு.

"போன தலைமுறைக் குழந்தைகள் ரசித்த இப் படத்தை இந்தத் தலைமுறைக் குழந்தைகள் ரசிக்க வேண்டாமா? தோதாக தெற்காசிய விளையாட்டுப் போட்டிகளுக்காக, விடுமுறை வேறு விட்டு விட்டார்கள். தியேட்டரில் நல்ல கும்பல்!

"செலவு, வருமானம் தாண்டி குழந்தைகளுக்காக இப்படி ஒரு படத்தை மறுபடி ரிலீஸ் செய்ததில் பிரத்யேக சந்தோஷம் எனக்கு'' என்றார் கே.ஆர்.

● அது சரி. மெட்ராஸ் ஐ பரவ ஆரம்பித்திருக்கும் சூழ்நிலையில் இந்தக் கண்ணாடிகள்...

"சான்ஸே இல்லை. ஒவ்வொரு ஷோ முடிந்ததும் கண்ணாடிகள் நீராவியில் சுத்தம் செய்யப்பட்டே அனுப்பப்படுகின்றன. இதனால், ஒரு தியேட்டரில் நாலு ஷோ என்றால் நாலு செட் கண்ணாடிகள் வாங்கியிருக்கிறேன்!''

**- மௌலி**

---

ஸம் ஃப்ளோரிஸ்ட்'' என்ற பெயரில் பூங்கொத்து மற்றும் மலர் வளையங்கள் உருவாக்கும் கடை ஒன்றை நடத்தி வரும் பாலகிருஷ்ணனைக் கேட்ட போது அவர் மற்றொரு நடைமுறைக் கோணத்தைச் சுட்டிக் காட்டினார்.

"உயர் மட்டத்தில் உள்ள அதிகாரிகளும் மற்ற வி.ஐ.பி.க்களும் ஒருவருக்கொருவர் ஏதாவது விழாக்களில் சந்திக்கும் போது மலர்க் கொத்துகள்தான் கைகொடுக்கின்றன. வேறு எந்தப் பரிசுப் பொருளை வாங்கினாலும் அது மற்றவரிடம் இருக்க வாய்ப்பு உண்டு. அரசு அதிகாரிகள் விலை உயர்ந்த பரிசுப் பொருட்களைப் பெற்றுக் கொள்ளக் கூடாது என்கிற விதி வேறு! கைகொடுப்பது மலர்க் கொத்துகள்தான்'' என்றார்.

**ஒ**ரு மலர்க் கொத்தின் விலை சுமார் முப்பத்தைந்து ரூபாயிலிருந்து தொடங்குகிறது. திருமணத்திற்கான பூச்செண்டுகள் 700 ரூபாயில் கூட தயராகின்றன. கடைகளில் வைத்து பேக் செய்து தரப்படும் மலர்க் கொத்தின் விலை ஆயிரம் ரூபாய் வரை கூட ஆகிறது!

ஐம்பது ரூபாய் மதிப்புள்ள ஒரு மலர்க் கொத்தில் இடம்பெறுபவை – ஐந்தாறு ரோஜாக்கள், இரண்டு க்ளாடியோலை இருபது ஆஸ்டர் பூக்கள், பின்னணியில் சாம்பிராணி இலை என்று நாம் அழைக்கும் மணமுள்ள ஸிப்ரஸ் கொத்துகள் ஐந்து.

"**ப்**பூ!' என்று ஒதுக்க முடியாத வேறு சில விவரங்கள் இதோ.

மலர்க் கொத்தைப் பரிசாகப் பெற்றால் அதை ஃப்ளவர்-வாஸில் வைத்து நீருற்றலாம். ஒரு வாரம் கெட்டுப் போகாமல் இருக்கும். ஆஸ்பிரின் கலந்த நீரில் பூக்களை வைத்தால் சற்று அதிக நாட்கள் பொலிவுடன் தோற்றமளிக்கும்.

மலர்க்கொத்தை வாங்கி அளிக்கும் பழக்கம் எல்லா பிரிவினரிடையேயும் அதிகரித்து வருகிறது. இதற்கு ஒரு சின்ன சாட்சியம் வேண்டுமென்றால் 1992-ல் சென்னையில் இது போன்ற ஃப்ளாரிஸ்டுகளின் எண்ணிக்கை 140தான். இப்போது அது 300 ஆக அதிகரித்துள்ளது. ஐ.ஏ.எஸ். அதிகாரிகள் மற்றும் பெரிய நடிகர்களின் மனைவிகள் எல்லாம் கூட இந்த விற்பனையில் இறங்கியிருக்கிறார்கள்.

**- ஜி.எஸ்.எஸ்.**

படங்கள் : **கிருஷ்ணமூர்த்தி**

"சீக்கிரமா வா... நிறைய இடம் போக வேண்டி இருக்கு..."

காரில் இருந்தபடியே குரானா இரைந்தான். டிரைவர். நீலக் கோட்டும், சிவப்புத் தலைப்பாகையுமாக ஆறடி உயரத்தில் சர்தார்ஜி.

காஷ்மிலான் ஸ்வெட்டரை முழங்கைக்குக் கீழே இழுத்து விட்டபடி காரில் ஏறினேன். பகல் சூரியன் தட்டுப்படாத டிசம்பர் முப்பத்தொண்ணு. தில்லி ஏகமாகக் குளிர்ந்து கிடந்தது.

குரானாவையும் என்னையும் சேர்த்துப் பார்க்கிற யாரும், அவன் அதிகாரி, நான் ஊழியன் என்று நினைக்கலாம்... நினைத்து விட்டுப் போகட்டும். அவரவர் ஆகிருதி அப்படி. நான் ஐந்தரை அடிக் கருப்பன். நல்ல கம்பளி உடுப்பு வாங்கிச் சம்பாத்தியத்தைச் செலவழித்து ஆயுசு முழுதும் தில்லியில் இருக்கப் போவதில்லை. இரண்டு குளிர் காலம் இதே ஸ்வெட்டரோடு ஓட்டியாகி விட்டது. இதுவும் முடிந்து போனால், அடுத்த வருடம் ஊரைப் பார்க்கக் கிளம்பி விடலாம்...

"என்ன பேசாம வரே? அதிகாரி எல்லாம் டிரைவர்கிட்டே பேச்சு வச்சுக்கக் கூடாதுன்னு சொல்லியிருக்காங்களா?"

குரானா வாயைப் பிடுங்குகிறான். எதையாவது நான் உளறி, எக்குத்தப்பாக அவன் புரிந்து கொண்டால் வேறு வினையே வேண்டாம்.

# பரிசு

**இரா. முருகன்**

சர்தார்ஜிக்கு சுபாவமாகவே கோபம் மூக்குக்கு மேலே.

காலையிலிருந்தே பொழுது சரியில்லை. இருந்திருந்தால், ஊருக்கு முன்னால் ஆபீஸுக்கு வந்து, ஜெனரல் மானேஜர் கண்ணில் பட்டுத் தொலைத்திருக்க மாட்டேன்.

"பி.ஆர்.ஓ. சின்ஹா திடீர்னு மட்டம் போட்டுட்டான். வருஷத்துலே கடைசி நாள்... முக்கியமான வாடிக்கையாளர்களுக்குப் புத்தாண்டுப் பரிசு கொண்டு கொடுக்கணும்.. நீ குரானாவோட இப்பவே காரிலே கிளம்பு... அவனுக்கு எல்லா இடமும் தெரியும்... பிடி லிஸ்டை..."

லிஸ்டில் இன்னும் நாலு பக்கம் பாக்கி உண்டு.

பின் சீட்டில் திரும்பிப் பார்த்தேன். வண்ணக் காகிதம் சுற்றிய அட்டைப் பெட்டிகள். மஞ்சள் செலபோன் காகிதம் சுற்றிய கூடைகளில் ஆப்பிளும், ஆரஞ்சும்... டிக்கியில் காலண்டர், டைரி என்று நிறைந்திருக்கிறது.

ஒவ்வொருவராகப் படி ஏறிப் போய்ப் பார்த்துக் கொடுத்து, கம்பெனியின் வாழ்த்துக்களைச் சொல்லி...

கிரேட்டர் கைலாஷில் முதல் செக்டாரில் மிசஸ் பூனம் கன்னா பங்களாவில் ஆரம்பித்தபொழுது பத்து மணி. எம்டிக்கு வேண்டப்பட்ட குடும்பம்.

பத்து நிமிடம் வாசலில் நின்று மணியடித்து உள்ளே போனால், கன்றுக்குட்டி சைஸ் நாயைக் கட்டிப் போடாமல் அது துரத்தி வந்து...

கால்சராய் ஓரம் கிழிபட்டு, கட்டைவிரல் மேஜையில் இடித்து விண்விண்ணென்று தெறிக்க, புத்தாண்டு வாழ்த்துச் சொல்லி நீட்டிய பரிசை, அசிரத்தையாகக் கையைக் காட்டி மேஜையில் விட்டு விட்டுப் போகச் சொன்ன பூனைக்கண்ணி பூனம்கன்னா.

''ரிலாக்ஸ்....ரிலாக்ஸ்...'' என்று நாயை அதிர்ச்சியடையாமல் சமாதானப்படுத்துவதில் அவள் மும்முரமாக இருக்க, வெளியே வந்த போது காரில் உட்கார்ந்தபடி குரானா சிரிக்கிறான்..."என்ன... முழுசா வந்தியா?"

டிபன்ஸ் காலனியில் மேஜர் டிரஹான் பங்களா. பச்சைப் பசேல் தோட்டத்தைக் கடந்து உள்ளே நடக்க "அங்கியே நில்லு... கம்பள விரிப்பை இப்பத்தான் சுத்தம் பண்ணியிருக்கு..." ஹூக்கா புகையோடு இடிக்குரலில் ரிடையர்ட் மேஜர்.

பஞ்சாபி வேலைக்காரி என் கையிலிருந்து பிடுங்கிக் கொண்டு போனதை எல்லாம் அரை வினாடி பார்த்து, "இந்த மாதிரி ஆயிரம் கச்சடா வந்திருக்கு..."என்று நடந்து போகிறவரின் முதுகுக்குப் பின்னால், வாசலிலேயே நின்று வாழ்த்துப் பாட வேண்டிய கஷ்டம்... கம்பெனி வேலை... நாய் வேஷம் போட்டாகி விட்டது...

லாஜ்பத் நகரில் மிஸ்டர் மிட்டல் வீடு. ஏதோ மினிஸ்ட்ரியில் சீப்செகரடரியாக இருந்து ஓய்வு பெற்று, இப்போது பல நிறுவனங்களுக்கு நிதி ஆலோசகர்.

"எத்தனை பேருக்குப் பரிசு போகிறது... எவ்வளவு செலவானது... கம்பெனியில் இந்த வருஷம் என்ன லாபம் எதிர்பார்க்கப்படுகிறது? புவனேஷ்வர் யூனிட்டில் என்ன தகராறு?..." கேள்வி மேல் கேள்வியாகக் கேட்டுத் துளைத்து எடுத்தவர், மரியாதைக்குக் கூட உட்காரச்

சொல்லவில்லை.

"அதிகாரி என்கிறாய்... ட்ரிம்மாக வர வேண்டாமா... பால்காரன் மாதிரி இப்படிப் பச்சை ஸ்வெட்டரும், பாலீஷ் போடாத ஷூவுமாக நிற்கிறாயே"என்று கிண்டல் வேறு.

பேசாமல் குரானாவையே உள்ளே அனுப்பி யிருக்கலாம்.

அவன் ஜமீன்தார் போல காரை விட்டு இறங்கவே இல்லை.

"இப்படிச் சுத்தணும்னு தெரிஞ்சுதான் காலையிலேயே ஒரு பிடி பிடிச்சுட்டு வந்துட் டேன்..."

குரானா ஏப்பம் விட, காலையில் இரண்டு ரொட்டியோடு காய்கிற என்வயிறு இரைகிறது.

லோதி எஸ்டேட்டில் ராமகிருஷ்ணன் வீடு. கம்பெனியின் டைரக்டரும் கூட. "தமிழா நீ... நல்லதாப் போச்சு..."

அட்டைப் பெட்டியை நானே அலமாரியில் வைத்து, பழங்களை, ஃப்ரிட்ஜில் அடுக்கி, காலண்டரைப் பிரித்துச் சுவரில் மாட்டி... கடகட தேநீர் குடித்தபடி வேலையை மேற்பார்வையிடுகிற மிசஸ் ராமகிருஷ்ணன்.

இரவு கனமாகக் கவிகிறது. குளிரும்தான். சதாசிவம் மெஸ் மூடியிருக்கும். பசியும் தாக முமாகப் புத்தாண்டு பிறக்கப் போகிறது.

"இறங்கு..." குரானா சொல்கிறான். இந்த அழுக்குச் சந்தில் எந்த வி.ஐ.பி?

கையைப் பிடித்து உள்ளே தரதரவென்று இழுத்துப் போகிறான்.

மங்கலான வெளிச்சத்தில் எழுந்து நிற்கும் சர்தாரிணி. குரானாவின் தோளைப் பிடித்து எக்கித் தொங்கும் ஐந்து வயதுப் பையன்.

"சாப் பசியா இருக்கார்.. எடுத்துவை சீக்கிரமா.."

குரானா கோட்டைக் கழற் றிக் கதவில் மாட்ட அவன் சட் டைக் கிழிசல் கண்ணில் படு கிறது.

"என்ன பாக்கறே.. இப்படி உக்காரு... டிரைவர் வீட்டுலே அதிகாரி சாப்பிட்டா ஒண் ணும் குறைஞ்சு போக மாட் டார்..."

கடச்சுடத் தட்டில் விழுகிற ரொட்டியும் பருப்பும்.

"வா... உன்னைக் கொண்டு விட்டுட்டுக் காரை கேரேஜ்லே போடணும்..."

குரானா முன்னால் நடக்க, முன்குடுமி வைத்த சின்னப் பையன் எதையோ கொண்டு வந்து எனக்கு முன் நீட்டு கிறான். எதுவும் எழுதாத போன வருஷ டைரி.

"பேவகூப்பையா... உனக்கு விளையாடக் கொடுத்தா..."

குரானாவைக் கையைக் காட்டி நிறுத்தி விட்டு, டைரி யைப் பத்திரமாக சட்டைப்பை யில் வைக்கிறேன்.

"ஹாப்பி நியூ இயர்..."

சின்னக் கையைப் பற்றிக் குலுக்கி விட்டு நடக்கிறேன்.

குளிர் இதமாக இருக்கிறது.



# அன்பளிப்பாக ஆரோக்கிய வாழ்க்கை!

அவசர அவசரமாகச் சாப்பாடு. பஸ்ஸில் ஆபீசுக்கு ஓட்டம். ஜோக்குகளில் வருவது மாதிரி ஆபீசில் தூங்காமல், உழைப்போ உழைப்பு. மாலையில் வீடு திரும்பும் போது சோர்ந்து களைத்துப் போய், சோபாவிலேயே சுருண்டு முடங்கிவிடும் கணவன்மார்களே!

பால் பாக்கெட் வரும் முன்னாலேயே விழித்து எழுந்து, ஸ்கூல் போகிற பையனுக்கும் பெண்ணுக்கும் ஹோம்வர்க் செய்து கொடுத்து (அல்லது சொல்லிக் கொடுத்து!) கறிகாய் நறுக்கி, சமையல் செய்து, அவர்களைப் பள்ளிக்கூடத்துக்கும், கணவனை ஆபீசுக்கும் அனுப்பும் பரபரப்பில் மூழ்கிவிடும் மனைவிமார்களே!

உங்களுக்கெல்லாம் யாராவது பரிசு கொடுக்கிறார்களா?

'அட, யார் கொடுப்பார்கள்?' என்று கேட்கிறீர்களா?

"கணவனுக்கு மனைவியும், மனைவிக்குக் கணவனும் கொடுக்கக்கூடிய பரிசு இருக்கிறது. அதுதான் ஆரோக்கியமான வாழ்க்கை!" என்கிறார் அப்போலோ ஹாஸ்பிடல்ஸ் ஜெயஸ்ரீ.

"டாக்டரிடம் போய் ஒரு செக்அப் செய்து கொள்ளுங்கள் என்று சொன்னால் கேட்பதில்லை. நான்தான் வலுக்கட்டாயமாக இழுத்துக் கொண்டு போக வேண்டும் ஒருநாள்!" என்று மனைவிமார்கள் சொல்லுகிறார்கள்.

''ஒரு கம்ப்ளீட் செக்-அப் செய்து கொள்வதுதானே?" என்று கணவன்மார்கள் சொல்லும் யோசனையை எத்தனை மனைவிமார்கள் ஏற்றுக் கொண்டு டாக்டரிடம் புறப்படுகிறார்கள்?"



அப்போலோ மெடிகல் சென்டரில் இருந்து 'GIFT OF GOOD HEALTH FOR SOME ONE SPECIAL' திட்டத்தில், ஒரு முழு ஹெல்த் செக்அப் செய்து கொள்ள வசதி செய்திருக்கிறார்கள்.

''டயாபடீஸ், ரத்த அழுத்தம், புற்று நோய், மூச்சுக் குழாய் சம்பந்தப்பட்ட நோய்கள் முதலியவற்றை இந்த மாதிரி பரிசோதனைகளின் போது கண்டுபிடித்து விடலாம். பிறகு தகுந்த சிகிச்சைகள் மூலம் கட்டுப்பாட்டுக்குக் கொண்டு வந்து விட முடியும். நோய் முற்றிய பிறகு சிகிச்சை மேற்கொள்ளுவதை விட, அதைத் தவிர்ப்பதோ முளையிலேயே களைவதோதானே நல்லது?'' என்கிறார் ஜெயஸ்ரீ.

கம்பெனிகள் கூட தங்கள் ஊழியர்களுக்கு இந்த 'ஹெல்த் செக்அப்'பைப் பரிசாக அளிக்கலாம்.

நண்பர்களுக்கு, அப்பா—அம்மாவுக்கு, ஏன் மாமனார் – மாமியாருக்குக் கூட – ஆரோக்கிய வாழ்க்கைப் பரிசு அளிக்கலாம்!

அப்போலோவில் பரிசோதனைகள் செய்து எக்ஸ்ரே, இ.ஸி.ஜி., அல்ட்ரா சவுண்ட் முதலான இருபத்தெட்டு டெஸ்ட்டுகள் எடுத்து, ஒரு முழு ரிப்போர்ட் தயாரித்துக் கொடுத்து விடுகிறார்கள்.

கட்டணம் – கணவன்களுக்கு என்றால் 1250 ரூபாய். மனைவிகளுக்கு என்றால் 1350 ரூபாய். இரண்டு பேருக்கும் சேர்த்து என்றால் 2425 ரூபாய்தான்!

– சித்தார்த்

பதிவு எண்: 26383 போன்: 583241




# கல்பதரு பெனிபிட் பண்டு லிமிடெட்

(கம்பெனிகள் சட்டப்படி பதிவு செய்து நிறுவப்பட்டது)
பதிவு அலுவலகம்: 134, ராசப்ப செட்டி தெரு,
(ஸ்ரீ கந்தகோட்டம் அருகில்) பார்க் டவுன், சென்னை-600 003.

**பிக்சட் டிபாசிட் திட்டம் மாத வட்டிக்கான காசோலைகள் முன் கூட்டியே வழங்கப்படும்**

| காலம் | 46 நாள் | 90 நாள் | 6 மாதம் | 1 ஆண்டு | 2 ஆண்டு | 3 ஆண்டு | 4 ஆண்டு | 5 ஆண்டு |
|---|---|---|---|---|---|---|---|---|
| வருட வட்டி வீதம் | 14% | 15% | 16% | 17.5% | 18.5% | 19% | 19.5% | 20% * |

## குபேரன் வைப்பு திட்டம்

வட்டி 21% குறைந்த அளவு டிபாசிட் ரூ. 50,000/- காலம் : 5 வருடம்.
மாத வட்டிக்கான செக்குகள் முன்னதாகவே வழங்கப்படும்

## அமுத சுரபி டிபாசிட் திட்டம்

| டிபாசிட் தொகை | காலம் | கிடைக்கும் தொகை |
|---|---|---|
| ரூ. 5,600 | 15 வருடம் | ரூ. 1,00,000 |
| ரூ. 7,000 | | ரூ. 1,25,000 |

## கல்பதரு மணிபேக் திட்டம்

அ) பிரதி மாதம் ரூ.100/- வீதம் தொடர்ந்து 15 வருடம் செலுத்த வேண்டும்.
முதல் 5ம் ஆண்டு முடிவில் நீங்கள் செலுத்திய ரூ. 6000/-ஐ பெறுவீர் !
2வது 5ம் ஆண்டு முடிவில் மீண்டும் ரூ.6000/-ஐ பெறுவீர் !
3வது 5ம் ஆண்டு முடிவில் ரூ.51,000/-ஐ பெறுவீர் !

**முதியவர் நலத்திட்டம்: வயோதிகர் விதவைகள் கல்வி மற்றும் அறக்கட்டளை பயன் பெறலாம்.**

| தொகை | காலம் | வட்டிவீதம் |
|---|---|---|
| ரூ. 10,000 | 12 மாதங்கள் | 20% |
| ரூ. 10,000 கீழ் | | 19% |

**சேமிப்பு டிபாசிட் திட்டம் - 10% வரை வட்டி வழங்கப்படும்**



**கடன்**

நகைகள் பேரில் கிராம் 1க்கு ரூ.300/- வழங்கப்படும்
சென்னை மாநகரில் உள்ள சொத்துக்கள் பேரிலும் வழங்கப்படும்

வட்டி விகிதம் ரூ.1.95

அலுவலக நேரம் : காலை 8.30 முதல் 12.30 வரை மாலை 2.00 முதல் 6.00 வரை ஞாயிறு காலை 8.30 முதல் 12.30 வரை

பயன் பெற ரூ. 5/- செலுத்தி பங்குதாரர் ஆவீர். (செவ்வாய் விடுமுறை) பாதுகாப்பு • சேவை • சுபிட்சம்

# 1. சூளாமணி விஹாரம்




அந்த மாளிகையின் வாயிலில் திடகாத்திரமான தேகத்துடனும், உருவிப் பிடித்த வாட்களுடனும் வீரர்கள் சதா உலவினார்கள். அவர்கள் அனுமதியின்றி காற்றுக் கூட அந்த மாளிகைக்குள் நுழைவது கடினம் என்பதை நிரூபித்துக் கொண்டிருந்தார்கள். ஆனால் உள்ளே நுழையவும், எட்டிப் பார்க்கவும் வேறு வழிகளுமிருக்கின்றன என்று உணர்ந்த புஷ்பக் கொடிகள், பக்கத் தூண்களின் வழியே படர்ந்து மேலேறி, மேன்மாடத்து உப்பரிகையிலும் பக்க அறையிலும் சாளரத்தின் வழியே எட்டிப் பார்த்து, தங்கள் மலர் முகங்களைக் காட்டி நகைத்துக் கொண்டிருந்தன. அப்படிக் காவலர்களைப் பரிகசித்து தூண்களைப் பற்றி மேலேறி, அறைக்குள் எட்டிப் பார்த்தது நித்திய மல்லிக் கொடியொன்று; அறைக்குள்ளிருந்த மஞ்சத்தில் புஷ்பக் கொடியொன்று படுத்திருப்பதைக் கண்டு திகைத்தது. சடாரென்று தனது தலையை வெளியே இழுத்துக் கொண்டது. சற்றுக் கழித்து மீண்டும் தலையை உள்ளே நீட்டிய கொடி, மஞ்சத்தில் கிடந்தது சாதாரண புஷ்பக் கொடியல்ல என்பதையும், புஷ்பக் கொடியை விட அழகிய மங்கை என்பதையும் புரிந்து கொண்டதால் துணிவுடன் அவளை ஆராயவும் தொடங்கியது. அவளை ஆராயத் தொடங்கிய பின்பே அந்தப் புஷ்பக் கொடிக்கு இயற்கை செய்திருந்த ஓரவஞ்சனை புரிந்திருக்க வேண்டும். ஒரு புஷ்பக் கொடிக்கு ஒரே வித மலர்களை அளிக்கும் இயற்கை, அசல் புஷ்பக் கொடியாகவே இருந்த அந்த மங்கைக்கு மட்டும் பலவித மலர்களை அளித்திருந்தது!

'முகத்தில் தாமரையையும் நீலோற்பல மலர்களை விழிகளிலும், முல்லையை இதழ் வரிசையிலும் தளிர் விரல்களில் அசோக மலர்களையும், விரல் நகங்களில் மாம்பூவையும், உடல் முழுவதும் தாழையின் மஞ்சள் நிறத்தையும் அளித்திருந்த இயற்கை, பலவித மலர்களைக் கொண்ட ஒரே புஷ்பக் கொடியாக அவளை அடித்திருந்தது.

புஷ்பங்களின் சேர்க்கை மட்டுமின்றி அந்த மங்கையிடம் தமிழகத்தின் பெரும் அரசுகளின் சேர்க்கையும் தெரிந்தது. பாண்டி நாட்டுக்கே உரிய அகன்ற கருவிழிகளில் சோழ நாட்டு விஷமமும் சிந்தனையும் கலந்திருக்க, மலை நாட்டுப் புஷ்பங்களாக செழித்துக்கிடந்த அவயங்களில் கொங்கு நாட்டு கம்பீரமும் தெரிந்தது.

தந்தக் கரங்களில் பிடித்திருந்த ஓலையொன்றை மீண்டும் படித்தவள் சிந்தனையுடன் எழுந்து சாளரத்தை நோக்கி நடந்தாள். அவளது அழகிய அந்த நடைக்குத் தென்றலைப் பறிகொடுத்துவிட்ட கோபத்தில்தான் காற்று அந்த நாகையில்

# நஞ்சு

அடிக்கடி புயலாக வீசுகிறது என்பதை உணர்ந்து கொண்ட சாளரத்துக் கொடி, அச்சத்தில் தலையை மீண்டும் வெளியே இழுத்துக் கொண்டது.

அதுவரை வானில் வெகு கர்வத்துடன் நீந்திய முழுமதி, சாளரத்தில் அந்த மங்கையின் முகத்தைக் கண்டு வெட்கிய தால், மேகப் போர்வையை இழுத்து தன்னை மூடிக்



கொண்டது.

நிலவு மறைந்த தால் வெளியே கவிந்த இருளைப் பழித்த அவளது கருங்கூந்தல் காற்றில் மெல்ல அசைந்தது.

ஆனால் அந்த மங்கையின் சித்தத்தை அவள் கரத்திலிருந்த ஓலை முழுவதுமாக ஆக்கிரமித்திருந்ததால் எதையும் ரசிக்கக் கூடிய மனநிலையில் அவள் இல்லை. இத்தனைக்கும் அவள் தந்தை மீண்டும் நாடு திரும்புமாறு அழைத்திருந்த ஓலைதான் அது.

சிறுமியாக இருந்தபோதே அரண்மனையில் அன்னியர் நடமாட்டம் அதிகரித்ததும், அப்போதே தன்னை நண்ப ரான சைவத் துறவியாருடன் தந்தை அவநிதன் அனுப்பி வைத்ததும் அவள் நினைவில் எழுந்தன.

கடாரத்து பாணியில் நான்கு பக்கங்களிலும் பட்டை

**விஷ்வக்சேனன்**



"மல்டி சேனல் கச்சேரியாம்... முன் சீட்டுல இருக்குற பட்டனைத் தட்டினா வேணுங்கிற சங்கீதத்தைக் (ஹெட்போன்ல) கேட்டுக்கலாமாம்!"

— அகில்

யான வளைந்த முகப்புகளுடனும், மூன்று மாடங்களுடனும் சைலேந்திர மன்னனான ஸ்ரீமாற விஜயோத்துங்கவர்மனால் கட்டப் பட்டது அந்த சூளாமணி விஹாரம். வெறும் புத்த விஹாரமாக மட்டுமின்றி கல்விக்கும், பல கலைகளுக்கும் இருப்பிடமாக அது திகழ முற்பட்டதாலும், பல நாட்டு அரச குமாரர் களும், இளவரசிகளும், வீரர்களும் அங்கு வந்து தங்கிப் பயின்றதாலும் மதில்களையொட்டி வெகு தூரத்திற்குப் பயிற்சிக் கூடங்களும், பல கட்டடங்களும் எழுந்து, பிரும்மாண்டமான கடிகையாக வளர்ந்திருந்தது. கட்டடங்கள் முடிந்த இடத்திலிருந்து பெரும் நந்தவன மொன்றும் பலவித புஷ்பச் செடிகளுடனும், கொடிகளுடனும், மூலிகைகளுடனும் இப் போது நிலவொளியில் ஆனந்தமாகக் குளித்த படி நின்றது. பக்கவாட்டில் மரமல்லியும், தேவ தாரு மரங்களும், செண்பக மரங்களும் சற்று இடைவெளி விட்டுப் பாதை அமைத்திருக்க, அந்தப் பாதையின் இறுதியில் அழகிய மாளிகையொன்றும் எழுந்து நின்றது. அந்த மாளிகையில்தான் தங்க வைக்கப்பட்டிருந்தாள் பூங்கோதை.

இவ்வளவு வருடங்களாக எட்டிக்கூடப் பார்க்காமல், துறவியாரின் பாதுகாப்பில் விட்டு வைத்த தந்தை, திடீரென அழைத்திருப்பதும் துறவியார் தெரிவித்திருந்த விவரங்களும் தற் போது நாடு திரும்புவது உசிதமா என்ற சந்தேகத்தையும் கிளப்பி விட்டிருந்தது. போசளர்களும், காகதீயர்களும் தமிழ கத்தைப் பங்கிட்டு ஆதிக்கம் செலுத்திக் கொண்டிருந்த அந்த வேளையில், கொங்கு நாட்டு மன்னனும், தன் தந்தை யுமான அவநிதனுக்கு என்ன உதவி கிட்டியிருக்க முடியும் என்ற சிந்தனை அவள் புலன்களை மறைத்திருந்ததால் அறையின் வாயிலில் வந்து நின்ற சூளா மணி விஹாரத் தலைவரையோ, அவர் "மகளே"என்று அன்பொழுக விடுத்த அழைப்பையோ அவள் கவனிக்க வில்லை.

அவள் சிந்தனையைக் கவனித்த சூளாமணி விஹாரத் தலைவரின் முகத் தில் முறுவலொன்று படர்ந்ததன்றி, அவளை நோக்கி இரண்டடி வைத்த படியே "பூங்கோதை"என்று அவளைப் பெயரிட்டு அழைக்கவும் செய்தார்.

அவள் சிந்தனையினூடே புகுந்த புத்தத் துறவியின் குரல் அவளை சாளரத் திலிருந்து திரும்ப வைத்தது மட்டுமின்றி சட்டென்று வணங்கவும் வைத்தது. அவள் கரத்திலிருந்த ஓலையையும், அவள் முகத்தில் படர்ந்திருந்த குழப்பத் தையும் கவனித்த சூளாமணித் தலைவர், "மகளே, நாடு திரும்புவது குறித்து நீ குழம்பியிருப்பதாகத் தெரிகிறது"என்றார்.

"ஆம் தந்தையே"என்று ஒப்புக் கொண்ட பூங்கோதையின் பதிலிலும் குழப்பம் தொனித் தது.

"மகளே, உன் கல்வியும் பயிற்சிகளும் முற்றுப் பெற்ற இந்த நிலையில், இந்த விஹாரத் தின் விதிகளின்படி, உன் தந்தையின் ஓலையை ஏற்று, உன்னை அனுப்பி வைக்கத்தான் வேண் டும். ஆனால் உன்னை இங்கு கொண்டு வந்து சேர்த்த தஞ்சை சைவத் துறவியாருக்கு ஓலை யனுப்பியும் அவர் இதுவரை வராதது சற்று கவலையளிக்கிறது. உன்னை அழைத்துச் செல்ல நாளையே ரதத்துடன் வீரர்கள் வருவ தாக இப்போது செய்தியும் வந்திருக்கிறது"என்ற விஹாரத் தலைவரின் குரலில் கவலை ஒலித் தது.

பூங்கோதையின் முகத்தில் திகைப்பு தெரிந் தது. "அப்படியானால் நாளையே என்னை இங் கிருந்து..."என்ற அவள் சொற்களும் பாதியில் நின்றன.

"ஆம் மகளே, நாளைக் காலைவரை சைவத் துறவியார் வரவில்லையெனில், உன்னை தகுந்த எந்தத் துணையுடன் அனுப்புவது என்றுதான் சிந்தித்துக் கொண்டிருக்கிறேன்"என்ற புத்தத் துறவியின் குரல் கூட சற்றுத் தழுதழுத்து. துறவிக் கோலத்தில் இருந்தாலும் வளர்த்த

பாசம் எளிதில் விடுவதில்லை என்பதை நிரூபித்தது.

சூளாமணி விஹாரத் தலைவரின் சஞ்சலத்தைப் போக்கவும், கொங்கு நாட்டு இளவரசிக்குத் துணையாகச் செல்லவும் அவர்கள் இருவருமே முற்றிலும் எதிர்பாராத மனிதனொருவன் அதே சமயத்தில் நாகையில் காலடி எடுத்து வைத்துக் கொண்டிருந்தான்.

**நா**கையின் அந்தத் துறைமுகத்தில் ஒரே சமயத்தில் ஐந்நூறு கலங்களுக்கு மேல் நுழையவும், நங்கூரம் பாய்ச்சவும் இயற்கை அனுமதிக்காததால் துறைமுகத்திற்குச் சற்றுத் தள்ளி சீன, அராபிய, கடாரத்துக் கலங்களும், சோழர் கடற்படையின் சில கலங்களும் கடலில் நங்கூரமிட்டு ஆடியபடி நிலவொளியில் குளித்துக் கொண்டிருந்தன. முதல் ஜாமம் முடியும் நேரத்தில் துறைமுகத்தினுள் நுழைய முற்பட்ட சீனத்துக் கலம் ஒன்றின் மேல் தளத்தில் நின்றிருந்தான் அவன். நாகையின் துறைமுகப் பகுதியையும், தூரத்தே தீபங்கள் ஒளிப் புள்ளிகளாகத் தெரிந்த சூளாமணி விஹாரமிருந்த பகுதியையும் வெறித்து நோக்கிக் கொண்டிருந்தான் அந்த சீனத்து வாலிபன். பார்வைக்கு மெலிதாகத் தெரிந்த அவன் தேகம் ஏதோ இரும்பில் வார்க்கப்பட்டது போல உறுதியாக இருந்ததன்றி, திடமாகப் பக்கப் பலகையை பற்றி நின்ற அவன் நீண்ட கரத்தில் தென்பட்ட வாள் வடுக்கள் அவன் சாதாரணப் பயணியோ, அல்லது வணிகனோ அல்ல என்று நிரூபித்தன. வாளின் கூர்மையை விட அதிகக் கூர்மையாக ஜொலித்த அவன் மஞ்சள் விழிகளும், சீனத்து மிங் இனத்து அரசகுமாரர்களைப் போல் முதுகில் கட்டப்பட்டு, தோளுக்கு மேல் எட்டிப் பார்த்தபடியிருந்த வாளின் பிடியும் அவன் வணிகனல்ல என்பதை உறுதி செய்தன. அதைவிட அவன் கழுத்திலாடிய சங்கிலியில் இணைக்கப்பட்டிருந்த பதக்கம், பார்ப்பவர் கவனத்தை சற்று இழுத்து நிற்க வைத்தது. அந்தப் பதக்கத்தில் பொறிக்கப்பட்டிருந்தது ஒரு கடல் நாகம். அதன் பச்சைக் கற்கள் பதிக்கப்பட்ட விழிகள் நாகைத் துறைமுகத்தை நோக்கி விழித்துக் கொண்டிருந்தன.

துறைமுகத்தை அடைத்து நாகையில் அடியெடுத்து வைத்த அந்த வாலிபனையும் அந்த பதக்கத்தையும் கண்ட துறைமுகக் காவலர்கள் முகங்களில் அபரிமிதமான கிலி படர்ந்தது. "யாங்சின், யாங்சின்"என்று தங்களையறியாமல் உச்சரித்தார்கள்! காவலர்களின் கிலியைக் கவனித்த வாலிபன் முகத்தில் மாற்றமேதும் தெரியவில்லை. அவன் அதை எதிர்பார்த்திருந்ததாகவே தோன்றியது. நிதான நடையுடன் காவலர்களை நெருங்கிய அந்த வாலிபன் கரத்தில் சிறு முடிப்பொன்றும் தோன்றியது.



"ஐநூறு ரூபாய் மாமூல் வெட்டுய்யா."
"ஐயா நான் என்னங்க தப்பு செஞ்சேன்?"
"ஏதாவது பண்ணி இருப்பே கட்டுய்யா!"
"ஐயா நான் ஒண்ணுமே பண்ணலைங்க!"
"மாமூலை வெட்டிட்டுப் போய் ஏதாவது பண்ணு. நான் கண்டுக்கலே!"

— தஞ்சாவூர் ராஜபாரதி

"காவலரே, இதில் நூறு பொற்காசுகள் இருக்கின்றன. இதை வைத்துக் கொண்டு எனக்கு ஒரு புரவியைக் கொடுங்கள். நான் சூளாமணி விஹாரம் வரையில் செல்ல வேண்டும்" என்றான் அவன்.

அந்த சீனன் அளித்த முடிப்பைத் தொடவும் அஞ்சிய காவலன் சுற்றுமுற்றும் ஒருமுறை பார்த்த பார்வையில் எச்சரிக்கை தெரிந்தது. சீனத்து வணிகர்கள் சுங்கக் காவலர்களுடன் நடத்திக் கொண்டிருந்த விவாதங்களும், பொதிகளை இறக்கிக் கொண்டிருந்த அடிமைகள் இட்ட கூச்சலுமாக துறைமுகப் பகுதி நிறைந்து கிடப்பதையும், வணிகர்களை அச்சுறுத்திக் கொண்டிருந்த போசள வீரர்களின் கவனம் தனியாக வந்திருக்கும் அந்த சீனன் மீது அதிகம் திரும்பாமலிருப்பதையும் கவனித்த காவலன், அந்த வாலிபனை பக்கவாட்டு வாயிலொன்றின் வழியே துரிதமாக அழைத்துச் சென்றான். காவலர்களின் புரவிகளுக்கு நடுவே நின்றிருந்த தனது புரவியை நடத்திக் கொண்டு வந்தவன், "பிரபு, புரவி இதோ இருக்கிறது. அந்த முடிப்பைத் தாங்களே வைத்துக் கொள்ளுங்கள். இங்குள்ள போசள வீரர்களில் ஒரு சிலர் மட்டுமே தங்களை அறிவார்கள். எனினும் தாங்கள் துரிதமாக சூளாமணி விஹாரத்தை அடைந்து விடுவது உசிதம்"என்றான் படபடப்புடன்.

இத்தனைக்கும் அந்த சீனத்து வாலிபனின் மஞ்சள் முகத்தில் எந்த மாறுதலும் தெரியவில்லை. அவன் மெல்லிய உதடுகளின் மீது 'ப'கர வடிவில் கவிழ்ந்து நீண்டிருந்த மீசை மட்டும் ஒரு புறமாக இழுபட்டு அவன் முறுவலிப்பதை உணர்த்தியது.

அந்தக் காவலனை நோக்கி சீனத்துப் பாணியில் தலையைச் சரித்து நன்றி கூறிவிட்டுப் புரவியிலேறிக் கிளம்பி, சூளாமணி விஹாரத்தை நோக்கிச் சென்ற பாதையில் திரும்பியதும், அரையிருளில் பாதையை மறித்து புரவி வீரர் நால்வர் நிற்பதைக் கண்டான். அந்தக் காவலன் விடுத்த எச்சரிக்கை எத்தனை உண்மையென்பது புரிந்தது.

எதிரில் நின்றிருந்த நால்வருள் தலைவ



# 60%

## பண்டிகைக்கால சிறப்புத் தள்ளுபடி

எங்களது அனைத்து இரகப் பருத்தி, பட்டு, பாலியஸ்டர் மற்றும் பர்னிஷிங்ஸ் துணிகளுக்கும் இச்சலுகை 1 முதல் 15 ஜனவரி '96 வரை அனைத்து கோ–ஆப்டெக்ஸ் விற்பனை நிலையங்களிலும் உண்டு.

DIPR/D/535/95/ FLAME

னாகத் தோன்றியவனிடமிருந்து அதிகாரத்துடன் சொற்கள் உதிர்ந்தன: "யாங்சின், புரவியைத் திருப்பு. உன் சீனத்துத் தந்திரமெதையும் காட்ட முயல வேண்டாம். எங்களுடன் வா!"

சீனத்து வாலிபனின் பதில் திடமாக வந்தது. "மன்னிக்க வேண்டும் வீரர் தலைவரே, நீங்கள் கூறும் யாங்சின் நானல்ல. நான் சூளாமணித் தலைவர் புத்த மித்திரரைச் சந்திக்க சீனத்திலிருந்து இப்பொழுதுதான் வருகிறேன். என்னைச் செல்ல விடுங்கள்."

ஒருவரையொருவர் பார்த்து விழித்த அந்த நான்கு வீரர்களும் வாலிபனின் வார்த்தைகளில் ஒன்றைக்கூட நம்பவில்லை என்பது அவர்கள் முகங்களில் தெரிந்தது. "யாங்சின், நீயாக வர மறுத்தால் உன்னைக் காயப்படுத்தி இழுத்துச் செல்லவும் உத்தரவிருக்கிறது"என்ற வீரர் தலைவன் தன் அகலமான வாளை உருவினான். மற்றவர்களின் வாட்களும் வெளியில் வந்து இருளில் மின்னின.

அப்பொழுதும் அந்த வாலிபனின் முகத்தில் அதிக மாறுதலேதும் தெரியவில்லை.. அவன் குரலும் வெகு நிதானத்துடன் ஒலித்தது. "உங்கள் விருப்பம் அதுதானென்றால் அதை நிறைவேற்ற எந்தத் தடையுமில்லை, வாருங்கள்"என்ற வலிபனின் முதுகில் அதுவரை கட்டப்பட்டிருந்த அந்த சீனத்து வாள் கண்ணிமைக்கும் நேரத்தில் அவன் கரத்தில் தோன்றியது. ஆனால் எதிரில் நின்ற வீரர்கள் வாலிபனை நெருங்கத் தொடங்கும் முன்பாக காற்றில் விர்விர்ரென்ற ஒலி சீனனின் பின்புறமிருந்து எழுந்தது. அடுத்த கணம் வரிசையாக நின்றிருந்த வீரர்கள், மார்பில் பாய்ந்த அம்புகளுடன் நிலத்தில் உருண்டனர்.

சீனன் முகத்தில் முதன் முறையாகத் திகைப்பு தெரிந்தது. ஒரு கரத்தில் சோழ நாட்டுப் போர் வில்லுடனும் மறுகரத்தில் இன்னுமிரு கணைகளுடனும் பக்கவாட்டிலிருந்து ஒருவன் வெளியே வந்தான். வந்தவன் முகத்தில் சோழ நாட்டவன் என்பது எழுதி ஒட்டியிருந்தது. வாலிபனை அணுகி அவனை ஏற இறங்கப் பார்த்தவன் விழிகளிலும் அடுத்து உதிர்ந்த சொற்களிலும் விஷமம் சொட்டியது. "அந்தப் போசளர்கள் உங்களை யாங்சின் என்று எண்ணியதில் தவறேதுமில்லை. அதே மெல்லிய திடமான உருவம், வயதை நிர்ணயிக்க முடியாத மஞ்சள் முகம், சிறிய கூர் விழிகள், கடல் நாகம் பதித்த அதே பதக்கம்..."

சொல்லிக் கொண்டே போனவனை சீனனின் கரம் உயர்ந்து தடுத்தது. "நில்லுங்கள், என்னை வர்ணித்தது போதும். யார் நீங்கள்? இவர்கள் என்னை வழிமறிக்கப் போவது உங்களுக்கு முன்பே தெரியுமா?" சீனனின் கேள்வியில் ஆவல் தெறித்தது.

எதிரில் நின்றவன் பதில் நிதானமாக வந்தது. "நான் சோழ ஒற்றர் படையைச் சேர்ந்தவன். பெயர் விஜயன். நீங்கள் வரும் செய்தி ஒரு திங்களுக்கு முன்பே கிடைத்தது. இவர்களைத் தேடி மற்ற வீரர்கள் வருமுன்பாக நாம் இங்கிருந்து விலகி விடுவது நல்லது, வாருங்கள்"என்றவன் அடுத்து எழுப்பிய குரலுக்குப் புரவி ஒன்றும் ஓடிவந்தது. அடுத்த கணம் இரு புரவிகளும் சூளாமணி விஹாரத்தை நோக்கி விரைந்தன.

விஹாரத்தின் வாயிலை அடைந்ததும் விஜயனைக் கண்டு திறக்கப்பட்ட கதவுகளையும் உள்ளே பிரும்மாண்டமாக எழுந்து நின்ற கட்டடங்களையும், ஸ்தூபிகளையும் கண்டு பிரமித்த சீனனை அணுகினான் விஜயன். "சீனத்து வீரரே, உங்களுக்காகத் தலைவர் காத்துக் கொண்டிருக்கிறார். நாம் பிறகு சந்திப்போம், வருகிறேன்"என்று கூறிவிட்டுத் திரும்பி இருளில் மறைந்தான்.

புரவியை உள்ளே செலுத்திய சீனன், விஹாரத்தின் படிகளில் வந்து இறங்கிய பொழுது, சூளாமணி விஹாரத் தலைவர் வாயிலிலே நின்றிருந்தார். பக்கங்களில் எரிந்த பந்தங்களின் ஒளியில் அந்த சீனனைக் கவனித்த அவரது முகத்தில் ஒரு வியப்பு கண நேரமே தோன்றி மறைந்தது. அடுத்து அதில் ஒரு சாந்தியும் படர்ந்தது. படிகளில் ஏறி சூளாமணித் தலைவரின் பாதம்வரை தலையைத் தாழ்த்தி வணங்கிய சீனனை தலையைத் தொட்டு ஆசியளித்த புத்தமித்திரரின் குரலிலும் பெரும் சாந்தி ஒலித்தது. "யுவான், உள்ளே வா. நல்ல சமயத்தில்தான் நீ வந்திருக்கிறாய்"என்றபடியே அவன் தோளைப் பற்றி அழைத்துச் சென்றார். உள்ளே விரிந்த பெரும் மண்டபத்தையும் பிரும்மாண்டமான புத்தர் சிலையையும் கண்டு பிரமித்த யுவானை அமரப் பணித்த சூளாமணித் தலைவர் ஏதோ சிந்தனையில் ஆழ்ந்தபடியே மெல்ல உலவினார்.

"யுவான், உன் ஓலை எனக்குக் கிடைத்து ஒரு திங்களாகிறது. உன் தந்தை யாங்சின்னைப் பற்றி நான் அறிய எடுத்துக் கொண்ட முயற்சிகள் ஏதும் பயனளிக்கவில்லை. அவர் போசளர்



"வாங்கின கடனைத் திருப்பிக் கேட்டு நீங்க என் வீட்டுக்கு நடையா நடக்கறது இன்னியோட முடிவுக்கு வந்துடும்!"

"அப்ப பணத்தை நாளைக்குத் திருப்பறீங்களா?"

"ஊஹூம். உங்க தெருவுக்கே குடி வர்றேன்!"

— மயிலாடுதுறை ஆர். ஜெயந்தி



கிறிஸ்துமஸ் சீசனையொட்டி, 'மிராகிள் ஆன் தர்டிபோர்த் ஸ்ட்ரீட்' என்றொரு ஆங்கிலப் படம் வெளியிடப்படும். 'சாண்டா கிளாஸ்' (கிறிஸ்துமஸ் தாத்தா) வேஷம் போடுபவருக்கும் குழந்தைகளுக்கும் இடையேயான உறவு பற்றியது. சாண்டாவாக நடிப்பவர் ரிச்சர்ட் அட்டன்பரோ.

— அ. குமார்

---

களால் சிறை செய்யப்பட்டார் என்பதைத் தவிர வேறு ஒன்றும் தெரியவில்லை. நீயே நேரில் சென்று அறிந்து வர சந்தர்ப்பம் ஒன்று இப்போது கிடைத்திருக்கிறது. ஆனால்..." சிந்தனையுடன் உதிர்ந்த புத்தமித்திரரின் சொற்கள் பாதியில் நின்றன.

"ஆனால் என்ன தந்தையே?"- யுவானின் குரலில் சந்தேகம் ஒலித்தது.

"ஆனால் அதில் அபாயங்கள் அதிகம். அதிலும் நீ அச்சாக உன் தந்தையைப் போலவே இருப்பது பெரும் அபாயம்!"

"அபாயம் வீரர்களுக்கு விருந்தல்லவா தந்தையே?"என்றான் யுவான்.

சுளீரென்று சாட்டையால் அடிக்கப்பட்டவர் போல் நிமிர்ந்த துறவியின் விழிகளில் வியப்பு வழிந்தது. "இதே வார்த்தைகளைத் தான் உன் தந்தை அடிக்கடி கூறுவார்" என்றவர், "யுவான், கவனமாகக் கேள். தற்போது போசளர் வசத்திலிருக்கும் கொங்கு நாட்டின் இளவரசி இங்கிருக்கிறாள். அவள் தந்தையின் ஓலைப்படி நாளைக் காலை அவள் பயணப்பட வேண்டும். நீ அவளுக்குத் துணையாகச் செல். உன் தந்தையைப் பற்றி அறிய கொங்கு நாட்டில் வாய்ப்புகள் கிடைக்கலாம்" என்றார்.

துறவியின் ஏற்பாட்டுக்கு ஒப்புக் கொண்ட யுவான், மறுநாள் உதயநேரத்திற்கு முன்னதாகவே பயணத்திற்குத் தயாராக நின்றிருந்தான். இளவரசிக்கு யுவானை அறிமுகப்படுத்திய சூளாமணித் தலைவர் பூங்கோதையுடன் இரு தோழிகளையும் ரதத்தில் ஏற்றி யுவான் ரதத்தைத் செலுத்திவர, சுற்றிலும் வீரர் இருபதின்மர் சூழ்ந்து வர அனுப்பி வைத்தார். ரதம் விஹாரத்தைவிட்டு வெளியேறி வெகுதூரம் சென்றபின்பும் அங்கேயே நின்றிருந்த சூளாமணி தலைவரின் மனத்தில் ஏனோ இனமறியாத கலக்கம் தோன்றியபடியே இருந்தது. அவர் கலக்கத்தை இன்னும் அதிகப்படுத்த சரியாக ஒரு ஜாமம் கழித்து ஒரு சம்பவம் நிகழ்ந்தது.

ஆஜானுபாகுவான சிவந்த மேனியிலும் அகன்ற நெற்றியிலும் நீறு பனிச்சிட, நீண்ட சடையுடனும் வெளேரென்ற தாடியுடனும் விஹாரத்தினுள் அதிவேகமாகப் பிரவேசித்தார் தஞ்சையின் சைவத் துறவியார். பணியாட்களையும் காவலர்களையும் வெகு அலட்சியமாக ஒதுக்கிவிட்டு, விறுவிறுவென்று படிகளில் ஏறி, சூளாமணித் தலைவரின் அறைக்குள் நுழைந்தவர், உக்கிரமான பார்வையுடன் அவர் எதிரில் நின்றார்.

யாருடைய வருகைக்காகவும் அனுமதிக்காகவும் முன்தினம் வரை சூளாமணித் தலைவர் காத்துக் கிடந்தாரோ, அந்த சைவத் துறவியார் இளவரசி பயணப்பட்ட ஒரு ஜாமம் கழித்திடும் பிரவேசமாக உள்ளே நுழைந்ததையும், அவர் பெரு விழிகள் பொழிந்த உக்கிரத்தையும் கண்ட விஹாரத் தலைவர் வரவேற்கவும் வார்த்தைகள் வராமல் திகைத்தார்.

குற்றம் புரிந்துவிட்ட ஒற்றனை விசாரிக்கும் மன்னனின் உக்கிரத் தொனி சைவத் துறவியாரின் குரலில் ஒலித்தது. "இளவரசியை அனுப்பி விட்டீரா?"என்று.

பதிலுக்கு அருகிலிருந்த குழலிலிருந்து கொங்கு மன்னனின் ஓலையை எடுத்து நீட்டிய சூளாமணித் தலைவரின் குரல் சற்றுத் தடுமாறியே ஒலித்தது. "இதோ கொங்கு மன்னன் அவந்தனின் ஓலை. உடன் இருபது வீரர்களும் ரதத்துடன் வந்திருந்தார்கள். ஒரு ஜாமத்திற்கு முன்புதான் அனுப்பி வைத்தேன்"என்றார் சூளாமணித் தலைவர்.

அடுத்த கணம் அந்த ஓலை அவர் கரத்திலிருந்து பறிக்கப்பட்டுக் கசங்கி, அறையின் மூலையை நோக்கிப் பறந்தது. கூடவே சைவத் துறவியாரிடமிருந்து உதிர்ந்த சொற்கள் சூளாமணித் தலைவரின் தலையில் பெரும் இடிகளாக இறங்கின.

"இந்த ஓலை போலியென்பது புரியவில்லையோ உமக்கு? உடன் வந்த வீரர்கள் போசளத் தண்ட நாயகன் சிங்கணன் அனுப்பி வைத்தவர்கள் என்பது தெரியுமா உமக்கு?" -அதி உக்கிரத்துடன் இரைந்தார் சைவத் துறவியார்.

(தொடரும்)




1996 ஜனவரி 7
யுவ மார்கழி 23
மலர் : 54
இதழ் : 23

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




## பெரும்பான்மை பலவீனம்!

புத்தாண்டு பிறக்கவிருக்கும் சமயத்தில், கடந்த ஆண்டின் கசப்பான நிகழ்வுகளை ஒதுக்கி விட்டு, நம்பிக்கையுடன் அடுத்த ஆண்டை எதிர்கொள்ளத்தான் ஆசைப்படுகிறோம்.

ஆனால் அந்த ஆசை நிராசையாகும் வண்ணமே 1995-இன் கடைசி சில நாட்கள் அமைந்து விட்டன.

ஹரியானா மாநிலம் மண்டி டப்வாலியில், டி.ஏ.வி. பள்ளியின் விழா நிகழ்ச்சியில் தீ விபத்து! விழா நடந்த ராஜீவ் திருமண மண்டப அரங்கைக் கட்டுவதிலும் மின் ஒயரிங் செய்வதிலும் ஏராளமான விதி மீறல்கள் நடந்துள்ளது தெரியவந்திருக்கிறது.

இந்த அலட்சிய அணுகுமுறை காரணமாக, நூற்றுக்கணக்கான மொட்டுகள் கருகி நாச மாகியுள்ளன. இழப்பு அந்தந்த குடும்பங்களுக்கு மட்டுமல்ல -; நாட்டுக்கே பேரிழப்பு!

அடுத்த அதிர்ச்சியாக சென்னை விமான நிலையத்தில் தரையிறங்கி, சர்வசாதாரணமாக 'ஹலோ' சொல்லி விட்டுப் போன ஏ.என் - 26 விமானம். ரஷ்யாவிலிருந்து வந்த இந்த 'சாது' விமானம், மேற்கு வங்கம் புருலியா மாவட்டத்தில் ஆயுதங்களை பாராசூட் மூலம் தரையிறக்க, அந்த பயங்கரம் கூட கிராமவாசிகளின் யதேச்சையான கண்டுபிடிப்பாகத்தான் வெளிச்சத்துக்கு வந்திருக்கிறது!




தொடர்ந்து பம்பாயில் விமானம் வளைத்துப் பிடிக்கப்பட்டு, அதன் குழுவினர் விசாரிக்கப் படுவதும், சென்னை விமான நிலைய அதிகாரி பணி நீக்கம் செய்யப்படுவதும், உள்நாட்டு விமானப் போக்குவரத்துக் கண்காணிப்புத் துறையை ஆராய கமிஷன் அமைக்கப்படுவதும், தூங்கிக் கொண்டிருந்த நமது உளவுத் துறையின் அஜாக்கிரதைக்கு ஈடுசெய்ய முடியாது!

ஒரு சாதாரண குட்டி விமானத்தின் ஊடுருவலையே கண்டுபிடிக்க முடியாத போது, நவீன தொழில்நுட்பத்துடனான போர் விமானங்கள் வருவதை நாம் எப்படிக் கண்டுபிடிப்போம்?

தேசிய அளவிலான சோகமும் அதிர்ச்சியும் ஒரு பக்கம் என்றால், தமிழ்நாட்டிலோ ஒட்டு மொத்தமான சட்ட - ஒழுங்கு சீர்குலைவு!

தினந்தோறும் காலையில் செய்தித்தாளைக் கையில் எடுக்கும்போதே 'திருநெல்வேலியில் எத்தனை கொலைகளோ!...' என்று நெஞ்சு நடுங்குகிறது.

அது போதாதென்று வீதிகளிலும் நகைக் கடைகளிலும் கொள்ளைகள். ஒரு நகைக் கடையின் கான்கிரீட் கூரையையே பெயர்த்து, திருடர்கள் உள்ளே இறங்கி, ஒரு குந்துமணி மீதி வைக்காமல் சுருட்டிக் கொண்டு போயிருக்கிறார்கள்.

நகரின் மையக் குடியிருப்புப் பகுதியான மாம்பலத்திலுள்ள அகஸ்தீசுவரர் கோயிலில் ஐந்து பொற்கலசங்கள் இரவோடு இரவாக அறுத்து எடுக்கப்பட்டுள்ளன. பெசன்ட் நகர் (இதுவும் நடமாட்டம் நிறைந்த பகுதி) வேளாங்கன்னி ஆலயத்தில் கன்னி மேரி சிலை மீதிருந்த ஐம்பது சவரன் நகைகள் திருட்டுப் போயிருக்கின்றன.

காவல் துறை ஜீப்பைப் பயன்படுத்தி, ஒரு பஸ்ஸை வழிமறித்து, அதிலிருந்த வியாபாரி யிடமிருந்து நான்கு லட்சம் ரூபாய் கொள்ளையடிக்கப்பட்டுள்ளது.




தமிழ்நாட்டில் நடக்கும் இத்தகைய துணிகரமான கொள்ளைகளைச் சாதாரண திருட்டு புரட்டுகளென ஒதுக்கிவிட முடியாது. அவற்றின் பின்னணியில், பொருளாதாரத் தேவையால் உந்தப்படும் ஒரு பெரிய, அபாயகரமான இயக்கமே இருப்பதாக நம்புதற்கு இடமுள்ளது.

கட்டடப் பணிகளில் விதிகள் மீற அனுமதிக்கப்படுவது ஏன்?

உளவுத் துறையின் உறக்கத்துக்குக் காரணம் என்ன?

இனக் கலவரங்களைக் கட்டுப்படுத்த அரசால் ஏன் இயலவில்லை....?

தமிழகக் காவல் துறையின் செயல்பாடு வரலாறு காணாத வகையில் தரம் தாழ்ந்துள்ளது எதனால்...?

இந்த எல்லா கேள்விகளுக்குமே விடை ஒன்றுதான். மத்தியிலும் சரி, தமிழகத்திலும் சரி, அரசாங்கம் தனது பெரும்பான்மை பலத்தையே பெரிய பலமாகக் கருதி மெத்தனமாகி விட்டது.

ஆனால் ஒரு சிறந்த ஆட்சிக்கு மெய்யான பலம் என்பது, அதன் நேர்மை, நாணயம், மனப்பூர்வமான ஈடுபாடு ஆகியவற்றால் விளையும் ஆன்மபலம்தான்.

இத்தகைய ஆன்மபலம் இல்லாத அரசாங்கம், உளுத்துப் போன வேலிக் கம்பங்களைப் போன்றதுதான். வெளித் தோற்றத்துக்குப் பாதுகாப்புமிக்கதாக, வலுவானதாக அது தோன்றும். ஆனால் இலேசாக ஒரு தட்டுத் தட்டினாலே விழுந்து விடும். இத்தகைய வேலிகளினால் நாட்டுக்கு என்ன பாதுகாப்பு அளித்துவிட முடியும்!

செல்லரித்துப் புரையோடிய வேலிகளைப் போன்ற வலுவிழந்த அரசுகளால் நாம் ஆளப்படுவது இந்த ஆண்டின் மிகப் பெரிய சோகம்.

தேர்தல் நெருங்க நெருங்க, சிந்திக்க வேண்டிய கட்டாயத்தில் இருக்கிறோம்!

## குமுறல்

●● மாம்பலம் போஸ்டல் காலனி பஸ் ஸ்டாப்பில் நின்று கொண்டிருந்தபோது என் தலை மேல் 'பொத்'தென்று ஒரு பாரம் இறங்கியது. அலறி அடித்துக் கொண்டு திரும்பிப் பார்த்தால் எனக்கு வழங்கிய ஆசிக்காக யானை ஒன்று தும்பிக்கை ஏந்தி நின்றது! காசு தந்தால் ஒழிய அது என்னை




விடுவதாயில்லை. பாகன் அதை உசுப்பிவிட தும்பிக்கையால் என் பாண்ட் ஷர்ட் பாக்கெட்டுகளை மேய்ந்தது. வேறு வழியின்றி என்னிடமிருந்த இரண்டு ரூபாய் நாணயத்தைப் பறிகொடுத்துவிட்டு நடந்தேன். இந்த நூதன கொள்ளையை அதிகாரிகள் தடுக்க முடியாதா?

சென்னை-33. ஆர். ரகோத்தமன்.

●● ஈரோட்டில் 29.11.95 அன்று எம்.ஜி.ஆர். அ.இ.அ.தி.மு.க.வினர் (திருநாவுக்கரசு கட்சி), வேங்கை ராஜேந்திரன் தலைமையில் இலங்கைத் தமிழர்களுக்காக இலவசமாகப் பொருள்கள் திரட்டினர். இது பெருமைப்படக்கூடிய விஷயமே. ஆனால் இந்த அணியினர் பொருள்தர முடியாத அல்லது விரும்பாத கடைகளில் அத்து மீறி நுழைந்து, மிரட்டி, பொருள்களைப் பெற்றுச் சென்றது வருத்தமளித்தது. பட்டப்பகலில் இப்படி ஒரு அராஜகமா? கொடுப்பதும் கொடுக்காததும் அவரவர் சொந்த விருப்பம் அல்லவா! அன்பால் பெறுவதே, ஒரு கட்சிக்கு அழகு என்று தெரிய வேண்டாமா?

பள்ளிபாளையம், கே.ஆர்.பி.

●● இலால்குடி அரசு மருத்துவ மனையில் மருந்துகளே இல்லை என்று சொல்லும்படியாக தேள்கடிக்குச் சென்றால் கூட பெரிய ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போங்கள் என்கிறார்கள். 21.11.95ல் என்னைப் பாம்பு கடித்துவிட, போனால் மேற்படி வசனம்தான் பதில். முப்பது ரூபாய் பணத்தைத் தள்ளியதும் சிகிச்சை விறுவிறுப்பாக நடக்கிறது. இரண்டு எம்.எல்.ஏக்கள் உள்ள தொகுதியில் அதிலும் ஒருவர் டாக்டர் எம்.எல்.ஏ.ஆக உள்ள போது, மருத்துவமனையில் எதற்கெடுத்தாலும் லஞ்சம் என்றால் ஏழைகள் எங்கே போவார்கள்?

லால்குடி, ஆங்கரை பைரவி

●● தமிழ்நாடு வீட்டுவசதி வாரியம் கட்டிய அடுக்குமாடி வீடுகளை நாங்கள் 528 பேர், 1985ம் ஆண்டு தவணைமுறையிலோ மொத்தமாகவோ வாங்கினோம். 1994 செப்டம்பரில் திடீரென்று ஒரு தாக்கீது கிடைக்கப்பெற்றோம். "வீட்டின் விலை மற்றும் நிலத்தின் விலை 1988-89ல் உயர்த்தியுள்ளோம்; உயர்த்திய விலையையும் 88-89லிருந்து ஆகஸ்டு 94வரை வட்டியும் சேர்த்துக் கட்டினால்தான் விற்பனை பத்திரம் தரமுடியும்"என்று தாக்கீது. அரசாங்கமே இப்படி குற்றம் புரிந்தால் பொதுமக்கள் யாரிடம் போய் முறையிடுவது?

கோவை. கே. சுப்பிரமணியன்.

# மூன்றாவது கண் — 22

**“A**ny stick is good to beat a snake.”

எனக்கு மிகவும் பிடித்த, என் துறை அதிகாரிகளுக்கு நான் அடிக்கடி நினைவுபடுத்தும் பழமொழி இது. ஆனால், அடிப்பதற்கு முன்பு அது பாம்புதான் என்று நமக்கு நிச்சயப்படுத்திக் கொள்ள வேண்டும். வெறும் வாயில்லாப் பூச்சியை அடிப்பதில் பலனில்லை. இதையும் நான் வலியுறுத்துவேன்.

ஒரு சின்ன க்ளூ-தடயம்- சாட்சி போதும். எப்பேர்ப்பட்ட சாமர்த்தியமுள்ள குற்றவாளியையும் ஒன்றுமில்லாமல் செய்துவிட முடியும். ஆனால் அதைத் தேடுகிற முயற்சியில் சோர்ந்து விடாதிருக்க வேண்டும் என்பதுதான் மிக முக்கியம். விடாமுயற்சி என்று சொல்லுவார்கள். காவல் துறையைச் சேர்ந்தவர்களுக்கு வெகு முக்கியம் இது.



அப்போது நான் சி.பி.ஐ.யின் சென்னைப் பிரிவில் எஸ்.பி. ஆக இருந்தேன். ஒரு மிலிட்டரி ஆபீசர் மேல் ஊழல் புகார் வந்தது. பரங்கிமலை மிலிட்டரி ஹெட்குவாட்டர்ஸில் ஸ்டோர் பிரிவில் அதிகாரியாக இருந்தவர் அவர். ராணுவத்தில் ‘மேஜர்’ அந்தஸ்து பெற்றவர்.

நிறைய ஊழல் செய்கிறார் என்பது தவிர அவரைப் பற்றி எங்களுக்கு வந்த இன்னொரு தகவல் – அவர் மிகவும் முரட்டுத்தனமான, நெருங்கவே முடியாதபடி தோற்றம் தருபவராக இருப் பவர் என்பது.

தமது வெளித் தோற்றத்தையே தம் ‘செயல்’களுக்கு ஒரு பாதுகாப்புக் கவசமாகக் கொண்டு செயல்பட்டு வந்திருக்கிறார்!

மிலிட்டரி கேன்டீனுக்குத் தேவையான பொருள்கள் சப்ளை செய்வதற்கு நிறைய டெண்டர் விட்டு, காண்ட்ராக்டுகள் ஏற்பாடு செய்வார்கள். அந்தகைய காண்ட்ராக்டுகளில் இவர் ஏராள ஊழல் செய்திருப்பதாகச் சொன்னார்கள். ஆனால் எதற்கும் சாட்சியங்கள் இல்லை.

**சி.வி. நரசிம்மன்**

காண்ட்ராக்டர்கள் உட்பட யாருமே அவர் மீது புகார் சொல்லத் தயாராக இல்லை. காரணம் பயம். அவரைப் பகைத்துக் கொண்டால், தொழிலில் கணிசமான நஷ்டம் ஏற்படும் என்கிற காரணம் ஒருபுறம் இருக்க, ராணுவத்தில் மிக உயர்ந்த அதிகாரிகள் முதல் அரசியல்வாதிகள் வரைக்கும் அவருக்கு செல்வாக்கு இருந்தது! சுருக்கமாகச் சொல்வதென்றால் அவரை யாரும் ‘அசைக்க முடியாது.’

சரி, காண்ட்ராக்ட் விஷயத்தில் அவரை மடக்க முடியாது என்று தெரிந்ததும் வேறென்ன செய்யலாம் என்று யோசித்தேன். தவறு செய்கிறவர்கள் ஒரே ஒரு விஷயத்தில் மட்டும்தானா அதைத் தொடர்ந்து செய்வார்கள்? தவறு செய்கிற மனப்பான்மை இருந்து விட்டால் எதிலும் ஊழல் நடக்க சாத்தியம்தானே?

அந்த விதத்தில் யோசித்துக் கொண்டிருந்த போது வேறொரு விஷயம் சிக்கியது.

மிலிட்டரி கான்டீனில், ஸ்டோர்களில் உபயோகிக்க முடியாத பொருட்களை அவ்வப்போது ‘டிஸ்போஸ்’ செய்து விடுவார்கள். சற்று தரம் குறைந்த பொருள்; சரிசெய்து உபயோகிக்கக்கூடும் என்றால் ஏலம் விடுவார்கள்.

இந்த ஏலம் விடுவதிலும் தில்லு முல்லு நடப்பதற்கு வாய்ப்பு உண்டு. ஊழல் நடத்தை கொண்ட ஆபீசர்கள் சில நல்ல பொருள்களையும் ஏலம் விட்டதாக பொய் ரிகார்டுகள் தயாரித்து அப் பொருள்களை தங்கள் சொந்த உபயோகத்துக்கு எடுத்துக் கொள்வார்கள். இந்த ஆபீசரும் அம்மாதிரி செய்பவர் என்று பரவலாகப் பேசப்பட்டு வந்தது.

அந்த வகையில், அவர் ‘உபயோகிக்க லாயக்கற்ற’ பொருட்களை ‘டிஸ்

ஷண்போகாத விடாமுயற்சிகள்...

போஸ்' செய்த பட்டியலைப் பார்த்து வந்த பொழுது, அதில் ஒரு ரேடியோ இருந்ததைக் கவனித்தேன்.

அதே சமயம், அந்த ஆபீசரின் வீட்டு வேலையாளிடம் நடத்திய ஒரு விசாரணையில், அவர் வீட்டில் புதிதாக ஒரு ரேடியோ சமீபத்தில் வாங்கி இருப்பதாகச் சொல்லியிருந்தது நினைவுக்கு வந்தது.

எனக்கு எங்கோ இடித்தது. பிடிமானம் கிடைத்து விடும் போல் தோன்றியது.

அந்தக் காலத்தில் ரேடியோவுக்கு லைசென்ஸ் வாங்க வேண்டும். தபால் துறையில் பதிவு செய்து, அதற்கான லைசென்ஸ் தருவார்கள்.



உடனே தபால்-தந்தித் துறையைத் தொடர்பு கொண்டு, குறிப்பிட்ட ஆர்மி ஆபீசர் சமீபத்தில் ரேடியோவுக்கான லைசென்ஸ் வாங்கி இருக்கிறாரா என்று விசாரித்தோம். அப்படி ஏதும் இல்லை என்று பதில் வந்தது!

உடனே நான் தபால்-தந்தி துறை இயக்குநருடன் தொடர்பு கொண்டேன். அவர் ஒத்துழைப்புடன் எங்களுக்குக் கிடைத்த தகவலை மாஜிஸ்திரேட் முன் வாக்குமூலமாகக் கொடுத்து, அந்த மிலிட்டரி ஆபீசரின் வீட்டைச் சோதனை செய்வதற்கான வாரண்ட்டைப் பெற்றுக் கொண்டோம். லைசென்ஸ் இல்லாமல் ரேடியோ வைத்திருப்பது அப்போது அமலில் இருந்த சட்டப்படி குற்றமாதலால் இந்த வாரண்ட்டை நாங்கள் பெற முடிந்தது. உடனே சென்று அந்த ஆபீசரின் வீட்டைச் சோதனை செய்து ரேடியோவைக் கைப்பற்றினோம். அதில் பொறிக்கப்பட்டிருந்த குறிப்புகளையும் எண்களையும் ஒப்பிட்டுப் பார்த்ததில் –

'டிஸ்போஸ்' செய்யப்பட்டதாக ஆர்மி ரெக்கார்டில் பதிவாகி இருந்த அதே ரேடியோ! நிறம், பதிவு எண், மாடல் என்று அச்சு அசல் அதேதான்!

மாட்டிக் கொண்டார்!

அவர் சத்தியமாக இப்படி ஒரு க்ளூ எங்களுக்குக் கிடைக்கும் என்று எதிர்பார்த்திருக்க மாட்டார்! 'இதைப் பெரிதுபடுத்தி என்னை மாட்டி விடாதீர்கள்!' என்று என்னிடம் மிகவும் கெஞ்சிப் பார்த்தார். ஆனால் பெயர் போன ஓர் ஊழல் ஆபீசருக்கு உரிய தண்டனை வாங்கித் தர சி.பி.ஐ. எப்போதும் தயங்கியதில்லை.

அவரது முழு சாமர்த்தியத்தைப் பயன்படுத்தி, டிஃபென்ஸ் மினிஸ்டர் வரை சிபாரிசு பிடித்து, சி.பி.ஐ. இயக்குநர் கோலியிடம் சொல்லச் சொல்லி, இதை 'கண்டு கொள்ளாமல்' விட முயற்சி செய்தும் பார்த்தார்.

பயன் இல்லை!

அந்த அதிகாரி, ஒரு முறையான என்கொயரிக்குப் பின் கடுமையாக தண்டிக்கப்பட்டார்.

புலனாய்வில், எந்த நிலையிலும் சோர்ந்து விடாமல் முயற்சித்துக் கொண்டே இருந்தால் வெற்றி நிச்சயம் என்பதற்கு இன்னொரு உதாரணம் கூடச் சொல்வேன்.

மதுரைக்குப் பக்கத்தில் ஓரிடத்தில் ஓர் ஏமாற்றுப் பேர்வழி மீதான ஒரு வழக்கு வந்தது. அந்த ஆள் ஒரு பெரிய தொழிலதிபர். பணக்காரர். அவர் மீது ஒரு சீட்டிங் கேஸ் வந்த போது, அந்த வழக்கை விசாரித்த உள்ளூர் இன்ஸ்பெக்டரை அவர் 'சரிக்கட்டி' விட்டார் என்று தெரிந்தது. அதாவது, அந்த இன்ஸ்பெக்டருக்கு லஞ்சம் கொடுத்து வழக்கை, 'ஆதாரங்கள் இல்லாததால் தொடர முடியவில்லை' என்று எழுதி, ஃபைலை மூடி விடச் செய்து விட்டார். அதோடு மட்டுமின்றி, பிற்காலத்திலும் அந்த வழக்கை வேறு யாரும் எடுத்துப் புலனாய்வு செய்ய முடியாதபடி செய்து விட்டதாகத் தெரிய வந்தது.

இன்ஸ்பெக்டர் லஞ்சம் வாங்கியதாகத் தெரிந்ததுமே, கேஸ் விஜிலன்ஸுக்கு வந்து விட்டது. நான் அப்போது சென்னையில் லஞ்ச ஒழிப்புத் துறை இயக்குநராக இருந்தேன்.

வழக்கு என்னிடம் வந்ததும் ஒரு புலனாய்வு அதிகாரியை மதுரைக்கு அனுப்பி, விசாரித்து வரச் சொன்னேன்.

மதுரையில் விசாரித்ததில், அந்த இன்ஸ்பெக்டருக்கும் தொழிலதிபருக்கும் உள்ள தொடர்பு, லஞ்சம் பெறப்பட்டிருப்பது, கேஸ்

# கங்கை வழங்கும் புதிய புத்தகங்கள்

## சமயம்

விநாயகர் அகவல் (உரையுடன்)
உரையாசிரியர் புலவர். வே. பிரபாகரன் 03.00
கந்தர் சஷ்டி கவசம் (உரையுடன்)
"பாணன்" 03.00
தமிழர் பண்டிகைகள் "பாணன்" 15.00
உபநிஷதக் கருத்துக்களும் நீதிமொழிகளும்
தொகுத்தவர்: வானதி திருநாவுக்கரசு 07.00
மகாத்மாவின் மணிமொழிகள் " 09.00
சான்றோர் சிந்தனைகள் " 20.00
ராமகிருஷ்ணர் வாழ்வும் வாக்கும் " 10.00
விவேகானந்தர் வாழ்வும் வாக்கும் " 10.00
கீதை காட்டும் லட்சிய மனிதன்
டாக்டர் என். ஸ்ரீதரன் 20.00
ஸ்ரீ ராகவேந்திர சுவாமிகள்
வாழ்க்கை விளக்கம் " 12.00
தத்துவமும் பக்தியும் அ.ச. ஞானசம்பந்தன் 25.00
மந்திரங்கள் என்றால் என்ன? " 32.00
ஸ்ரீ சங்கர வம்சம் (சிருங்கேரி ஸ்ரீ சாரதா
பீடம்) கே.எஸ். குளத்து அய்யர் 12.00
ஆன்றோர் அருள்மொழி
டாக்டர் க.க. இராமலிங்கம் 07.00
காஞ்சிப் பெரியவரின்
கனிமொழிகள் " 12.00
சமய ஆன்மீக தத்துவ
முத்துக்கள் " 09.00
பாகவதம் கௌசிகன் 45.00
பிரதோஷமும் சிவ வழிபாடும் " 12.00
கடவுளைக் கண்ட மகான்களின் கதை
எஸ். லெட்சுமி சுப்பிரமணியம் 47.00
ஸ்ரீ வேங்கடேச ஸுப்ரபாதம் தமிழ்ப்
பாடல்கள் ஸ்ரீ ஆண்டாள் திருப்பாவை
- கண்ணதாசன் உரை 08.00
நபிமொழி நானூறு
மு. சாயபு மரைக்காயர் 08.00
தினசரி பாராயணத்திற்கான
சுந்தரகாண்டம் - யாக்ஞவல்கியப்ரியா 32.00
ஆன்மீக அடிச்சுவட்டில் " 20.00
திருவாசக விருந்து திரு சம்பந்தம் 85.00
கவலைப்படாதே! அ. ஸ்ரீராமுலு (பகவத்
கீதையை அடிப்படையாகக் கொண்டது) 15.00
பொன்னான நிகழ்காலம்
- சுவாமி சச்சிதானந்தா 85.00

## கட்டுரைகள்

இன்றும் இனியும்
அ.ச. ஞானசம்பந்தன் 40.00
பாரதியும் பாரதிதாசனும் " 25.00
திரு. வி. க. " 35.00
தம்பியர் இருவர் " 25.00
நல்ல தமிழ் அறிவோம்
டாக்டர் தி. முத்துகண்ணப்பன் 25.00
இன்னொரு கிரகத்திற்கு
பி.சி. கணேசன் 50.00

தேர்வுக்கான பொது அறிவுக்
கட்டுரைகள் - ரேவதி ரவீந்திரன் 20.00
மன வலிமையின் மூலம்
நோய்களைக் குணப்படுத்தலாம் " 12.00
வேலை பார்க்கும் பெண்களின்
பிரச்சினைகள் " 12.00
ஏகநாதரின் மனைச் சொற்பொழிவும்
மனித வாழ்க்கையும் " 10.00
இவர்கள் சாதனை
புரிந்தது எப்படி? " 14.00
பேசுங்கள் வெற்றி பெறுங்கள் " 12.00
வெற்றிக்கு மாற்றம் தேவை " 14.00
மாணவர்களுக்கான கட்டுரைகளும்
பயிற்சி முறையும் " 14.00
வாழ்க்கை உங்கள் வசப்படும் " 22.00
உங்கள் வாழ்க்கையை உயர்த்திக்
கொள்வது எப்படி? 22.00
மன இறுக்கத்தை நீக்கி மகிழ்வுடன்
வாழ்வது எப்படி? 16.00
பொது அறிவுக் களஞ்சியம் - திரு சம்பந்தம் 23.00
நேருஜி சில நினைவுகள் " 10.00
ஞாபக சக்தியை பெருக்கிக்
கொள்வது எப்படி? " 18.00
வாழ்வில் வசந்தம்
டாக்டர் என். ஸ்ரீதரன் 16.00
இனியது இனியது வாழ்க்கை " 24.00
வாழ்க்கைப் பண்புகள் " 24.00
உரை அலைகள் " 20.00
ஹிந்தியில் பேசுவது எப்படி? " 30.00
தமிழ் எழுத்துக்கள் தரும்
தகவல்கள் " 22.00
கிரிக்கெட் விநோதங்கள் பாணன் 07.00
சினிமா சந்தையில் 30 ஆண்டுகள்
கண்ணதாசன் 10.00
தமிழ்த் திரைப்பட வரலாறு
முக்தாவி. சீனிவாசன் 100.00
ஜெயமுண்டு பயமில்லை
க. லட்சுமி நாராயணன் 25.00
உலகப்பழமொழிகள் " 70.00
பெருமைக்குரிய பெண்மணிகள்
விஜயலட்சுமி மாசிலாமணி 18.00
கவிஞர் கண்ணதாசனிடம் கண்டதும்
கேட்டதும் இராம. கண்ணப்பன் 30.00
கண்ணதாசனின் அர்த்தமுள்ள
அனுபவங்கள் " 17.00
அர்த்தமுள்ள வாழ்க்கை
ச. இன்னாசி முத்து 35.00
மக்கள் வாழ்வில் மரங்கள்
வி.வி.வி. ஆனந்தம் 85.00
வாழ்க்கைத் துணை
புலவர் கோ. இளையபெருமாள் 05.00
கங்கையின் கதை - சரஸ்வதி ராம்நாத் 28.00
காவேரியின் கதை " 30.00



Dr.C.K. மாணிக்கவாசகம்

# புற்றுநோயா? ஆஸ்த்மாவா? சர்க்கரை வியாதியா?

## போன்றவைகளிலிருந்து விடுபட விரும்புகிறீர்களா?



Dr. M. சபாபதி

மனிதர்களுக்கு ஏற்படும் அனைத்து நோய், வலி, வியாதிகளுக்கும் மூலக்காரணம் தூய்மையான இரத்த உற்பத்தியின்மையும், சீரான இரத்த ஓட்டமின்மையும், முறையான இரத்த சுத்திகரிப்பின்மையுமே ஆகும். உடலில் உள்ள சுரப்பிகள் (Glands) சரியாக சுரந்தால்தான் தூய்மையான இரத்தம் உற்பத்தியாகும். இதயம் (Heart) நன்றாக இயங்கினால்தான் உடலில் தடையற்ற இரத்த ஓட்டம் ஏற்படும். சிறுநீரகங்கள் (Kidneys) சீராக இயங்கினால்தான் இரத்தம் நல்ல முறையில் சுத்திகரிக்கப்படும். மேற்கூறிய உறுப்புகள் நன்றாக செயல்பட வேண்டுமானால், உண்ணும் உணவுகளிலிருந்து எடுக்கப்படும் சக்திகள் முறையாக அனைத்து உறுப்புகளுக்கும் கிடைக்க வேண்டும். இவ்வாறு அனைத்து உறுப்புகளுக்கும் சக்திகள் சீராகக் கிடைக்காத நிலையிலேயே இடுப்பு வலி, ஆஸ்துமா, ஈஸ்னோபீலியா, காமாலை, வெள்ளைப்படுதல், வாயுத் தொல்லை, ஆண்மைக்குறைவு, தூக்கமின்மை, உடற்பருமன், புற்றுநோய், மலச்சிக்கல், பசியின்மை, சிறுநீரகக் கோளாறு, சர்க்கரை வியாதி போன்ற அனைத்து உடல் பிணிகளும் ஏற்படுகின்றன.

அறுசுவை உணவில் கசப்புக்குரிய காய்கறி, கீரை, வகைகளைப் போதுமான அளவு உட்கொள்ளாததால் நமது வயிற்றிலும் உடலிலும் தேவையற்ற புழுக்களும், கிருமிகளும் தோன்றிவிடுகின்றன. மேலும் தேகமானங்கள் முறையாக புதுப்பிக்கப்படாமல் இருந்து விடுவதால் தேவைக்கு அதிகமான உணவை உட்கொள்ளும் நிலைமைக்கு ஆளாகிவிடுகின்றோம்.

மேற்கூறியவைகள் உடலில் சீராக ஏற்பட வேண்டுமானால் தெய்வீக மூலிகைகளான வில்வம், வேப்பிலை, அத்தி, துளசி, அருகம்புல், மாவிலை, வெற்றிலை போன்றவற்றுடன் அற்புத மருத்துவ குணம் கொண்ட கீழாநெல்லி, குப்பைமேனி, ஆடாதொடை, தும்பை ஆகியவைகளையும் பொடி செய்து தக்க அளவில் கலந்து தொடர்ந்து 48 தினங்கள் உட்கொள்ள வேண்டும். இது பற்றிய விரிவான ஆலோசனைக்கு நேரிலும், கடிதம் மூலமும் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:

*சென்னை முகவரி:*

**Dr.C.K. மாணிக்கவாசகம்,**
**Dr.C.K.M. சபாபதி,**
115, புரசைவாக்கம் நெடுஞ்சாலை
(ரெடிமணி ஷாப் எதிரில் உள்ள சந்தில்)
கீழ்ப்பாக்கம், சென்னை - 600 010.
போன் : 6424285, 6427638

திருப்பத்தூர் முகவரி:

ஞானோதய தெய்வீக மூலிகை வைத்தியர்
**Dr.C.K.மாணிக்கவாசகம்**
P.B. No: 30, (காலேஜ் எதிரில்)
திருப்பத்தூர் (N.A.A.) 635 601
போன் : 04179-20469, 22329.

### வைத்தியரிடம் நேரில் ஆலோசனை பெற : 1996ம் வருட புதிய முகாம் விவரம்.
### (முக்கிய பண்டிகை தினங்களிலும் முகாம் உண்டு)

| | | |
|---|---|---|
| 2ந் தேதி - வேலூர் (N.A.) | : | பிற்பகல் 1 to 2 மணி வரை ஹோட்டல் கன்னா, 16, ஆபீஸர்ஸ் லைன், ☎போன் : 0416 / 23060. |
| 3 & 19 ந்தேதி - சென்னை | : | காலை 9 to 2 மேலே உள்ள சென்னை முகவரியில், ☎போன் : 044 / 6424285, 6427638. |
| 4-ந் தேதி - கடலூர் (S.A.Dt.) | : | காலை 9 to 11 ஆற்காடு உட்லண்ட்ஸ் ஹோட்டல், ☎போன் : 04142 / 20707. |
| 4-ந் தேதி - விழுப்புரம் | : | பிற்பகல் 2 to 3 ஹோட்டல் ஆனந்தா, பஸ்நிலையம் எதிரில், ☎போன் : 04146 / 22962. |
| 4-ந் தேதி - திருவண்ணாமலை | : | மாலை 5 to 6 ராதா லாட்ஜ் (பஸ் நிலையம் எதிரில்) ☎போன்: 04175 / 22536. |
| 9-ந் தேதி - பெங்களூர் | : | காலை 11 to 12.30 ஹோட்டல் பிராட்வே, (கல்பனா தியேட்டர் அருகில்) கெம்பே கவுடா ரோட். ✆ : 2872321. |
| 9-ந் தேதி - ஓசூர் | : | மாலை 3 to 4 சீனிவாசா லாட்ஜ், பாகலூர் ரோட், ☎போன் : 04344 / 22899. |
| 9-ந் தேதி - கிருஷ்ணகிரி | : | மாலை 5 to 6 அமராவதி லாட்ஜ், ☎போன் : 04343 / 22120. |
| 12-ந் தேதி - சேலம் | : | காலை 11.30 to 12.30 ஹோட்டல் செல்வம், புதிய பஸ் நிலையம் எதிரில், ☎போன் : 0427 / 449333. |
| 12-ந் தேதி - ஈரோடு | : | மாலை 4 to 5 ஹோட்டல் ஆக்ஸ்போர்டு, பஸ் நிலையம் எதிரில், ☎போன் : 0424 / 70761. |
| 13-ந் தேதி - கோயம்புத்தூர் | : | காலை 9.30 to 12.30 சேரன் பேலஸ் லாட்ஜ் (சாந்தி தியேட்டர் பின்புறம்) ☎போன் : 0422 / 210265, 216691. |
| 14-ந் தேதி - மதுரை | : | காலை 9 to 11 ஹோட்டல் கிரான்ட்ஸ் சென்ட்ரல், மேலப் பெருமாள் மேஸ்திரி தெரு. ✆ 0452 / 543940. |
| 14-ந் தேதி - தஞ்சாவூர் | : | மாலை 5 to 6 அசோகா லாட்ஜ், ☎போன் : 04362 / 20021. |
| 15-ந் தேதி - திருச்சி | : | காலை 9 to 11 ஹோட்டல் ஆனந்த், (சென்ட்ரல் பஸ் நிலையம் அருகில்), ☎போன்: 0431 / 460545. |
| 15-ந் தேதி - நாமக்கல் | : | பிற்பகல் 2.30 to 3.30 ஹோட்டல் தேவி அன்னபூர்ணா, ☎போன் : 04286 / 21336. |
| 18-ந் தேதி - ஆம்பூர் | : | காலை 10 to 11 சம்பங்கி லாட்ஜ், ☎போன்: 04176 / 43311. |
| 18-ந் தேதி - காஞ்சிபுரம் | : | மாலை 4 to 5 ராஜம் லாட்ஜ், பஸ் நிலையம் அருகில் 9, காமராஜர் தெரு, ☎போன் : 04112 / 22519. |
| 19-ந் தேதி - சென்னை | : | காலை 9 to 2 மேலே உள்ள சென்னை முகவரியில், ☎போன் : 044 / 6424285, 6427638. |
| 22-ந் தேதி - தர்மபுரி | : | காலை 9 to 10 ஸ்ரீ மாதேஸ்வரா லாட்ஜ், ☎போன்: 04342 / 60226. |
| 22-ந் தேதி - திருப்பூர் | : | பிற்பகல் 2 to 3 ராமகிருஷ்ணா லாட்ஜ், ☎போன் : 0421 / 20418. |
| 22-ந் தேதி - உடுமலைப்பேட்டை | : | மாலை 6 to 7 குறிஞ்சி லாட்ஜ், பஸ் நிலையம் எதிரில் ☎போன்: 04252 / 24353. |
| 23-ந் தேதி - திண்டுக்கல் | : | காலை 9 to 10.30 ஹோட்டல் குறிஞ்சி, பஸ் நிலையம் பின்புறம் ☎போன்: 0451 / 31206, 27017. |
| 23-ந் தேதி - தூத்துக்குடி | : | மாலை 5 to 6 ஹோட்டல் ஆல்வின், தேவர் புரம் ரோடு, ☎போன் : 0461 / 22780. |
| 24-ந் தேதி - திருநெல்வேலி | : | காலை 8.30 to 11 ஹோட்டல் ஸ்ரீ சீத்தாபதி, மதுரை ரோடு, ☎போன் : 0462 / 23312. |
| 24-ந் தேதி - நாகர்கோவில் | : | பிற்பகல் 2 to 3 ஹோட்டல் சரவணா, மீனாட்சிபுரம், ☎போன்: 04652 / 25689. |
| 25-ந் தேதி - விருதுநகர் | : | காலை 9 to 10 அண்டன் லாட்ஜ், மதுரை ரோடு, ☎போன் : 04562 / 45537. |
| 25-ந் தேதி - கரூர் | : | பிற்பகல் 2.30 to 3.30 மணி வரை அரசி லாட்ஜ், ஜவகர் பஜார், ☎போன் : 04324 / 22663, 23763. |

மூடப்பட்டது தவிர, வேறொரு தகவலும் கிடைத்தது.

பணம் கொடுத்ததோடு அல்லாமல், அந்த இன்ஸ்பெக்டரின் 'சிறந்த சேவை'க்கு ஊக்க போனஸாக, அவரை அந்தத் தொழிலதிபர், நான்கு நாட்கள் ஹைதராபாத்துக்கு 'உல்லாசப் பயணம் கூட்டிப் போயிருப்பதாகவும் தெரியவந்தது. ஆனால் இதற்கெல்லாம் வலுவான ஆதாரங்கள் ஏதுமில்லை.

'சரி, ஹைதராபாத்தானே, அங்கும் போய் விசாரித்து விட்டால் போகிறது!' என்று புலனாய்வை அந்தப் பக்கம் திருப்பி விட்டேன்.

குறிப்பிட்ட தினத்தில், அந்தத் தொழிலதிபர் விமானம் மூலம் ஹைதராபாத் சென்றதற்கான விமான நிலைய ஆவண சாட்சியங்கள் இருந்தன. அவரோடு வேறொருவர் பயணம் செய்ததற்கும் ஆதாரம் இருந்தது. ஆனால் வேறு பெயர்!

தொழிலதிபர், தம் உறவினர் ஒருவர் பெயரில் டிக்கெட் வாங்கி இருந்தார். அந்த ஆளை விசாரித்தால், "ஆமாம், நான்தான் ஹைதராபாத் சென்றேன்!" என்று சொல்லி விட்டார்.

ஆனால், அந்த இன்ஸ்பெக்டரும் அதே தினங்களில் ட்யூட்டிக்கு காஷுவல் லீவ் போட்டிருந்தார். கேட்டால், "என் கிராமத்துக்குப் போயிருந்தேன்!" என்றார்.

கிராமத்துக்குப் போய் விசாரித்தால், "ரொம்ப சரி. அந்த நான்கு நாட்களும் இன்ஸ்பெக்டர் இங்கேதான் இருந்தார்'' என்று சொல்லி விட்டார்கள்.

எத்தனையோ கிரிமினல்களோடு தினசரி மல்லுக்கு நிற்கிற ஒரு போலீஸ்காரருக்கு இந்த மாதிரி சின்ன விஷயங்களில் சிக்காமல் தப்புவது எப்படி என்று தெரியாதா என்ன?

நானும் விடாமல் என் இன்வெஸ்டிகேட்டிங் ஆபீசரை ஹைதராபாத்துக்கு அனுப்பினேன்.

குறிப்பிட்ட ஹோட்டலில், அந்தத் தொழிலதிபரும், 'இன்னொருத்தரும்' தங்கி இருந்ததற்கான ஆதாரங்களை ஹோட்டல் ரிஜிஸ்தர் சொன்னது. ரிஜிஸ்தரிலும் இதர எல்லா பேப்பர்களிலும் அந்தத் தொழிலதிபரே கையெழுத்துப் போட்டிருந்தார்.

ஹோட்டல் சிப்பந்திகள் உட்பட அனைவரும் அவர்களுக்குச் சாதகமாகவே பேச, எந்த ஒரு சிறிய தடயம் கூட - அந்த இன்ஸ்பெக்டர் உடன் சென்றதற்கு இல்லாமல், ஒரு கட்டத்தில் புலனாய்வு, சுவரில் முட்டியது போல் நின்று விட்டது.

இத்தனை முயற்சிக்குப் பின்னும் ஒரு பயனும் இல்லாமல் போனது குறித்துக் கவலைப்படாமல், அந்த இன்வெஸ்டிகேட்டிங் ஆபீசர் தொடர்ந்து குடைந்து கொண்டிருந்தார்.

ஹோட்டலில் அவர்கள் தங்கி இருந்த நாட்களுக்கான சலவை பில்கள், உணவு பில்கள், மது அருந்தியிருந்ததற்கான பில்கள், பயணம் செய்த விவரங்கள், டெலிபோன் கால்கள் என்று ஒன்று விடாமல் தேடிக் கொண்டிருந்தார்.

ஒரு சிறிய க்ளூ... கிடைத்து விட்டால் போதும்.

பில் புத்தகங்களைப் புரட்டிக் கொண்டே வந்தவர், சட்டென்று ஓரிடத்தில் நின்றார்.

அனைத்து பில்களிலும் அந்தத் தொழிலதிபரே கையெழுத்துப் போட்டிருந்தார். ஏதோ ஒரே ஒரு பில்லில் மட்டும் (காப்பி, டிபன் ஏதோ அறைக்குத் தருவிக்கப்பட்டதற்கான பில் அது. அச்சமயம் பார்த்து அந்தத் தொழிலதிபர் பாத்ரூம் போயிருப்பார் போலும்.) வேறொரு கையெழுத்து இருக்க, உடனே அந்தக் கையெழுத்தை, அந்த இன்ஸ்பெக்டரின் கையெழுத்துடன் ஒப்பிட்டு, உறுதி செய்து, - We got it!

அவர்கள் எவ்வளவோ சாமர்த்தியமாகச் செயல்பட்டும், விதி அந்த ஒரு கையெழுத்து மூலமாக விளையாடி விட்டது! காஷுவல் லீவ் போட்டு விட்டு, மதுரைக்குப் பக்கத்திலுள்ள தம் கிராமத்துக்குப் போயிருந்த இன்ஸ்பெக்டரின் கையெழுத்து, அதே தினங்களில் ஹைதராபாத்தில் ஒரு நட்சத்திர ஹோட்டலின் ஒரு பில்லில் எப்படிப் பதிவாகி இருக்க முடியும்?

மாட்டிக் கொண்டார்!

இந்த ஒரு சாட்சியத்தை வைத்துக் கொண்டு அந்த இன்ஸ்பெக்டரின் மீது கோர்ட்டில் கிரிமினல் வழக்கு தொடர முடியாவிட்டாலும், காவல் துறை சார்ந்த ஒழுங்கு நடவடிக்கை மூலம் அவர் முறையாக தண்டிக்கப்பட்டார்.

சாட்சியங்கள் அகப்படாத சூழ்நிலையில் என் புலனாய்வு அதிகாரி சோர்ந்து போய்த் திரும்பி இருந்தால் இது சாத்தியமாகி இருக்காது!

விடாமுயற்சி! எங்கும் - எதிலும் இது மிக அவசியம்.

(அடுத்த வாரம்)



''அந்த ராஸ்கல் ராமசாமி எனக்கு புத்தாண்டு வாழ்த்து அனுப்பியிருக்கான்...''

''அதுக்கு ஏன் திட்டறீங்க, பாவம்!''

''பின்னே 1977-ல் என்னிடம் வாங்கிய ஐம்பது ரூபாய் கடனை திருப்பித் தருகிற பொருளாதார வசதி இந்தப் புத்தாண்டிலாவது உனக்கு ஏற்படட்டும்னு எழுதியிருக்கானே, கோபம் வராதா?

— உ. ராஜாஜி

GROWTH THROUGH CUSTOMER SATISFACTION



# KUBER MUTUAL BENEFITS LTD.

(A Central Govt. Approved Nidhi Company)

## A UNIT OF KUBER GROUP-ESTD. 1980

## KUBER FIXED DEPOSIT SCHEME

### FIXED DEPOSIT SCHEME

| Time Period | 46 Days | 3 Mth | 6 Mth | 1 Yr | 2 Yr | 3 Yr | 4 Yr | 5 Yr |
|---|---|---|---|---|---|---|---|---|
| % Int P.A. | 13.5% | 14.5% | 15.5% | 17.5% | 18.5% | 19% | 20% | 21% |

Min. deposit for 46 days & 3 months is Rs.5000/- addl. in multiples of Rs. 1000/- Post dated interest cheques issued in advance.

**2% cash incentive on all fixed deposits for 1 year and above upto January 15th 1996.**

### CUMULATIVE DEPOSIT SCHEME

| Time Period | 1 Yr | 2 Yrs | 3 Yrs | 4 Yrs | 5 Yrs |
|---|---|---|---|---|---|
| % Int P.A. | 18.5% | 19.5% | 20% | 21% | 22% |

Minimum deposit Rs.1000/- and additional in multiples thereof. Loan facility upto 75% of total amount deposited. Nomination facility avbl.

## SENIOR CITIZEN WELFARE YOJANA

Applicable for persons above 55 years, Pensioners, Handicapped and Widows. Minimum Deposit Rs. 5,000/-.

### READY RECKONER - I

| Period | Rate of Interest (p.a.) | Monthly Interest on Rs. 5,000 Deposit (in Rs.) | Monthly Interest on Rs. 10,000 Deposit (in Rs.) |
|---|---|---|---|
| 12 Months | 20.5% | 85.50 | 171.00 |
| 24 Months | 21% | 87.50 | 175.00 |
| 36 Months | 21.5% | 89.60 | 180.00 |

Interest rate applicable as per Ready Reckoner - I. Post -dated interest cheques for the entire period will be issued in advance.

### READY RECKONER - II

| Below 12 Mths | 12 Mths | 24 Mths | 36 Mths |
|---|---|---|---|
| 13% | 15% | 16% | 17% |

Premature withdrawal available as per Ready Reckoner-II applicable upto date of withdrawal without any penalty or service charges.

## KUBER DHANALAXMI

**DOUBLE IN 42 MONTHS** **TRIPLE IN 60 MONTHS**

Loan facility available upto 75% of total deposit after 12 months. Minimum deposit Rs.1000/- and additional amounts in multiples thereof. Premature withdrawal facility after one year permitted & the interest rate payable will be at our Fixed Deposit rate of interest applicable upto the date of premature withdrawal.

**Transsactions with members only**

## KUBER MUTUAL BENEFITS LTD.

Regd. Off. : Kuber Bhawan, Begum Bridge Road, Meerut Ph.: 543716, 543717

Head Off : Kuber House, S-32, Greater Kailash-I, New Delhi - 110048. Ph.: 6412749, 6472685, 6211877, Fax: 011-6420378 / 6211879

Branch Off : R-4, IInd Floor,Hong Kong Complex, Ramanathan Street, T.Nagar, Madras - 600 017. Ph. : 4340790




# "அ.தி.மு.க. வுடன் ரகசிய உடன்பாடா?"

**"சன் டீ.வி.யில் சர்ச்சைக்குரிய கருத்துக்களைச் சொன்னதன் மூலம் ஏழு கட்சிக் கூட்டணி பிளவுபட நீங்கள் தானே பொறுப்பு! இதன் காரணமாக தமிழகத்தின் எதிர்காலமே பாதிக்கப்பட்டதாக நீங்கள் உணரவில்லையா?"**

"நிச்சயமாக அதற்கு நான் காரணமல்ல. ராஜீவ் காந்தி கொலையில், தி.மு.க. நிலையைப் பற்றிய என் கருத்து என்ன என்பது பஞ்சாயத்துத் தேர்தல் சம்பந்தமாக உடன்பாடு ஏற்பட்ட முதல் நாளிலிருந்தே கலைஞருக்குத் தெரியும். நான் தி.மு.க.வுக்கு நன்னடத்தைச் சான்றிதழ் வழங்க வேண்டுமென்று கலைஞர் எதிர்பார்க்கிறார். வர்மா கமிஷன், சிறப்புப் புலனாய்வு பிரிவு ஆகியவற்றின் விசாரணையில் ராஜீவ் கொலையில், தி.மு.க. வின் பங்கு இல்லை என்று தெளிவாகி விட்டது. சந்தோஷம்தான். இப்போது, முன்பு தி.மு.க.வினர் கேட்டுக் கொண்டபடியே விடுதலைப் புலிகளின் நடவடிக்கைகள் குறித்து 1983-ம் ஆண்டிலிருந்தே ஜெயின் கமிஷன் விசாரிக்க இருக்கிறது. எனவே ஜெயின் கமிஷன் விசாரணையிலும் தி.மு.க. பங்கேற்று 'தாங்கள் குற்றமற்றவர்கள்' என்று நிரூபித்துக் கொள்வது அவர்கள் பொறுப்பு. இன்னமும் அவர்களுக்கு ஏன் தயக்கம்? சன் டீ.வி. பேட்டிக்கு அடுத்த நாள் என்னிடம் பேசிய கலைஞர், 'பேட்டி நன்றாக இருந்தது' என்று சொன்னாரே தவிர வேறு எதையும் கூறவில்லை. ஏழு நாட்களுக்குப் பிறகு திடீர் ஞானோதயம் வந்து என்னை நீக்கி இருக்கிறார்! கண்டைக்காய் கட்சி முதல் க. சுவாமி கட்சி வரை எங்கள் அணியில் சேர விருப்பம் தெரிவித்த போது "சேர்த்துக் கொள்ளலாமா?" என்று எங்களிடம் கருத்துக் கேட்ட கலைஞர், எங்களை நீக்கும் முன் அணியிலுள்ள மற்றவர்களைக் கலந்தாலோசிக்கவில்லை! ஏதோ உள்நோக்கத்தோடு தான் செயல்பட்டிருக்கிறார் அவர். கலைஞரின் இந்தப் போக்கு காரணமாக அணியின் மற்ற கட்சிகள் அதிருப்தி அடைந்திருக்கின்றன. ஆகவே ஏழு கட்சி உடன்பாடு ஆட்டம் கண்டதற்குக் காரணம் கலைஞரே!"

**"ராஜீவ் கொலையில் தி.மு.க. பற்றிய உங்கள் அபிப்பிராயம் நிலையாக இருக்கும் போது அந்த அணியில் இணைந்ததேன்?"**

"பஞ்சாயத்துத் தேர்தலில் அ.தி.மு.க. எதிர்ப்பு வோட்டுக்கள் பிரியாமலிருக்கச் செய்து கொண்ட உடன்பாடு அது. கலைஞரே

எங்களை அழைத்துப் பேசினார். பஞ்சாயத்துத் தேர்தல் பற்றி தலைவர்களுக்குள் உடன்பாடு ஏற்பட்டது. உண்மையில் தேர்தல் நடந்திருந்தால், உள்ளூர் நிலைமைகளுக்கேற்ப எதிர்க் கருத்துக்கள் கொண்டவர்கள் கூட ஒன்றாக இணைந்து வேலை செய்ய வாய்ப்பிருக்கிறது. ஆனால் சட்டமன்றத் தேர்தல் அப்படியல்ல! ஆகவே இது பற்றி பின்னால் பேசிக் கொள்ளலாம் என்று தீர்மானித்துத்தான் அந்த அணியில் இணைந்தோம்."

**"விழுப்புரத்தில் நடந்த பொதுக் கூட்டத்தில் 'கலைஞரை முதல்வர்' என்று நீங்களும் டாக்டர் ராமதாஸும் சொன்னீர்கள்? இப்போது 'பேசித்தான் முடிவு செய்ய வேண்டும்' என்கிறீர்களே?"**

"கலைஞரை நான் முதலமைச்சர் என்று சொல்லவில்லை. ராமதாஸ்தான் அப்படிச் சொன்னார். 'தமிழகத்திற்குத் தலைமையேற்க வாருங்கள்' என்றுதான் நான் சொன்னேன். தவிர, 'கூட்டணி சேர்ந்தால் ஆட்சியிலும் பங்கு வேண்டும்' என்பது கடந்த மூன்றாண்டுகளாகவே நான் பேசி வரும் விஷயம்; கலைஞருக்கும் தெரியும். ஏழு கட்சிக் கூட்டணி அல்லது உடன்பாடு, வரும் சட்டமன்றத் தேர்தலிலும் தொடர்ந்து வெற்றி பெற்றால், 'கலைஞரை முதல்வராக ஏற்றுக் கொள்ள எங்களுக்கு எந்தத் தயக்கமும் இல்லை; ஆனால் அமைச்சரவையில் கூட்டணிக் கட்சிகளுக்குப் பங்கு வேண்டும்' என்பதே என் கருத்து. இந்த விஷயம் குறித்துச் சரியான சமயத்தில் பேசிக் கொள்ளலாம் என்று சொன்னாலே தி.மு.க.வுக்கு சங்கடமாக இருக்கிறது."

**"கலைஞரிடமிருந்து டாக்டர் ராமதாஸையும் பிரித்து 'வன்னியர் அணி' அமைப்பதுதான் உங்கள் நோக்கமா?"**

"ஏழு கட்சி அணியில் இருந்த போது நாங்கள் வன்னியராகத் தெரியவில்லையா? இப்போதுதான் தெரிகிறதா?"

**"மொத்தத்தில் நீங்கள் செயல்படுவது ஜெயலலிதாவுக்குத்தான் வசதியாகப் போய் விடும். உங்களுக்கும் அவருக்கும் ஏதாவது ரகசிய உடன்பாடு இருக்குமோ என்று கூட சந்தேகப்பட வேண்டியிருக்கிறது..."**

"இப்படிப்பட்ட அடிப்படையற்ற கருத்துக்களைச் சொல்ல வேண்டுமென்றால் பல தலைவர்களைப் பற்றியும் ஏராளமாகக் கூறலாம். அ.தி.மு.க.வுடன் நேரடியாகவோ, அல்லது மறைமுகமாகவோ – இப்போது மட்டுமல்ல; எதிர்காலத்திலும் நாங்கள் தொடர்பு வைத்துக் கொள்ள மாட்டோம். அ.தி.மு.க.வுக்கு எதிராக அணிகள் பிரிந்திருந்தாலும் பலமான அணி எது என்று பார்த்துத்தான் மக்கள் தேர்ந்தெடுப்பார்களே தவிர, அ.தி.மு.க.வை அல்ல."

பேட்டி : **ப்ரியன்**
படம் : **யோகா**

# வதம் செய்த பின்னும் அடங்காத உக்கிரம் அடங்கியது ஓர் பறவையால்! என்னே விந்தை!!

தஞ்சாவூர் ஜில்லாவில் கும்பகோணத்திற்கருகிலுள்ள ஒரு சிற்றூர் திருபுவனம். காண்பதற்கரிய கம்பஹரேஸ்வர ஸ்வாமி கோயில் இங்கு குறிப்பிடத்தக்கது. மிகப் புராதனமான இக்கோயில் மூன்றாம் குலோத்துங்கச் சோழனால் திரும்பவும் கட்டப்பட்டது. இங்கே இறைவன் ஸ்ரீசரபமூர்த்தி என்ற பெயருடன் ஒரு பறவை உருக் கொண்டு காட்சியளிக்கிறார். இங்குள்ள மூர்த்தி யாளி முகத்துடன், எட்டுக் கால்களுடன், நான்கு சிறகுடன் பாதி மனித உருவிலும் மீதி மிருக உடலுடனும் காட்சியளிக்கிறார். மஹாவிஷ்ணு நரசிம்ம அவதாரம் எடுத்து ஹிரண்ய கசிபுவை வதம் பண்ணி அவனது உதிரத்தைப் பருகியும் பின்னும் அவரது உதிர தாகம் தணியாமல் மேலும் பலிகொள்ள அவரது உக்கிர நிலைகண்டு உலகமே பயந்து நடுங்கியது. அந்த உக்கிரத்தை தாங்க வொண்ணாத உலக மாந்தர் யாவரும் பிரம்மதேவனிடம் சென்று முறையிட அவர் சிவ பெருமானை இந்த நிலையிலிருந்து உலகைக் காக்க வேண்டிக் கொண்டார். நிலைமையின் முக்கியத்துவம் கருதி சிவபெருமான் ஒரு பறவை உருக்கொண்டு நரசிம்மரை வலுச்சண்டைக்கு இழுத்து அவரை வெற்றி கொண்டார். இவ்வாறு சாந்தப் படுத்துவதற்காக சிவபெருமான் செய்த செயலால் அவருக்கு கம்பஹரேஸ்வரர் அதாவது சமனப்படுத்துபவர் அல்லது உக்கிரத்தைத் தணித்தவர் என்ற பெயர் உண்டாயிற்று. இந்தக் கதையில் பொதிந்த தத்துவம் என்னவென்றால் சிருஷ்டியில் நேர்ந்துவிடும் புரட்சிகரமான நியதி மாறுதல்களில் தெய்வத்திற்கும் பங்கு உண்டு என்றாலும் (நரசிம்மரின் மூர்க்கம்) அதை சமனப்படுத்துவதிலும் அதே தெய்வம் நன் பங்கை ஆற்றுகிறது (சாந்தப்படுத்துபவராக சிவபெருமான்). தஞ்சை மற்றும் கங்கை கொண்ட சோழபுரம் கோயில்களின் வடிவமைப்பை ஒத்திருக்கிறது ஸ்ரீ சரபேஸ்வரர் கோயில் விமானம். இங்குள்ள கருங்கல்லினாலான கருவறை பெரிய அளவில் அரிய சிற்ப வேலைப்பாடுகளுடன் அமைந்துள்ளது. தொல்லை கொடுத்த சக்தியை சாந்தப்படுத்துவதற்கென்றே அவதரித்த மூர்த்தி ஆதலால் இங்கு இறைவனை வழிபடுவோர் பயம், பகை, பிணி, சூனியம், குழந்தையில்லாத குறை முதலிய இடர்களிலிருந்து விடுபடுவர். ஞாயிறு மற்றும் வெள்ளியன்று ராகுகாலத்தில் இங்கு வழிபடுவது அனுகூலமான பலன்களை அளிக்க வல்லதாகக் கருதப்படுகிறது. ஸ்தல புராணம் வடமொழியில் இருப்பது இங்குள்ள புதுமை. தமிழில் அதன் மொழி பெயர்ப்பும் உள்ளது. இருப்பினும் இக்கோயில் தேவாரம் போன்ற தமிழ் இலக்கியங்களில் இடம் பெறாதது வியப்பாக இருக்கிறது. இன்றும் பெருமளவில் மறைந்து கிடக்கும் நமது புராதனப் பெருமைக்கு ஓர் எடுத்துக்காட்டு திருபுவனத்தின் கம்பஹரேஸ்வரர் கோயில். இவைகளை வெளிக் கொணர்வதில் தன்னாலியன்ற பணியினைச் செய்கிறது 'ஹார்வெஸ்ட்'. இது போன்ற வரலாறுகளை எழுதி அனுப்பினால் அவற்றை எந்தவித மதவேறுபாடுமின்றி வெளியிடத் தயாராக உள்ளது 'ஹார்வெஸ்ட்'.

**HARVEST**
BENEFIT FUND LIMITED

புதுமை எண்ணங்கள் கொண்ட நிதி

**தி. நகர்** : 19, வியாசர் தெரு, (வடக்கு உஸ்மான் ரோடு அருகில்), சென்னை – 600 017.
போன் : 8253597, 8281192.

**கிளைகள் : சென்னை : ஆழ்வார்பேட்டை** : போன் 4991552, 4992231, 4991056. **ஜார்ஜ் டவுன்** : போன் 5227891. **அண்ணா நகர்** : ரூம் நெ. 4, முதல் மாடி, V.S.D. பிளாசா, A.A.I. 2ஆவது அவன்யு (ரவுண்ட் டானா அருகில்), **திருவான்மியூர்** : போன் 411264. **கோயம்புத்தூர்** : 444089 **பெங்களூர்** : போன் 3310529. **பம்பாய்** : போன் 2656965, 2656970. **செகந்திராபாத்**: போன் 846669. **புதுடெல்லி**: போன் 6478781/82.
**உறுப்பினர் சேவை மையங்கள் : சென்னை : நங்கநல்லூர்** – திரு K. விஜயராகவன், போன் 2343970, **குரோம்பேட்டை** – திரு P.V. சாம்பசிவன், போன் 402708, **புதுக்கோட்டை** – திரு K.S. சேஷமூர்த்தி, போன் 20440, **திருச்சி** – திரு R. ராஜாராம், போன் 468726. **காரைக்குடி** – திரு N. கேதார்நாத், போன் 622373 **திருநெல்வேலி** – திரு S. கண்ணன், போன் 578078 PP, **காக்கிநாடா** – திரு V.V. கிருஷ்ணராவ், போன் 71396.

இந்திய அரசாங்கத்தால் அங்கீகரிக்கப்பட்ட ஒரு நிதி நிறுவனம். **ஸ்தாபிதம் 1987** எங்கள் சேவை உறுப்பினர்களுக்கு மட்டுமே.

**ஸ்ரீ சரபமூர்த்திப் பெருமானின் அழகிய வண்ணப்படத்தை இலவசமாகப் பெற, ஹார்வெஸ்ட் தொடர்பு மையம், தபால் பெட்டி எண் 8595, சென்னை 600 041 என்ற முகவரிக்கு எழுதுங்கள்.**

Insight 1414

உ
உபயம்

ஹார்வெஸ்ட்

நிதி அந்தஸ்து

உறுதியான தொழில் உறவுகள்

பாதுகாப்பே எங்கள் வலிமை

அக்கறையுடன் சேவை

ஒவ்வொரு செயலிலும் நேர்மை

முழுமையான திட்டங்கள்

தேவைக்கேற்ப திட்டங்கள்

உறுப்பினர் சேவை மையங்கள்

வயது முதிர்ந்தோர் சங்கம்

மதிப்பைப் போற்றும் ஈடுபாடு

நல்லறிவுடன் நாணயம்

வாருங்கள்... முற்றிலும் வேறுபட்ட சிறந்த சேவையைப் பெறுங்கள்

காசி பில்டர்ஸ் வழங்கும்

# காசி குரூப் ஹவுசிங் பெனிபிட் ஸ்கீம்

**முதல் மாதத் தவணையில் சிறப்புத் தள்ளுபடி 31-1-96 வரை**

காசி குரூப் ஹவுசிங் பெனிபிட் ஸ்கீமின் வெற்றிகரமான 16-வது குலுக்கல் சென்னையில் 25.02.96 அன்றும், மதுரை (25.12.95), திருச்சி (01.01.96 புத்தாண்டு), கோவை (18.02.96) ஆகிய இடங்களில் முதல் குலுக்கல்களும் நடைபெற உள்ளது என்பதை "காசி பில்டர்ஸ்" நிறுவனம் மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறது.

இத்திட்டத்தில் ரூ.1,500/- முதல் ரூ.5,000/- வரை மாதத் தவணைகளாகச் செலுத்தி குலுக்கல் மூலம் 300 முதல் 1000 சதுரடிகள் வரையிலுள்ள வீட்டினை தேர்ந்தெடுத்து சொந்த வீடாக்கிக் கொள்ளலாம். மீதித் தொகையை வாடகை போல் வீட்டிலிருந்து கொண்டே செலுத்தலாம்.

இத்திட்டத்தில் வீடு பதிவு செய்பவர்களுக்கு முதல் மாதத் தவணைத் தொகையில் 50% தள்ளுபடி வழங்கப்படும்.

## சுலபத் தவணை சுபமங்களா திட்டம்

இத்திட்டத்தில் ரூ.10,000/- மட்டுமே முன்பணமாகச் செலுத்தி சொந்த வீடு பெறலாம். மீதமுள்ள தொகைக்கு நாங்களே அங்கீகரிக்கப்பட்ட நிதிநிறுவனங்கள் மூலமாக கடனுதவி ஏற்பாடு செய்கிறோம். **சென்னையில் வீடு கிடைக்கும் இடங்கள்;-** சென்னை கே.கே. நகர் மேற்கு, விருகம்பாக்கம், வளசரவாக்கம், சாலிகிராமம், வடபழனி, போரூர் ஆகிய இடங்களில் வீடுகள் கட்டித் தருகிறோம். **மதுரையில் வீடு கிடைக்கும் இடங்கள் ;-** எல்லீஸ் நகர், அண்ணாநகர், S.S. காலனி, T.V.S. நகர், அழகப்பா நகர், வேல்முருகன் நகர் மற்றும் மதுரையின் பிரதான இடங்களில். **திருச்சியில் வீடு கிடைக்கும் இடங்கள் ;-** ஸ்ரீரங்கம், திருவெறும்பூர், கே.கே. நகர், கிராஃபோர்டு, T.V.S. டோல்கேட், மன்னார்புரம் மற்றும் திருச்சியின் பிரதான இடங்களில். **குண்டூரில் வீடு கிடைக்கும் இடங்கள் ;-** விகாஸ் நகர், வித்யா நகர், சியாமளா நகர், சந்திர மவுலி நகர், பட்டாபிபுரம் மற்றும் குண்டூரின் பிரதான இடங்களில். **கோவையில் வீடு கிடைக்கும் இடங்கள் ;-** பேரூர், மருதமலை, பீளமேடு, வடவள்ளி, துடியலூர், ராமநாதபுரம் மற்றும் பல இடங்களில்.

**ஓர் முக்கிய அறிவிப்பு:-**

**1-1-96 முதல் சென்னை, மதுரை, திருச்சி ஆகிய இடங்களில் சதுர அடியின் விலைகள் உயர உள்ளது.**

| இடம் | 31.12.95 வரை 1 சதுர அடியின் விலை | 1.1.96 முதல் 1 சதுரஅடியின் விலை |
|---|---|---|
| சென்னை | ரூ. 500/- | ரூ. 600/- |
| மதுரை | ரூ. 500/- | ரூ. 550/- |
| திருச்சி | ரூ. 500/- | ரூ. 550/- |
| எனவே 31.12.95குள் உங்கள் வீட்டினை பதிவு செய்து பயன் பெறுங்கள். | | |

**கோவையில் ஒரு சதுர அடியின் விலை ரூ.700**

## காசி பைனான்ஸ் & கிரெடிட் கார்பொரேஷன்

**18% முதல் 27% வரை வட்டி** + **2% முதல் 5% வரை ஊக்கத் தொகை**

**காசி பாண்டு** : உங்கள் முதலீடு 3 வருடங்களில் இரட்டிப்பாகிறது + 4% ஊக்கத்தொகை

**கோல்டன் பாண்டு** : உங்கள் முதலீடு 5 வருடங்களில் மும்மடங்காகிறது. + 5% ஊக்கத்தொகை

**சிறப்பு ஊக்கத்தொகை 31-1-96**

இத்திட்டத்தில் குறைந்த பட்ச வைப்புத் தொகை ரூ.5,000/-மும் அதற்கு மேல் ரூ.1000/- மடங்குகளில் புரோக்கர்களுக்கும், வைப்பு நிதி ஏஜெண்டுகளுக்கும் 2% அதிக ஊக்கத்தொகை வழங்கப்படும்.

மேலும் விபரங்களுக்கு:-




**காசி பில்டர்ஸ்,**
**காசி ஹவுசிங் & டெவலப்மெண்ட் லிட், மற்றும்**
**காசி பைனான்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட்**

ஞாயிறு அன்றும் அலுவலகம் உண்டு

காசி தியேட்டர் காம்ப்ளக்ஸ் நெ.91,92 ஜவஹர்லால் நேரு சாலை, அசோக்நகர், சென்னை-83.
✆ : 4822206, 4821969, 4825506, 4896373, 4896409. Fax : 044-4825606

**கிளை அலுவலகங்கள்:** சென்னை: 13, கிழக்கு ஜோன்ஸ் ரோடு, சைதாப்பேட்டை, சென்னை-15. ✆ 456464 **திருச்சி:** 5/B, 25, ஜெமினி பிளாசா, 5, பாரதியார் சாலை, கன்டோன்மென்ட், திருச்சி-621 001. டேப் காம்ப்ளக்ஸ், 32/8/2, 3வது மாடி, வில்லியம்ஸ் ரோடு, கன்டோன்மென்ட், திருச்சி-1 **மதுரை** : 246A நாயக்கர் புதுத் தெரு, முதல் மாடியில் சக்தி சிவம் தியேட்டர் எதிரில் மதுரை-625 001. ✆ 54190 **பெங்களூர்:** 33, 2வது மாடி, கார்ப்பரேஷன் நம்பர் 400, ஓலிசா காம்ப்ளக்ஸ், சம்பைக் ரோடு, 6வது குறுக்குத் தெரு அருகில் மல்லேஸ்வரம், பெங்களூர்- 560 003. ✆ 363351 1532, 39வது E கிராஸ் 4வது "T" பிளாக், ஜெய நகர், பெங்களூர் 560 041. ✆ 6652480. **குண்டூர்** No.11-1-15, ஸ்டேஷன் ரோடு, நரசராவ்பேட் ப்ளீச்சர் மார்ட் மாடியில் நாஸ் சென்டர், குண்டூர் 522001. போன் : 221424, 220014. **கோவை** ; ஒப்லி டவர்ஸ், 594/4, டி.பி. ரோடு, ஆர்.எஸ். புரம், கோயம்புத்தூர்-641 002. ✆ : 444656. **மைசூர்:** 20, முதல் மாடி, தேவராஜ் அர்ஸ் சாலை, மைசூர்-570 009. **விசாகப்பட்டினம்** : ஸ்ரீமுகா காம்ப்ளக்ஸ் (Ground Floor) துவாரகா நகர், விசாகப்பட்டினம்-530 016.

# என்ன பிடிக்கும் இவர்களுக்கு?



* ஆதர்ஷ்

சோப் பப்பிள் ஸெட், கரடி, நாய், கிரிக்கெட் பேட், ட்ரெயின் ஸெட் - தண்டவாளத்தில் ஓடினாலும் சரி, கீழே ஓடினாலும் சரி .

* சரண்யா

வீடியோ-கேம்ஸ்தான் முதல் சாய்ஸ். எஜுகேஷனல் டாய்ஸ் ஓகே; ஆனால் போரடிக்காததா இருக்கணும். எக்கச்சக்கமான வண்ண ஷேடுகள் கொண்ட க்ரேயான் பெட்டிகள்.

* அருண்

ரோபோ, டென்னிஸ் பந்து, வாட்டர்-கன், ஸ்க்ராபின் மாதிரி நாமே உருவாக்கும் குறுக்கெழுத்துப் புதிர்கள், காப்ஸிலா மாதிரி விஞ்ஞானத்தை உணர்த்தும் பொம்மைகள்.

* தீபிகா

விதவிதமான உடைகள் கொண்ட பார்பி செட், எட்டு பீஸ், சைனீஸ் புதிர்கள், நிறைய படங்கள் இருக்கிற டிக்ஷ்னரி, ப்ளாஸ்டிக் சீட்டுக்கட்டு.

பேட்டி : ஜி.எஸ்.எ

படங்கள் : ஸ்ரீஹரி,கிருஷ்ணமூர்த்

**உள்ளே–வெளியே :**

*உள்ளே....*

"வருஷா வருஷம் புத்தகக் கண் காட்சி நடத்த ஏன் லேடீஸ் காலேஜைத் தேர்ந்தெடுக்கறாங்க தெரியுமா? கண்-காட்சிக்குத்தான்!"

– பச்சையப்பன் கல்லூரியின் தவப் புதல்வர் ஒருவர் தம் சீரிய ஆராய்ச்சியின்



# கண்காட்சியில் நடந்த 'கண்' ஆராய்ச்சி!

விளைவான கண்டுபிடிப்பை உரக்கச் சொல்லிக் கொண்டிருந்தார். இடம் – காயிதே மில்லத் பெண்கள் கலைக் கல்லூரி. நடப்பது புத்தகக் கண் காட்சி. கல்லூரி என்னவோ லீவ் விட்டாச்சு!

கடந்த பத்தொன்பது ஆண்டுகளாக இந்த Book-fare இதே மாதத்தில், அநேகமாக இதே தினங்களில் நடந்து கொண்டிருக்கிறது. கண்காட்சிக்கென ஒரு நிரந்தர இடம் வேண்டி, அரசைக் கேட்கப் போவதாகச் சொன்னார்கள், அமைப்பாளர்கள். அடுத்த வருஷம் ஓர்க்-அவுட் ஆகிவிடும் என்கிறார்கள். அந்தப் பச்சையப்ப மாணவர் அப்போது வருவாரா, தெரிய வில்லை.

நாட்டில் புத்தகம் படிக்கிற பழக்கம் அதிகமாகி இருக்கிறதோ என்னவோ, புத்தகங்களின் வரவு மிக அதிகம். சமையலிலிருந்து சாட்டிலைட் வரை, கைரேகை சாஸ்திரத்திலிருந்து கம்ப் யூட்டர் சாஸ்திரம் வரை அடுக்கடுக் காகப் புத்தகங்கள்.

"ஆனால் வியாபாரம் கொஞ்சம் டல் தான்" என்றார் கவிதா பப்ளிகேஷன்ஸ் ஸ்டாலில் இருந்தவர்.

"பேப்பர் உள்ளிட்ட அச்சுப் பொருள்களின் அநியாய விலை உயர் வால் புத்தகங்களின் விலை எகிறி விட, பலரும் பராக்குப் பார்த்துப் போய் விடுகிறார்கள். சிலர் ஸ்டாலில் நின்றபடிக்கே ஒரு அறுபது பக்கங்கள் படித்தும் விடுகிறார்கள்!"

"விலை ஏறி என்ன, ஏறாட்டா என்ன? இங்கிலீஷ் புக் ஸ்டால்ஸ் பக்கம் போய்ப் பாருமய்யா. கம்ப்யூட்டர் புக்ஸெல்லாம் பிச்சுக்கிட்டுப் போகுது!" என்றார் சுற்றி வருகையில் எதிர்ப்பட்ட கம்ப் யூட்டர் எழுத்தாளர் இரா. முருகன்.

அந்த ரக ஸ்டால்களில் நோட்டம் விட்டதில், ஆங்கிலப் புத்தகம் வாங்கு கிறவர்கள் அதற்கென்றே தனியாக ஓவர்டைம் செய்து சம்பா தித்திருக்க வேண்டும் என்று தோன்றியது.

ஒரு ஜென் கதைப் புத்த கத்தை (ரெண்டு கல்கி ஸைஸ்) எடுத்து என்னவாம் விலை என்று பார்த்தால் இருநூற்றுத் தொண்ணூற்று மூன்று ரூபாய்.

"பில் போட்டுறட்டுங்களா சார்?" என்று கேட்டவருக்கு ஓர் அசட்டுச் சிரிப்பை அன்பளிப்பாகக் கொடுத்து விட்டு, ரை, ரைட்ஸ்!

பொதுவாக, புத்தகங்கள் தயாரிப்பில் ஒருவித நவீனம் வந்திருப் பதைக் காண முடிந்தது. முன்போல் வரைந்த அட்டைகளும் கரைந்த எழுத்துக்களுமாக இல்லாமல், சகல விதமான சப்ஜெக்டுகளுக்கும் அங்கிங் கெனாதபடி நடிகைகள் அட்டைப் படம். அது நாவலானாலும்சரி, நான்மணிக்கடிகையானாலும் சரி.

எண்டமூரி வீரேந்திரநாத்தின் ஒரு மொழிபெயர்ப்பு நாவலின் அட்டை யில் இரு பெரிய கண்கள் மட்டும். அவை ஜெயப்பிரதாவினுடையதா,

பானுப்ரியாவினுடையதா என்று மூன்று இளைஞர்களுக்கிடையில் சில்லறைச் சர்ச்சை. நம் ஊகம் – சில்க் ஸ்மிதா. (சரியா பப்ளிஷர்?)

'சமைத்துப் பார்' நாலைந்து வால்யூம்கள் வாங்கிக் கொண்டு, பில் போட நின்ற சமயத்தில் ஒரு பெண்மணி, "சாப்பிட்டுப் பார்க்க நன்னா இருக்கோ இல்லியோ, படிக்க டேஸ்டா இருக்கு."

அம்பேத்கரின் அரசியலமைப்புச் சட்ட எண்ணங்கள் ஐந்தாறு வால்யூம்களில் மொத்தமாக வந்திருப்பதும் மலையாளத்தின் முதல் நாவலான இந்துலேகாவின் தமிழ் மொழி பெயர்ப்பும் (பிரமாதமான கெட்-அப்) இந்த வருஷ விசேஷம். அப்படியே ரஜனீஷின் இளமைக்கால அனுபவங்கள் – அவரது சுயசரிதையாக ஆங்கிலத்திலிருந்து மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது. "நல்ல சேல்ஸ்" என்று பூரித்தார் கம்பெனிக்காரர்.

தினசரி மாலை ஐந்தரைக்கு மைக் வைத்து ஏதாவது பிரசங்கமோ, கலந்துரையாடலோ, நேருக்கு நேரோ கண்காட்சிக்கு உள்ளேயே நடத்துகிறார்கள். எதற்கு என்று தெரியவில்லை. என்னதான் அவை சுவாரஸ்யமாக இருந்தாலும் புத்தக வேட்டையில் மூழ்கி இருப்பவர்களுக்கு மைக் இரைச்சல் மகா ரோதனை. யோசிக்க வேண்டும்.

அப்புறம் கேன்டீன். பலகாரங்கள் அத்தனை சுவையாக இல்லை. நாலு ரூபாய் வாங்கிக் கொண்டு, காப்பி என்று ஒரு திரவம் தருகிறார்கள். டிகாக்ஷன் தயாரிக்க, பக்கத்தில் ஓடும் நதித் தண்ணீர் உபயோகிக்கப்படுகிறதா என்று தெரியவில்லை. சரியான கெட்ட வாசனை. (பிளாஸ்கில் காப்பி கொண்டு போய் விடுங்கள்.)




**வெளியே....**

கண்காட்சி நடக்கிற பத்து நாட்களும் காய்தே மில்லத் கல்லூரியின் பிளே-கிரௌண்ட் காதலர்கள் ஸ்பாட் ஆகி விடுவது வழக்கம்.

புல்வெளியில் பட்டாம்பூச்சிகளின் சாம்ராஜ்யம். சீக்கிரமே வேறு இருட்டி விடுகிறதா? வெகு உபயோகம். இங்கே ஸ்பெஷல் ட்யூட்டி போடலாம்.

காம்பவுண்டுக்கு வெளியே, பிளாட்பாரத்தில் சிலர் பழைய புத்தகங்களைக் கடை விரித்திருக்கிறார்கள். உள்ளே கிடைக்காத பல நல்ல புத்தகங்கள் இங்கே கிடைக்க சாத்தியங்கள் தெரிகின்றன. ரமணரும் அயன் ராண்டும் தஸ்லீமா நஸ்ரீனும் ஜேம்ஸ் ஹாட்லி சேஸும் சகாய விலைக்குக் கிடைக்கிறார்கள்.

— கிச்சா

படம் : ஸ்ரீஹரி

# கவர்ச்சி!

செல்வராஜுக்கு எப்படியோ ஒருவழியாக சென்னையில் வேலை கிடைத்தது.

அடுத்தது தங்க ஒரு இடம் தேடியாக வேண்டும். தேடினான்.

புரோக்கர் பின்னால் அலைந்தான். விளம்பரங்களைப் பார்த்தான். எதுவுமே சரிப்பட்டு வரவில்லை. ஒரு வாரமாய் இப்படியே அலைந்து திரிந்ததில் ரயில்வே ஸ்டேஷன் அருகே 'டுலெட்' போர்டுடன் ஒரு வீடு கண்ணில் பட்டது. ஆனால் வீடுதான் பார்க்கும்படியாக இல்லை. பிரிட்டிஷ்காரன் காலத்தில் கட்டப்பட்டிருந்த அந்தக் கட்டடம் பட்டினி கிடந்தவன் வயிறு போல அங்கங்கே உதிர்ந்து போயிருந்தது.

உள்ளே சென்று பார்க்க அவனுக்குத் தயக்கமாக இருந்தது. எனினும் மனசைத் தேற்றிக் கொண்டு சென்றான்.

கூடத்தில் வீட்டுச் சொந்தக்காரர் கனககப்பிரமணியம் ஈஸிசேரில் உட்கார்ந்திருந்தார். செல்வராஜ் வருவதைக் கண்டதும் தொண்டையை செருமிக் கொண்டார்.

"யாரு வேணும்?" என்றார் பரிசிலனையாக.

"ரூம் ஏதாச்சும் காலி இருக்குங்களா?"

"கல்யாணம் ஆயிடுச்சா?"

."இன்னும் இல்லீங்க. இப்பத்தான் வேலையே கிடைச்சிருக்கு."

"சொந்த ஊர் எது?"

"கொட்டாம்பட்டி. மதுரைப் பக்கம்."



கனகசுப்பிர மணியம் மூக்குக் கண்ணாடியை நிமிர்த்திக் கொண்டு ஒருகணம் அவனை ஸ்தூலமாய் ஏறிட்டார். பிறகு கேள்வியைத் தொடர்ந்தார்.

"எங்கே வேலை?"

"ஆர்.பி.ஸி. இண்டஸ்ட்ரீஸ். அம்பத்தூர்ல இருக்கு."

"சம்பளமெல்லாம் ஒழுங்கா கிடைக்குமா?"

செல்வராஜுக்கு எரிச்சலாக வந்தது. ஒரு டப்பா வீட்டை வைத்துக் கொண்டு இல்லாத கேள்வியெல்லாம் கேட்டுக் கொண்டிருக்கிறானே என்று உள்ளுக்குள் கருவினான். எனினும் மேலுக்கு அமைதியாகவே பதிலளித்தான்.

"நான் வேலை பார்க்கிறது பெரிய கம்பெனிங்க. சம்பளமெல்லாம் கரெக்டா கிடைச்சிடும். அதுல ஒண்ணும் சந்தேகமில்லை."

அதன் பிறகுதான் அவருக்கு நம்பிக்கை வந்து எழுந்து கொண்டார்.

"பேச்சிலர்தான் வசதியா இங்கே தங்க முடியும். கல்யாணம் ஆனவங்களுக்கெல்லாம் சரிப்பட்டு வராது. ஒரே ரூம். வாடகை நானூறு ரூபாய். அட்வான்ஸ் நாலாயிரம் ரூபாய்."



திக்கென்றது அவனுக்கு. இந்த பாவிக்கு இவ்வளவு பேராசையா என்று நினைத்துக் கொண்டான். எனினும் ஒப்புக்கு அவருடன் நடந்தான். படியேறி இரண்டாம் மாடிக்குச் சென்றான். படியெல்லாம் கூட அங்கங்கே சிதிலமடைந்திருந்தன. கொஞ்சம் கவனப் பிசகாய்க் கால் வைத்தாலும் விழுந்துவிட வாய்ப்பிருந்தது. போதாக்குறைக்கு வழிநெடுக ஒட்டடை வேறு. இரண்டாம் மாடியில் இருபுறமும் வரிசையாய் அறைகள். ஒரு பூட்டிய அறை அருகே கனகசுப்பிரமணியம் நின்றார்.

"கொஞ்சம் இருங்க வந்துடறேன்" என்று எதிர்த் திசையிலிருந்த ஒரு போர்ஷனுக்குச் சென்றார்.

"செண்பகம்" என்று குரல் கொடுத்தார்.

**மதுமனோ**

அவர் அப்படி அழைத்ததும் உள்ளிருந்து ஒரு பெண் வந்தாள். அவளது யெளவனமும் பளிச்சென்ற அழகும் அவனை ஒருகணம் தடு மாற வைத்தது.

இவள் யார்? இவள் மட்டும் தனியாகவா இங்கு இருக்கிறாள்? இவ்வளவு கொள்ளை அழகுடைய பெண் இங்கு எப்படி வந்தாள்!

கனகசுப்பிரமணியம் அவளிடமிருந்து சாவியை வாங்கிக் கொண்டு நகர்ந்த பிறகும் அவனுக்கு ஒரே சிந்தனையாக இருந்தது. வீட்டுக்காரர் அருகே வந்து தொண்டையை செருமிய பிறகே கவனம் கலைந்தது.

அவர் ஏதோ சொர்க்க வாசலைத் திறந்து காண்பிப்பது போல எதிர்த் திசையிலிருந்த ஓர் அறையைத் திறந்து காண்பித்தார்.

அறை பத்துக்குப் பத்து சைஸில் இருந்தது. உள்ளே ஏகப்பட்ட தூசி. தரையிலும் பாதி இடத்திற்கு மேல் சிமெண்ட் பெயர்ந்திருந்தது. எனினும் வீட்டுக்காரர் ஏகமாய்ப் புகழ்ந்தார்.

"ராசியான வீடு. ஜன்னலை திறந்து விட்டா காத்து அபாரமா கொட்டும். ஃபேனே தேவை யில்லை. அருமையா தூக்கம் வரும்."

ஜன்னலைத் திறந்து பார்த்தான். தென்னை மரங்களும், மாமரங்களும் மிக உயரத்திற்கு வளர்ந்திருந்தன. தென்னங்கீற்று கைக்கு எட்டும் அளவிற்கு கட்டடத்தை உரசிக் கொண்டு நின்றிருந்தது.

எதிர்த்திசை ஜன்னலில் இன்னமும் அந்தப் பெண் செண்பகம் நின்றிருப்பது தெரிந்தது. அவனுக்கு இப்போது அந்த வீட்டின் மீதிருந்த அதிருப்தியும் வெறுப்பும் குறைந்து போயிருந் தது. ஜன்னல் வழியாக வீசிய காற்று உண் மையிலேயே மனசுக்கு இதமாக இருந்தது. ஆனாலும் வாடகையும் அட்வான்ஸையும் நினைத்த போது வருத்தமாக இருந்தது. தன்னால் இயன்ற வரை பேரம் பேசிப் பார்த் தான். பிரயோஜனம் இல்லை. வீட்டுக்காரர் கறாராக இருந்தார்.

'ஜல்ஜல்'லென்று கொலுசு சத்தம் கேட்டது. பொதுவாய் வெளியே எட்டிப் பார்த்தான்.

எதிர் போர்ஷன் செண்பகம் இடையில் தண்ணீர்க் குடம் சுமந்தபடி சென்று கொண் டிருந்தாள். அவளது இடை அசைவும் கொலுசு சத்தமும் ஜதி பிசகாமல் இருந்தன. வீட்டுக் காரரும் அவனது மனசைப் புரிந்து கொண் டவராய் பேசினார்.

"ஜன்னல் வழியா பார்த்தா ஜோரா பொழுது போயிடும். ரயில் வர்ற சத்தம் கேட் டதும் இறங்கிப் போய் ரயிலை பிடிச்சுடலாம்."

செல்வராஜ் ஒருவழியாய்த் தலையசைத் தான்.

"சரிங்க. வீட்டை யாருக்கும் விட்டுடாதீங்க. இப்ப ஒரு நூறு ரூபாய் டோக்கன் அட்வான்ஸ் கொடுக்கறேன். மீதி அட்வான்ஸை சாயங் காலமா வந்து கொடுத்துடறேன்."

அவரும் அதற்கு ஒப்புக் கொண்டார்.

செல்வராஜுக்கு அங்கு குடிபுகுந்த ஆரம்பத்தில் அசௌகரியமாகவும், அன்னிய மாகவும் இருந்தது. ஆனால் போகப் போக பழகி விட்டது. எதிர் போர்ஷன் பெண்ணின் தரிசனமும், அவளது பார்வையின் வருடலும் அவனுக்கு இதமாக இருந்தது. அவளிடம் நல்ல சமயமாய்ப் பார்த்துப் பேச வேண்டுமென்று ஆசைப்பட்டான்.

ஒருநாள் காலை சீக்கிரமாகவே விழித்து அவள் வருகைக்காக ஆவலாய்க் காத்திருந் தான்.

## வாசகர்களே, சிறந்த சிறுகதைகளைத் தேர்ந்தெடுங்கள்!

ஒவ்வொரு மாதமும் கல்கியில் வெளி யாகும் சிறுகதைகளில் எது சிறந்த கதை? இனி வாசகர்களாகிய நீங்களே முடிவு செய்யலாம்! அப்படி உங்களால் தேர்ந் தெடுக்கப்படும் சிறுகதையின் ஆசிரியருக்கு சிறப்புப் பரிசு வழங்கப்படும்!

இதற்கு நீங்கள் செய்ய வேண்டியது என்ன?

இந்த மாதத்திலிருந்து ஒவ்வொரு வார மும் கல்கியில் வெளியாகும் சிறுகதை களைப் படித்து, அந்த மாதம் முழுவதும் வெளியான சிறுகதைகளில் எது சிறந்த சிறுகதை என்று நீங்கள் கருதுகிறீர்களோ அதை எங்களுக்குத் தெரியப்படுத்துங்கள். எந்தக் காரணத்தினால் அது சிறந்தது என்று நினைக்கிறீர்களோ அந்தக் காரணத்தையும் இரண்டே வரிகளில் சுருக்கமாக எழுதி அனுப்புங்கள். ஒவ்வொரு மாதக் கடைசி இதழிலும் இதற்கென்று ஒரு தனி கூப்பன் பிரசுரமாகும். அந்தக் கூப்பனில்தான் உங்கள் தேர்வையும் கருத்தையும் எழுதி யனுப்ப வேண்டும்.

இந்த (7.1.96) இதழிலிருந்தே இந்தத் தேர்வுக்குத் தயாராகுங்கள். இந்த மாதம் நீங்கள் தேர்ந்தெடுத்து அனுப்புவதற்கான கூப்பன் 28.1.96 இதழில் வெளியாகும்.

பரிசு, நீங்கள் தேர்ந்தெடுக்கும் சிறுகதை ஆசிரியருக்கு மட்டும்தானா? வாசகர்களுக்கு இல்லையா? நிச்சயம் உண்டு! பரிசு பெறும் கதைக்கான சிறந்த இரு வரி விமர்சனம் எழுதியவருக்கு ஒரு சிறப்புப் பரிசு!

— ஆசிரியர்

## 'சுருக் - நறுக்'கென்று ஒரு சொல்லோவியம் - 13

# சுற்றம் என்பது....

'சுற்றம் பார்க்கில் சுற்றம் இல்லை' என்பது உண்மை என்றாலும் சுற்றம் என்பது எப்படி இருக்க வேண்டும்? உங்களுக்கென்று ஓர் அபிப்பிராயம் இருக்குமே!

கீழுள்ள கூப்பனில் உங்கள் எண்ணத்தை - அபிப்பிராயத்தை ஒரு சொல்லோவியமாக எழுதி யனுப்புங்கள். பிரசுரமாகும் ஒவ்வொரு சொல்லோவியத்துக்கும் 50 ரூபாய் பரிசு. மொத்தம் 26 வாரம் நடக்கும் இப்போட்டியில் அதிக முறை பரிசுபெறும் ஒருவருக்கு மெகா பரிசாக ஒரு ஜோடி டைடன் கைக்கடிகாரங்கள்!

**முடிவு தேதி : 16.1.96.**

ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

- ஆர்.

சுற்றம் என்பது........................................

.......................................................

.......................................................

.......................................................

.......................................................

பெயர் : ........................................

முகவரி : ........................................

.......................................................

.......................................................

.......................................................

அரைமணி நேரம் ஆகியும் அவள் வராமல் போகவே எட்டிப் பார்த்தான். எத்தனை முறை பார்த்த போதும் ஏமாற்றமே மிஞ்சியது. அதன் பிறகு அவளது தரிசனம் கிடைக்கவே இல்லை.

அவனுக்கு ஒரே சிந்தனையாக இருந்தது. செண்பகத்திற்குத் திடீரென்று என்ன ஆகியிருக்கும்? எங்கு சென்றிருப்பாள்? உடல்நலம் சரியில்லாமல் ஊருக்குப் போயிருப்பாளா? வீட்டுக்காரரிடம் கேட்டால் என்ன? சட்! வேண்டாம். ஒருவேளை அவர் தவறாக நினைக்கக்கூடும்.

ஒருநாள் பலத்த மழை பெய்தது. ஜன்னலை சாத்திய பிறகும் ஓட்டை வழியே தண்ணீர் தெறித்து அறைக்குள் வழிந்தோடியது. இது குறித்து முறையிட வீட்டுக்காரரைத் தேடிச் சென்றான். ஆனால் அவர் அதே தெருவில் கடைசியில் இருந்த துணிக்கடை ஒன்றின் சொந்தக்காரரான தம் நண்பருடன் பேசிக் கொண்டிருந்தார்.

"எப்படி தயானந்தம் வியாபாரம் நடக்குது?"

"என் வியாபாரத்துக்கு என்ன கேடு? ஆமா உன் வீட்டு போர்ஷன்ல எல்லாத்துக்கும் ஆள் வந்தாச்சா?"

"வந்தாச்சு தயானந்தம். எல்லாம் உன் தயவுதான். நீ மட்டும்இப்படியொரு செட் அப் பண்ணித் தரலைன்னா வாடகைக்கு ஆள் வருமா?"

தயானந்தம் மெலிதாய் சிரித்தார். அந்தச் சிரிப்பினூடே அனுபவம் பளிச்சிட்டது.

"எந்த விஷயத்திலும் காலத்துக்கு ஏத்த கோலம் வேணும் கனகு. இல்லேன்னா பிழைக்க முடியாது. நீயும் பார்த்துக்கிட்டுத் தானே இருக்கே, எந்தக் கடையிலே எது வாங்கினாலும் இல்லை டீ.வி.ல ஏதாச்சும் பார்த்தாலும் இல்லை வாரப் பத்திரிகை ஏதாச்சும் வாங்கினாலும் ஏதோ ஒண்ணு இனாம் கொடுக்கிறதும் இல்லேன்னா பரிசுத் திட்டங்களை அறிவிக்கிறதும்! இப்படி கவர்ச்சி காட்டித்தானே ஜனங்களை இழுக்கறாங்க. கவர்ச்சி இல்லேன்னா வியாபாரம் இல்லேன்னு அல்லவா ஆயிப் போச்சு."

"ஆமா தயானந்தம். நீ சொல்றது ரொம்ப கரெக்ட். அடுத்த வாரம் முதல் மாடியில ஒரு ரூம் காலியாக இருக்கு. வாடகைக்கு ஆள் பார்க்கணும்."

"கவலைப்படாதே! இந்தத் தடவை என் கடைல வேலை பார்க்கிற வகமதிய அனுப்பிச்சு வைக்கிறேன். அவ செண்பகத்தை விட அழகு. அவ அப்படி இப்படி அசைஞ்சு நடக்கிறதைப் பார்த்தா ஆள் க்ளீன் போல்ட் ஆயிடுவான். அதுக்கப்புறம் நீ பத்தாயிரம் ரூபாய் அட்வான்ஸ் கேட்டாலும் அப்பீலே இல்லாம தந்துட்டுப் போவான். நீ போ. ஜமாய்ச்சுடலாம்."

செல்வராஜ் ஸ்தம்பித்து நின்றான்!

# அமராவதி பெனிபிட் பண்ட் லிமிடெட்

பார்புகழும் புதுமையான திட்டங்களில் பங்கு பெற அன்புடன் அழைக்கிறது.

## பிக்சட் டெபாசிட் :

| காலம் | நாட்கள் | | | வருடங்கள் | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | 46 | 90 | 180 | 1 | 2 | 3 | 4 | 5 |
| வருட வட்டி விகிதம் | **13%** | **14%** | **15%** | **17%** | **18%** | **18.5%** | **19%** | **20%** |

## 'கங்கா' - மறு முதலீட்டுத் திட்டம் :

| தொகை ரூ. | வருடங்கள் 5 | 7.5 | 10 | 15 | 20 |
|---|---|---|---|---|---|
| | முதிர்வு பெறும் தொகை ரூ. | | | | |
| **1,000** | **2,500** | **4,000** | **6,400** | **16,500** | **42,000** |
| **5,000** | **12,500** | **20,000** | **32,000** | **82,500** | **2,10,000** |
| **10,000** | **25,000** | **40,000** | **64,000** | **1,65,000** | **4,20,000** |

## 'யமுனா' தொடர் வைப்புத் திட்டம் :

| தொகை ரூ. | முதிர்வு பெறும் தொகை ரூ. 1 வருடம் | 2 வருடங்கள் | 3 வருடங்கள் |
|---|---|---|---|
| **1,000** | **1,180** | **1,400** | **1,660** |
| **5,000** | **5,900** | **7,000** | **8,300** |
| **10,000** | **11,800** | **14,000** | **16,600** |

## வைஸ் பென்ஷனர் திட்டம் :

| உங்கள் முதலீடு | மாதா மாதம் | முதிர்வு காலம் |
|---|---|---|
| ரூ.10,000 | நீங்கள் பெறும் வட்டி தொகை ரூ.100 | 60-வது மாதத்தில் ரூ.20,000 |

வைஸ் பென்ஷனர் திட்டத்தில் குறைந்தபட்ச முதலீடு ரூ.10,000/-

**C.N. Venkatasubramanian,**
**Chairman,**
Retd. Asst. General Manager,
United India Insurance Co. Ltd.



Transactions with Members only.

# அமராவதி பெனிபிட் பண்ட் லிட்.

**(C.I.No.18-29133/94)**

**CORPORATE OFFICE : 24, CONRAN SMITH ROAD, GOPALAPURAM, MADRAS - 600 086. PHONE : 825 2716.**

**H.O. :** அக்ரஹாரம் கொழுமம், உடுமலைப்பேட்டை **(Tk)** கோவை **(Dt.)**

**B.O. :** 205, வேளச்சேரி மெயின் ரோடு, சேலையூர், சென்னை-73. போன் : 235 7415. * பழனி ரோடு, நெய்க்காரப்பட்டி, திண்டுக்கல் அண்ணா மாவட்டம். * 1000, மேட்டுப்பாளையம் ரோடு, R.S. புரம், கோயமுத்தூர்.

YOUNG-INDIA



• வி.டி.ஐயில் கூட்டம்....

# "கலை உணர்வு பெருகிவிட்டது!"

"இங்கே இருபது ரூபாய் முதல் இரண்டு லட்சம் ரூபாய் வரை விலையுள்ள பரிசுப் பொருட்கள் உள்ளன. பார்க்கிறீர்களா?" என்றார் நாக முனுசாமி. அண்ணா சாலையிலுள்ள விக்டோரியா டெக்னிகல் இன்ஸ்டிடியூட்காரர் இவர்.

"இருபத்தைந்து வருடங்களுக்கு முன் வி.டி.ஐக்கு வந்தவர்கள் பெரும்பாலும் அயல்நாட்டுச் சுற்றுலாப் பயணிகள் மட்டும்தான். நம் பாரம்பரியக் கலைப் பொருட்கள் மேல் அவர்களுக்கு மிக ஆர்வம். ஆனால் இன்று நம்மவர்களுக்கும் அந்த ஆர்வம் தொற்றிக் கொண்டுவிட்டது!" என்றார் முனுசாமி.

"நம் மக்கள் மத்தியிலும் கலை உணர்வு அதிகரித்துவிட்டது. வீடுகளில் ஷோ-கேஸ்களில், டி.வி.யின் மேலெல்லாம் கலைப் பொருட்களை அலங்காரமாக வைக்கத் தொடங்கிவிட்டார்கள். இந்த உணர்வில்தான் நண்பர்களுக்கோ, உறவினர்களுக்கோ பரிசு வழங்க, கலைப் பொருட்களையே அதிகம் தேர்ந்தெடுக்கிறார்கள். எந்த பட்ஜெட்டுக்கும் ஏற்ற பொருட்கள் இருக்கிறதல்லவா?" என்று இவர் கேட்கிறார்.

பூம்புகார் கலைப் பொருள் அங்காடியின் மகாலிங்கம் வேறொரு தகவல் சொன்னார்.

"தாராளமயமாக்கப்பட்ட பொருளாதாரக் கொள்கைகளால் இன்று நம் நாட்டுக்கு நிறைய அயல்நாட்டு வியாபாரிகள், தொழில் வல்லுநர்கள் வருகிறார்கள். அவர்களுக்கு நினைவுப் பரிசுகள் வழங்க நம்மவர்கள், கலைப் பொருட்களையே அதிகம் விரும்புகிறார்கள். இதனால் நல்ல சேல்ஸ் ஆகிறது" என்கிறார் இவர்.

"வாழ்க்கையில் இதுவரை ஒரே ஒரு தரம்தான் காசு கொடுத்து ஒரு கைவினைப் பொருள் வாங்கினேன். மரத்தில் செதுக்கிய கீதோபதேசக் காட்சி. அந்தச் சம்பவம் ஏற்படுத்திய பாதிப்பு ஆயுசுக்கும் மறக்காது!" என்றார் கீதா என்ற ஒரு குடும்பத் தலைவி.

"கல்லூரியில் உடன் படித்த ஒரு பெண் என் நெருங்கிய தோழி, திடீரென்று காணாமல் போய்விட்டாள். கிட்டத்தட்ட ஆறு மாதம் கழித்து, அவளுக்குத் திருமணம் ஆகிவிட்ட விஷயம் தெரிந்தது! அதுவும் எதேச்சையாக தேனாம்பேட்டை சிக்னலில் நான் பயணம் செய்து கொண்டிருந்த பஸ் நின்றபோது, ஸ்கூட்டரில் அவள்! அவசரத்தில் அட்ரஸ் மட்டும் சொல்லிவிட்டு, "வீட்டுக்கு வா பேசலாம்!" என்று சொல்லிப் போய்விட்டாள்.

"காதல் விவகாரமாயிருக்கும் என்று ஒருவாறு ஊகித்துக் கொண்டேன்.

"போய்ப் பார்ப்பது என்று முடிவு செய்த பின், கடைக்குப் போய் தேடித் தேடி ஓர் அழகிய கீதோபதேசச் சிற்பம் வாங்கிக் கொண்டேன், திருமணப் பரிசாக.

"அட்ரஸ் தேடி, அவள் வீட்டைக் கண்டுபிடித்து, கோபம் - வருத்தம் எல்லாம் கொட்டியபின் அவளது மணவாழ்க்கை பற்றிப் பேச்சைத் திருப்பினேன்.

"அவள் கணவர் வேறு மதம். இரு வீட்டார் எதிர்ப்பு, அவசரத் திருமணம் என்று, எல்லாம் எதிர்பார்த்ததுதான்.

"எதிர்பார்க்காதது ஒன்று - இவள் சைவம் என்பதால், அசைவம் சாப்பிடுகிற அவள் கணவர், அதை அறவே விட்டுவிட்டதும், மதப் பிரச்னை ஏதும் எழக்கூடாது என்பதால் இருவருமே அவரவர் வழிபாடுகள், மதச்சின்னங்களை விலக்கி இருப்பதும் தெரிந்து வியந்து போனேன்! அவர்கள் வீட்டில் எந்தக் கடவுள் படமும் இல்லை!

"இந்தப் புனிதத்தை, நான் கொண்டு போன அந்தப் பரிசுப் பொருள் கலைத்துவிடக் கூடாது என்று, பரிசு ஏதும் கொடுக்காமலே திரும்பிவிட்டேன்!

"பின்னால் அந்த கீதோபதேசச் சிற்பம் வேறு ஏதோ ஒரு திருமணத்தில் போய்விட்டது என்றாலும் மறக்க முடியாத அனுபவம் அது!"

— கௌதம்

படம் : ஸ்ரீஹரி

# லாட்டரியில் ஒரு கோடி!

கருத்து : குல்லுரா



**லாட்டரியில் முதல் பரிசாகத் தங்களுக்கு ஒரு கோடி ரூபாய் விழுந்தது என்று இவர்கள் கேள்விப்பட்டால்....**



# புண்ணிய காரியங்களை ஸங்கிராந்தியில் ஏன் அனுஷ்டிக்க வேண்டும் ?



மேஷம் முதலிய பன்னிரெண்டு ராசிகளில் கிரமமாக மாதந்தோறும் சஞ்சரிக்கும் சூரிய பகவான்.

ஒரு ராசியிலிருந்து வேறு ராசிக்கு பிரவேசிக்கின்ற சமயம் ஸங்கரமணம் ஸங்கிராந்தி என்று சொல்லப்படுகிறது. அந்தப் புண்ணிய காலங்களில் செய்கிற ஸ்நானம், தானம், ஹவ்யம், கவ்யம், முதலிய புண்ணிய காரியங்களுக்கு ஏழு வருஷம் சூரியன் நல்ல பலன்களைக் கொடுக்கிறார். ஆகையால் புண்ணிய காரியங்களை அவசியம் அனுஷ்டிக்க வேண்டும்.

தேவலர் : ஸங்கராந்தி சமயம் சூட்க்ஷமமானது. நம்மால் அறிய முடியாதது. ஆகையால் ஸங்கரமணத்திற்கு முன்பு முப்பது பின்பு முப்பது நாழிகைகள் புண்ணிய காலமாகும்.

| ராசி | ஸங்கிரமணத்தின் நாமதேயம் | (ப்ருஹஸ்பதி வாக்குப்பலன்) புண்ணிய காலம் | புண்ணிய பலன் |
|---|---|---|---|
| மகரம் | உத்திராயணம் | பின் இருபது நாழிகை | கோடி புண்ணியம் |
| கும்பம் | விஷ்ணுபதீ | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| மீனம் | ஷடசீதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| மேஷம் | விஷீ | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| ரிஷபம் | விஷ்ணுபதீ | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| மிதுனம் | ஷடசீதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| கர்கடகம் | தக்ஷிணாயனம் | முன் இருபது நாழிகை | கோடி புண்ணியம் |
| சிம்மம் | விஷ்ணுபதீ | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| கன்னி | ஷடசீதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| துலா | விஷீ | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| விருச்சிகம் | விஷ்ணுபதீ | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| தனுசு | ஷடசீதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |

- ஸம்க்ஷேப தர்மசாஸ்திரம்

# எப்போதும் புத்தகம்!

"இரண்டு ஆண்டு களுக்கு முன் வலயப் பட்டியிலிருந்து ஒருவர் எங்கள் பதிப்பகத்துக்கு வந்தார். அவர் வீட்டுத் திருமணம் ஒன்றிற்கு வரவிருந்த அத்தனை பேருக்கும் ஒரு மறக்க முடியாத பரிசளிக்க வேண்டும் என்பது அவர் விருப்பம். என் தந்தையின் சுயமுன்னேற்ற நூல் ஒன்றின் ஆயிரம் பிரதிகளை ஒட்டுமொத்தமாக வாங்கிப் போன அவரை மறக்கவே முடியாது" என்கிறார் அகிலன் கண்ணன். தமிழ்ப் புத்தகாலயத்தின் சொந்தக்காரர்.

கண்ணதாசன் பதிப்பகத்தின் காந்தி கண்ணதாசனும், "மணிவிழா போன்ற வைபவங்களுக்கு 'அர்த்தமுள்ள இந்துமதம்' முழு செட்டையும் 'கிஃப்ட் பாக்' செய்து வாங்கிப் போகிறவர்கள் ஏராளம்!" என்கிறார்.

ஆனால் இதுபோன்ற புத்தக விரும்பிகள் மொத்தத்தில் கொஞ்சம் குறைவுதான் என்பது அகிலன் கண்ணனின் அபிப்பிராயம்.

பள்ளிகளில் புத்தகப் பரிசு அதிகம் வழங்குகிறார்கள். ஆனால் புத்தகங்கள் அங்கே ஆசிரியர்களின் விருப்பத்தில் வாங்கப்படுபவை. பரிசு பெறும் பையன்கள் திறந்து கூடப் பார்க்காமல் போய் விடுகிற சந்தர்ப்பங்கள் உண்டு.

"இதற்கு நாங்கள் ஒரு வழி வைத்திருக்கிறோம்" என்கிறார்கள் ஹிக்கின்பாதம்ஸ்காரர்கள்.

ரூ. 50, 100 என்று இங்கு கிடைக்கிற புத்தகப் பரிசுக் கூப்பனை வாங்கி, பரிசளித்து விட்டால், பரிசு பெறுபவர் தம் விருப்பப்படி ஹிக்கின்பாதம்ஸ் சென்று நூல்களைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம்!

சாகித்ய அகடமி உட்பட வேறு பல பதிப்பு நிறுவனங்களும் பின்பற்றத் தொடங்கியிருக்கும் இத் திட்டம், கடந்த ஒரு வருட காலமாக சிறப்பாகச் செயல்பட்டு வருவதாகச் சொன்னார்கள்.



கடந்த பத்தாண்டுகளாக எவ்வித சந்தர்ப்பத்துக்கும் புத்தகங்களை மட்டுமே அன்பளிப்பாக வழங்குவதைக் கொள்கையாகக் கொண்டிருக்கும் பத்திரிகையாளர் மாலனைச் சந்தித்தோம்.

"வழக்கமாகத் திருமணங்களில் கடிகாரம், பிளாஸ்க் போன்ற பரிசுகள் நிறைய வரும். ஒன்றுக்கு மேற்பட்டு ஒரே பரிசு வந்து விடுகிற போது உபயோகிக்க இயலாமல் போகும். ஆனால் புத்தகங்களாக வழங்கினால் இந்தப் பிரச்னை இல்லை.

பரிசுக்கெனப் புத்தகங்களைத் தேர்ந்தெடுக்கும் போது, யாருக்கு வழங்கப் போகிறேனோ, அவர்களது ரசனைக்கே முக்கியத்துவம் தருவேன்; அது என் டேஸ்ட்டுக்கு உகந்ததாக இல்லாமல் போனாலும் கவலைப்பட மாட்டேன்! மிக நெருக்கமான நண்பர்களுக்கு என்றால் என் புத்தகங்களையே பரிசாகத் தந்து விடுவேன்!" என்கிறார் மாலன்.

- மௌஷ்மி

## உங்கள் காதலின் அடையாளமாகக் கொடுத்த முதல் பரிசு என்ன.....? என்று சில ஜோடிகளிடம் கேட்டோம் :

"அப்போது நான் ஜீன்ஸ் டீ ஷர்ட் என்று நவீனமாக உடுத்துவேன். அந்த உடைகளுடன் பொருந்தக்கூடிய அழகான பல வர்ண scarfதான் ரகு எனக்குக் கொடுத்த முதல் அன்பளிப்பு. பிங்க், கறுப்பு நிறங்கள் அதிகமாக இருக்கும். ராஜஸ்தானிலிருந்து வாங்கி வந்தார். ஆசை தீர உபயோகித்தேன். பிறந்த வீட்டில் என் உறவினர் குழந்தைகள் எங்களுக்குக் கல்யாணம் ஆன சமயத்தில், அதைப் பார்த்து மிகவும் ஆசைப்பட்டதால் அக்குழந்தைகளிடம் கொடுத்துவிட்டேன். காதல் பரிசு என்றாலும் குழந்தைகள், கேட்ட போது மறுக்க மனம் வரவில்லை... பிற்பாடு ரகுவிடம் விளக்கிச் சொன்னேன்..." என்கிறார் பிரபுதா.

பிரபுதாவை விட ஒரு படி மேலே போய் "அவள் என்னவோ கொடுத்தாள் - என்னவென்று ஞாபகமில்லை..." என இடிக்கிறார் ரகு!

"பர்ஃப்யூம் வாங்கிக் கொடுத்தேன்.. அதைக் கூட அவரேதான் கடையில் தேர்ந் தெடுத்துக் கொண்டார்..." என்று பிரபுதா நினைவூட்டுகிறார்.

"கல்யாணமாகி இரண்டு குழந்தை பிறந்தாச்சு — இப்போ அதெல்லாம் மறந்துட்டார்!" என்று அவர் ஆரம்பிக்க, நாம் அமைதிக்கு அப்பீல் செய்ய வேண்டியிருக்கிறது!

அட்டைப் படத்தில் தன் புதிய மனைவிக்குப் பரிசளிக்கும் ரஜீந்தர் ஒரு இன்டீரியர் டெகரேஷன் நிறுவனம் நடத்துபவர். கலை உணர்வுக்குக் கேட்க வேண்டுமா? ஆனால், "அன்பளிப்புகளின் மூலம்தான் அன்பைக் காட்ட முடியும் என்று நான் கருதவில்லை" என்கிறார். "'அஃப்கோர்ஸ், புடைவைகள், வாட்ச், ஹாண்ட் பேக் என்று அவ்வப்போது திடீரென்று வாங்கி வந்து அசத்துவது உண்டு."

அவர் மனைவி மீரா, "இன்னிக்கு எனக்கு பர்த்டே. சொல்லி வெச்சா மாதிரி நீங்க கிஃப்ட் பத்திக் கேக்கறீங்க. என்ன வாங்கித்தரப் போறார்னு ஒரே எக்ஸைட்டிங்கா இருக்கு!" என்றார்.

ரிஸர்வ் போலீஸில் பணியாற்றி விட்டு வந்திருக்கும் ரஜீந்தர், "முன்பெல்லாம் டெல்லி, சண்டிகர்னு நிறைய சுத்துவேன். இங்க கிடைக்காத பொருள்களாகப் பார்த்து வாங்கி வருவேன். இப்ப அது போல எதுவும் செய்ய முடிவதில்லை" என்கிறார். (அதுக்காக, பர்த்டேவும் அதுவுமா சும்மா விட்டுறாதீங்க சார்!)

"பரிசுகளை நான் வெறும் பொருளாகப் பார்ப்பதில்லை. மாறாக, அளிப்பவர்களின் மனத்தை அதில் காண்கிறேன். அதனால்தான் இது நான் வரை எனக்குக் கிடைத்திருக்கிற பரிசுப் பொருட்களை உடைக்

முதன் மு



• யோகா தம்பதி

காமல், தொலைக்காமல் பாதுகாத்து வருகிறேன்'' என்கிறார் யோகானந்த். இப்படிச் சொன்னால் தெரிய வில்லை இல்லையா? போட்டோ கிராஃபர் யோகா.



• ரகு தம்பதி

# தலாகக் கொடுத்த காதல் பரிசுகள்!

யோகா வீட்டில் குட்டி குட்டியாக நிறைய பரிசுப் பொருட்கள். ஒரு பர்ஸ் நிறைய பழைய ரூபாய் நோட்டுகள். அன்பளித்தவர்களின் கையெழுத்து, தேதிகளுடன் கிட்டத் தட்ட இருபது வருடங்களுக்கு மேலாக செலவழிக்கப் படாமல், வங்கியில் போடப் படாமல் அப்படியே இருக்கும் ரூபாய் நோட்டுகள்! இது என்ன சென்ட்டிமென்ட்?

''சென்ட்டிமென்ட் ஒன்றுமில்லை. அந்தப் பணம் என்னிடம் இருக்கிறவரை, பரிசளித்தவர்களின் நினைவு கூடவே இருக்குமல்லவா? சமீபத்தில் கூட டைரக்டர் பாலசந்தர், 'யோகா எப்போதும் நிறைகுடம்' என்று எழுதி, ஆயிரம் ரூபாய் (இரண்டு ஐநூறு ரூபாய்த் தாள்கள்) அன்பளிப்பாகத் தந்திருந்தார், ஒரு சந்தர்ப்பத்தில், 'பாலசந்தர் அன்பளிப்பாகத் தந்ததில், நினைவாக ஏதாவது பொருள் வாங்கி வைத்து விடலாம்; அதைக் கொடுத்து விடுங்கள்' என்று என் மனைவி கேட்டாள்... நானா தருவேன்? 'வாங்குவதற்கு' நான் பணம் தந்து விட்டு, அந்த நோட்டுகளைப் பாதுகாத்து விட்டேன்!'' என்று சொல்லும் யோகா, தம் வாழ்வில் மறக்க முடியாத பரிசாகச் சொல்வது ஒரு சூட்கேஸை.

''அசப்பில் ஹைதர் காலத்தது போலத் தெரிந்தாலும் அதன் பின்னால் உள்ள கதை வெகு சுவாரஸ்யம்!'' என்கிறார்.

''என்னுடையது - காதல் திருமணம். திருமணத்துக்கு முன் என் மனைவி திருட்டுத்தனமாக அவள் வீட்டுக்குத் தெரியாமல் பணம் சேர்த்து வாங்கிக் கொடுத்த சூட்கேஸ் இது! எந்த ஊருக்குப் போனாலும், வெளிநாடு என்றாலும், எத்தனை நாள் கேம்ப் என்றாலும் இந்த சூட்கேஸ் தான் இன்று வரை. பழையதுதான்; அவுட்-ஆஃப் பேஷன் தான்.... அதனாலென்ன? அது கூட இருந்தால் அவள் இருப்பது போல எனக்கு!''

ஒரு தரம் கொச்சின் போயிருந்தபோது, குலுங்கும் ஆட்டோ பயணத்தில், அந்த சூட்கேஸ் நழுவி ரோடில் விழுந்து, உருண்ட போது துடித்துப் போய் விட்டேன்'' என்ற யோகா, தம் மனைவிக்கு அப்படி ஏதும் மறக்க முடியாத பரிசளித்திருக்கிறாரா என்று கேட்டால், ''அவரே எனக்குப் பரிசுதானே!'' என்கிறார் சாவித்ரி யோகா! அட்டை வண்ணப்படம்.... வேறு யார்....? யோகாதான்!

படங்கள் : ஸ்ரீஹரி



• முத்தையா ராமநாதன்

# ஹிப்னாடிஸம் மூலம் இமாலய சாதனை!

**''மனோ வசியம் (ஹிப்னாடிஸம்) மூலம் பள்ளி–கல்லூரி மாணவர்களை, படிப்பில் மிகத் திறமைசாலிகளாக்கி விடலாம்.''**

**மா**தத்தில் ஓரிருமுறை தினசரிகளில் விளம்பரம் கொடுத்து, மாணவர்களுக்காக ஹோட்டல் அரங்குகளில் இரண்டு நாள் செமினார் நடத்துகிறார் முத்தையா ராமநாதன். பாடங்களில் ஆர்வமற்று, அல்லது ஆர்வமிருந்தும் புரிந்து கொள்ளச் சிரமப்படுகிறவர்களின் உள் மனத்துடன் (Sub-Concious mind) பேசி, அவர்களின் பிரச்னைகளைத் தெரிந்து கொண்டு, தீர்வு சொல்வது இவர் பாணி.

எல்.ஐ.சி.யில் கிளார்க்காக இருந்தவர், மனோதத்துவம், ஹிப்னாடிஸத்தில் ஏற்பட்ட ஆர்வம் காரணமாக வேலையை விட்டார்.

''அமெரிக்காவில், இந்தத்துறையில் நிபுணர்களாக இருக்கும் சிலரிடம் சென்று ஹிப்னாடிஸம் கற்றுக் கொண்டேன். பின், நிறையப் படித்தேன். ஆழ்மனத்துடன் பேசுவது மூலம் அரிய பல சாதனைகள் சாத்தியம் என்று புரிந்தது. திரும்பி வந்து, Mind Dynamic Centre ஆரம்பித்தேன். கல்வித் துறையில் இந்தத் தொழில் நுட்பத்தைப் பயன்படுத்துவதன் மூலம், நிலவும் தேக்க நிலையை மாற்ற முடியும் என்று தோன்றியது. செய்து கொண்டிருக்கிறேன்!''என்று சுருக்கமாகத் தம் ஃப்ளாஷ்-பேக்கை சொல்கிறார் மு.ராமநாதன்.

**ஹி**ப்னாடிஸத்தை இவர் எப்படி உபயோகிக்கிறார் என்பதைத் தெரிந்து கொள்ளும் முன், ஹிப்னாடிஸம் என்றால் என்ன என்பதைப் புரிந்து கொள்ளுதல் அவசியம்.

மனிதனுக்கு உள்மனம், வெளி மனம் என்று இரண்டு உண்டு. வெளிமனம் என்பது, நாம் சாதாரணமாக யோசிப்பது, உணர்வது, தகவல்களை அறிவது. உள்மனம்- நாம் சேகரிக்கும் தகவல்களைப் பாதுகாக்கும் ஒருவித ஸ்விஸ் பாங்க். மூணாங்கிளாஸில் பக்கத்து சீட் பையன் தொடையைக் கிள்ளியதிலிருந்து நமது பால்ய கால நினைவுகள், அனுபவங்கள், வெற்றி–தோல்விகள், சந்தோஷ-சோகங்கள் முதற் கொண்டு, நேற்று சாப்பிட்ட ராயர் ஓட்டல் மெதுவடையில் ஒரு சிட்டிகை உப்பு தூக்கல் என்பது வரை உள்மனத்தில் பதிவாகி இருக்கும்.

மேலோட்டமாக ஒருவரிடம் பேசும் போது அவர் பல உள்மன விஷயங்களை மறைக்கலாம். சொல்லக் கூச்சப்படலாம். ஆனால் இந்த உள்மனத்துடன் பேசும்போது இதெல்லாம் சாத்தியமில்லை. ஓட்டை விழுந்த கார்ப்பரேஷன் பைப்பில் தண்ணீர் கொட்டுவது போல, விவரங்கள் சும்மா ஜோராக வந்து விழும்.

இப்படிப்பட்ட உள்மனத்துடன் பேசுவதற்கு ஒத்தாசை பண்ணுவதற்குத்தான் ஹிப்னாடிஸம் கை கொடுக்கிறது.

உட்காரவைத்து ஒருவித தூக்க நிலைக்குக் கூட்டிப்போய் உள் மனப் பூங்கதவைத் தாள் திறந்து, ஹிப்னாடிஸ்ட் அதனோடு சம்சாரிப்

பார்.

"உனக்கென்ன கோளாறு? கணக்கு வரலியா? ஏன் வரலை? அல்ஜீப்ரா உதைக்குதா? ஃபார்முலா மனப்பாடம் ஆகறதில்லையா? ஏன் ஆக மாட்டேங்குது? கவனம் போதலை. 'அலங்கார்ல அயர்ன் மங்கி ரிலீஸ் ஆகி இருக்குதே, இப்பப் போனா டிக்கெட் கிடைக்குமா'ன்னு யோசிச்சிட்டிருந்தா எப்படி மனப்பாடம் ஆவும்? 'நானா யோசிக்கிறேன்? mind உடன் பேசித் தான் ஆக வேண்டும். தினசரி தியானம், யோகா மூலம் இப்படிப் பட்ட 'மென்ட்டல் பிளாக்'கைத் தவிர்க்கலாம். என்றாலும் எத்தனை பேர் இதையெல்லாம் கர்ம சிரத்தையாகச் செய்கிறார்கள்? அவர்களுக்கு என் செமினார் உதவும்!"என்கிறார் மு.ரா.

சுருக்கமாக, தன்னம்பிக்கையை- சாதிக்கும் உத்வேகத்தை, உள்மனத்தில் பதியச் செய்வது




அது தன்னால யோசிக்கத் தோணுதே'ங்கறியா? நல்லது. அயர்ன் மங்கி வந்து உனக்கு பதிலா பரீட்சை எழுதுமா? மார்க்கு போடுமா? பின்னால சோறு போடுமா?'ன்னு கேட்டுப் பாரு. போடறேன்னு சொல்லிச்சின்னா எனக்கும் சேர்த்து ஒரு டிக்கெட் வாங்கு."

- இந்த ரீதியில் உள்மனத்துடன் பேசிப் பேசி, படிப்பின் மீது ஒரு கட்டாய ஆர்வத்தை, ஈடுபாட்டை வரவழைக்க முடியும் என்பது முத்தையா ராமநாதனின் சித்தாந்தம்.

"தவிர, ரொம்பனான வாழ்க்கையில் ஏதோ ஒரு கட்டத்தில் 'மென்ட்டல் பிளாக்' ஆகி அதன்மூலம் படிப்பில், இதர விஷயங்களில் ஈடுபாடு இல்லாமல் ஒருவித விரக்தி மனப்பான்மை ஏற்பட்டு விடும். அந்த 'பிளாக்'கை உடைத்து, உற்சாக டானிக் ஏற்ற, Sub-concious இவரது சேவை.

"ஆனால் இதற்காக ஒருவரின் உள்மனத்தைக் குடைந்து மனோவசியம் செய்வது சரியாகுமா...?" என்று கேட்டால், "இது மருத்துவம் அல்ல. கெமிஸ்ட்ரி சமாசாரமல்ல. மாய மந்திரமுமல்ல... மேல் நாடுகளில் உயர்ந்த கல்வித் தரத்துக்காகப் பல பல்கலைக் கழகங்களில் கூட கடைப்பிடிக்கப்படும் ஒரு கலை,"என்கிறார் முத்தையா.

"அதுசரி. உங்கள் இரண்டுநாள் செமினாருக்கு எவ்வளோ ஃபீஸ் வாங்கறீங்க சாரே?"என்று கேட்டால் "ரெண்டாயிரத்துக்கு ஐநூறு குறைச்சல்"என்கிறார் மு.ரா.

பேட்டி : **ஔரங்கசீப்,**
படம் : **ஸ்ரீஹரி.**

# பொங்கல் – உங்கள் வாழ்வை வளமுறச் செய்யும் அறுவடைத் திருநாள் – இது ஆனந்தப் பெருநாள்

CRISIL FA+

## 21 st Century's

# "Family-Deposit"

வாழையிலை தோரணங்கள், வண்ண வண்ணப் பூச்சரங்கள், வீதியெங்கும் கோலங்கள், ஊரெங்கும் கோலாகலங்கள். தித்திக்கும் செங்கரும்பு, செழுமிக்க மஞ்சள்கொத்து, தேங்காய் பழங்களுடன் வீடுகள்தோறும் கொண்டாட்டங்கள். ஆம், இது மங்கலம் பெருகும் பொங்கல் திருநாள் – பூமியின் பலனை கைமீது கண்டுகளிக்கும் பொன்னாள். பால்பொங்க, நெஞ்சமெல்லாம் மகிழ்ச்சியில் பொங்க, சொந்தங்கள் கூடிக்கொண்டாடும் இந்த நன்னாளில் உங்களை வாழ்த்துவதே எங்களுக்கு மகிழ்ச்சி.

உங்கள் நலன் கருதியே எங்கள் முதலீட்டு நிறுவனம் சேவை புரிந்து வருகிறது. **ஃபேமிலி டெபாஸிட்** – இத்திட்டம் உங்கள் பணத்தின் பாதுகாப்பிற்கும் எதிர்கால நல்வாழ்விற்கும் உறுதியளிக்கிறது. இது உங்கள் குடும்பத்தினருக்கு ஒரு செல்வக் களஞ்சியம்.

வளம்கொழிக்கும் இந்த அறுவடைத் திருநாளில், கூடுதலாகப் பெறும் வருமானத்தை மேலும் பன்மடங்காய் பெருக்க திட்டமிடுங்கள். காலத்தின் தேவை அறிந்து சேவை புரியும் எங்கள் நிறுவனத்தில் முதலீடு செய்யுங்கள். அது உங்கள் எதிர்காலத்தை பாதுகாக்கும். புன்னகை ஒளிவீசும் இந்த பொங்கல் பெருநாளில் வாழ்வில் இனிமைகள் நிறையட்டும்.



**ட்வெண்டி ஃபர்ஸ்ட் செஞ்சுரி மானேஜ்மென்ட் சர்வீஸஸ் லிமிடெட்**

**நிர்வாக அலுவலகம் :**

"ஸ்ரீவித்யா" 32, டி.டி.கே. சாலை, சென்னை – 600 018.

போன் : 4995155, 4994821. ஃபேக்ஸ் : 044-4994826

**கிளைகள் :**

பம்பாய், கோயம்புத்தூர், ஐதராபாத்

Now 15% interest

உங்கள் ஃபேமிலி டெபாஸிட் பற்றி மேலும் கூறுங்கள்.

பெயர் : ..............................

விலாசம் : ..............................

..............................

போன் : ..............................

ட்வெண்டி ஃபர்ஸ்ட் செஞ்சுரி மானேஜ்மென்ட் சர்வீஸஸ் லிமிடெட், ஸ்ரீவித்யா, 32, டி.டி.கே. சாலை, சென்னை – 600 015.

Sans - 21/TCMS/950904

# மாலை மயங்குகின்ற நேரம்

**இதுவரை...**

கிருஷ்ணசந்திரன்– குடும்பத்தாரோடு சிறிதும் ஒட்டுதல் இன்றி இருப்பவன். கூடவே பெண்கள் தொடர்பு. இது தெரிந்தும் அவனைத் திருத்திவிட முடியுமென்கிற நம்பிக்கையில் அவனைத் திருமணம் செய்து கொள்கிறாள் உதயரேகா. எவ்வளவோ முயன்றும் அவன் திருந்துகிற வழியாய் இல்லை; அவள் யாரோ ஒரு பெண் என்பதைப் போலவே நடந்து கொள்கிறான். பேசிக் கொள்ள வேண்டிய சந்தர்ப்பங்களில் திடீரென்று அவன் கண்கள் சிவப்பதும், உடல் தள்ளாடுவதும் ஏன்? விடை தெரியாமல் குழம்பிய நேரத்தில்தான், விவாகரத்து செய்து கொள்வதுதான் இருவருக்குமே நல்லது என்று ஒரு குண்டைத் தூக்கிப் போடுகிறான். முடியவே முடியாது என்று மறுத்து விட்ட உதயரேகா, ஓர் ஓவியப் போட்டிக்காக ஓவியம் வரைவதில் ஈடுபடுகிறாள்...

**இனி...**

## 13

கிருஷ்ணசந்திரன் உடனே ரிசீவரை வைத்து விடவில்லை என்பதே வசுமதிக்கு ஓரளவு ஆறுதலாக இருந்தது. வழக்கமான கடுமையும் சற்றுக் குறைவாகத் தோன்றவும், வாய்ப்பை விட்டு விடாமல், "ஒரே ஒரு சின்ன உதவி செய்ய வேண்டும் அண்ணா..."என்று மிகவும் பவ்வியமான குரலில் தொடங்கினாள்.

"என்னது? அங்கே இங்கே காரை எடுத்துக் கொண்டு உனக்காக அலைவது என்றால் என்னால் முடியாது"என்றது அண்ணனின் கறாரக் குரல்.

"அய்யய்யோ! அதெல்லாம் கேட்க மாட்டேன், அண்ணா. ஒரு சிறு யோசனை மட்டும். அதுவும் எனக்காக இல்லை. அண்ணிக்காகத் தான்..."

"அண்ணிக்கு என்ன?"என்று மீண்டும் இடை வெட்டினான் அண்ணன்.

"அண்ணிக்கு என்ன பிடிக்கும் என்று... அண்ணிக்குப் பரிசு வாங்க வேண்டும் இல்லையா? யோசித்துப் பார்த்தால், அண்ணிக்குப் பிடித்தமானதாக அதே சமயம் அண்ணியிடம் இல்லாததாக என்று எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை. அதனால்... ஏதாவது வாங்க வேண்டும் போல இருந்தால் அண்ணி உங்களிடம் சொல்லியிருப்பார்கள் இல்லையா? அப்படி ஏதாவது இருந்தால் வாங்கிக் கொடுக்கலாமே என்று..."

அவனுக்கும் எதுவும்... ஏன், எதுவுமே தெரியவில்லை. அவன் மனைவிக்கு என்ன பரிசு வாங்க வேண்டும் என்பது மட்டுமல்லாமல், அந்தப் பரிசை இப்போது ஏன் வாங்க வேண்டும் என்பதும் கூடப் புரியவில்லை. உதயரேகாவின் பிறந்தநாள் இப்போதைக்கு இல்லை. திருமண நாளுக்கோ இன்னமும் பல மாதங்கள் இருந்தன. அப்போது....

சட்டெனத் தலையை உலுக்கிவிட்டுக் கொண்டான் கிருஷ்ணசந்திரன். தங்கையிடம் தன் அறியாமையைக் காட்டிக் கொள்ள மனமின்றி, "உதிக்கு என்ன தேவை என்று கண்டு பிடித்துக் கொடுப்பது கஷ்டம். அதைவிட, எந்தக் காரணத்திற்காகக் கொடுக்க வேண்டும் என்பதை வைத்து யோசிப்பது நல்லது. கொஞ்சம் பொறு"என்றவன், சில விநாடிகள் ரிசீவரின் வாயை மூடிக் கொண்டு இருந்து விட்டு, மீண்டும் கையை எடுத்து, "அதுபோலச் செய்யுங்கள்"என்று யாரிடமோ உத்திரவிடுவது போலப் பாவனை செய்து விட்டு, "நீ என்னவோ... எதற்காகவோ வாங்க வேண்டும் என்றாயே. இங்கே வேலையில் மறந்து விட்டேன். திரும்பவும் சொல்"என்றான்.

சற்றும் சந்தேகப்படாமல் அண்ணனின் வலையில் வசுமதி விழுந்தாள். "அதுதான் அண்ணா, அண்ணிக்குப் பரிசு. 'இந்திர விழா' கலைப் போட்டியில், அண்ணி அனுப்பிய சித்திரத்துக்கு முதல் பரிசு கிடைத்திருக்கிறதல்லவா? அதைப் பாராட்டி அண்ணிக்கு ஏதாவது கொடுக்க வேண்டும் என்று எனக்கு ஆசை..."

சித்திரமும் வரைவாளா அவனுடைய மனைவி! அதுவும் போட்டியில் முதல் பரிசு வாங்கும் அளவுக்கு!

உடனே முகம் மாறிவிட, "படம் வரையத் தேவைப்படும் பொருட்களையோ, அலங்கார சாதனங்களையோ வாங்குவது அவ்வளவு சரியில்லை. அதைவிட, சித்திரங்களைப் பாதுகாப்பாக வைப்பதற்காக உருளை வடிவில் பல வேறு நீளங்களில் அழகான டப்பாக்கள் கிடைக்கின்றன. அதில் ஏதாவது அழகான

வேலைப்பாடு உள்ளதாக வாங்கிக் கொடுக்க லாம். இனி வைத்து விடு. எனக்கு வேலை இருக் கிறது"என்று முடித்து, பதிலுக்குக் காத்திராமல், ஒரு 'பை'கூடக் சொல்லாமல் ரிசீவரைக் கிடத் தினான் கிருஷ்ணசந்திரன்.

சற்று நேரம் ஜன்னல் வழியே தெரிந்த வானத்தை வெறித்தான். டெலிஃபோனை எடுத்து சில பேரோடு பேசினான். தலைமை நிர்வாகியை அழைத்து, அன்று சற்று சீக்கிர மாகவே கிளம்பப் போவதால், மற்றவற்றை அவரே கவனித்துக் கொள்ள வேண்டும் என்று கூறி கவனிக்க வேண்டுவனபற்றிய விவரங்களையும் உரைத்துவிட் டுக் கிளம்பினான்.

கிருஷ்ணசந்திரன் வீட்டை அடைந்தபோது, அவன் மனைவி மொட்டை மாடியில் படு மும்முரமாக வேலையில் ஈடுபட்டிருந்தாள். தோட்ட வேலை. ஏதோ நர்சரி யிலிருந்து நிறையச் செடிகள் வாங்கி வந்திருந்தாள் போலும்.

மண்ணும் உரமும் நிரவி, நிரப்பப்பட்டிருந்த பல தொட்டி களில் செடிகள் நடப்பட்டிருந் தன. மேலும் அருகில் கிடந்த சில செடிகளைச் சீராக நட்டுக் கொண்டிருந்தாள் அவள்.

சில நாட்களாக உதயரேகா கண்ணிலேயே படாதிருக்கவும், "விவாகரத்து' அதிர்ச்சி; அறைக் குள்ளேயே கிடக்கிறாள்

**ரமணி சந்திரன்**



என்றுதான் கிருஷ்ண சந்திரன் எண்ணியிருந்தான்.

ஆனால், அறைக்குள்ளேயும் ஓய்ந்து கிடக்காமல் உருப்படி யான வேலைதான் செய்திருக் கிறாள்! ஓவியம் முடிந்ததும் தோட்டம் திட்டமிட்டுச் செய் கிறாள்.

பாதியளவுக்குப் பச்சை வண்ண, ஒளி ஊடு ருவும் ஓட்டுக் கூரையும், மீதி வெறும் வெளி யாகவும் கிடந்த இடம். இந்தச் சிறு செடிகள் வளர்ந்தால் இந்த வெற்றுமாடி ஒரு சோலை வனமாகும்! கீழே வைத்தால் அதுவும் தோட் டக்காரன் கவனிப்பில் அடங்கிவிடும். எனவே அவனே செய்வதற்காக இங்கே செய்கிறாள்!

சும்மா, எதையாவது வளவளப்பவள் இவற் றைப் பற்றி ஒருவார்த்தை அவனிடம் மூச்சு விடவில்லையே! அன்றையப் பேச்சு அதிக மாகத்தான் பாதித்து விட்டது போலும்!

செடிகளை நட்டு முடித்த உதயரேகாவுக்குத் தொட்டிகளின் வரிசையில் திருப்தி ஏற் படவில்லை. இந்தப் பெரிய தொட்டிகளை இடம் மாற்றி வைக்க வேண்டும் என்று குனிந்து தூக்க முயன்றவள், "பொறு, பொறு. தூக்காதே"என்ற கணவனின் குரலில் திடுக்கிட் டுத் திரும்பிப் பார்த்தாள்.

அருகில் வந்து, "இவ்வளவு பெரிய தொட் டியை உன்னால் தூக்க முடியாது. எங்கே வைக்க வேண்டும் சொல்லு. நான் தூக்கி வைக்கிறேன்,"என்றான் கிருஷ்ணசந்திரன்.

பெரிய உதவிதான்! நெஞ்சில் ஓங்கிச் சம்மட்டியால் அடித்து இமயத்தையே அதன் மேல் தூக்கி வைத்து விட்டு, இந்தத் தொட்டி



''நான் என்ன தப்பா கேட்டுட்டேன். தலைவர் இப்படி கோபிச்சுக்கிட்டு போறார்?''

''சோடா, சாப்பிடறீங்களான்னு கேட்டியே, தலைவர் என்னிக்காவது சோடாவை தனியா சாப்பிட்டிருக்காரா, அதான்!''

– புனிதா கோபாலகிருஷ்ணன்

---

யைத் தூக்குவதில் உதவி செய்ய வருகிறா னாக்கும்!

''பரவாயில்லை... நானே பார்த்துக் கொள்வேன்,''என்றாள் அவள் செடியைப் பார்த்தபடி.

''இதையெல்லாம் வேலையாட்களை வைத்துச் செய்வதற்கென்ன? நீ போய் இதை எல்லாம் தூக்கிக் கொண்டு...''என்று எரிச்சல் காட்டினான் கிருஷ்ணசந்திரன்.

''இவ்வளவு நேரம் அவர்கள்தான் செய்தார்கள். அடுக்கியதில் இந்த ஒருவரிசை மட்டும் மாற்ற வேண்டும் போலத் தோன்றியது. அதனால்தான்... பரவாயில்லை. நாளைக்கு அவர்களையே செய்யச் சொல்லிக் கொள்வேன்... என்று பேசினில் கைகளைக் கழுவினாள் உதயரேகா.

'பேசின்' அருகே தாங்கியில் கிடந்த டவலில் அவள் கை துடைக்கவும், ''வாழ்த்துக்கள்!'' என்றான் கிருஷ்ணசந்திரன் அமைதியாக.

நிமிர்ந்து பார்த்துவிட்டு, முறைப்படி ''நன்றி'' உரைத்துவிட்டு, ''வக வேலை போல'' என்றாள் அவள், உணர்ச்சியற்ற குரலில்.

''ஆமாம். ஆனால் அவனுக்கு முன், உன் மூலம் எனக்குத் தெரிந்திருக்க வேண்டு மில்லையா?''என்று கேட்டான் கணவன்.

கையை மீண்டும் மீண்டும் அழுந்தத் துடைத்தபடி, ''அக்கறை இல்லாதவர்களிடம் போய் எப்படிச் சொல்வது? எதற்காகச் சொல்வது?''என்றாள் உதயரேகா பதிலுக்கு.

அருகில் வந்து, அவள் கையிலிருந்த துவாலையை வாங்கி, மீண்டும் தாங்கியில் தொங்கவிட்டு விட்டு, ''நாளை மாலை நீ வேறு எங்காவது போக வேண்டியிருக்கிறதா?''என்று வினவினான் அவன்.

''நாளை மாலைதான் பரிசளிப்பு''என்றாள் அவள் சுருக்கமாக.

''அது ஏழு மணிக்கு முடிந்து விடுமாமே. அதன் பிறகு?'' வேறு எதுவும் இல்லை என்று, அவள் தலையசைக்கவும், ''அப்படியானால் அதன்பின் ஓர் இடத்துக்கு என்னோடு வரமுடியுமா? அங்கேயே சாப்பிட்டுவிட்டு வரலாம்.''

அன்றைய விவாகரத்து குண்டை நினைக்கையில் உதயரேகாவுக்கு மறுக்க வேண்டும் போல இருந்தது. ஆனால் முதல் தடவையாக, அவனாக அழைக்கையில் மறுக்கவும் அவளுக்கு மனம் வரவில்லை. எனவே சம்மதமாக, ''ஏதேனும் பார்ட்டியா? என்ன மாதிரி உடை, நகை அணிய வேண்டியிருக்கும்?''என்று விசாரித்தாள்.

''விழாவுக்கு அணிவதே பொருத்தமாக இருக்கும்''என்றான் கிருஷ்ணசந்திரன்.

**பி**ரமாதமாகக் கண்ணைப் பறிக்கும் விதமாக ஆடை அணி மணிகள் புனைந்து அலங்காரம் செய்து கொள்ள வேண்டும் போல உதயரேகாவுக்கு ஆசையாக இருந்தது. 'பார்ட்டி' முழு நேரமும் அருகிலிருந்து கணவன் காண்பான் அல்லவா?

ஆனால், பரிசளிப்பு விழாக்களின் போது மட்டும் மிகையாக அலங்கரித்துக் கொண்டு வருகிறவர்களைப் பார்க்க அவளுக்கே எப்போதுமே பிடிக்காது. அவளே அந்த அசட்டுத்தனத்தை எப்படிச் செய்வது?

சிறு மன அலைபாய்தலின் பின், சற்று அடக்கமாகவே அலங்கரித்துக் கொண்டாள். ''இளநீல வண்ணத்தில் அடர் நீலக் கரையில் ஜரிகைகள் வேய்ந்த ஷிபான் சேலை; பொருத்தமான சட்டை, காதணி, கழுத்தணிகள், முகம் திருத்துவதில் மட்டும் அதிக நேரம் செலவு செய்து விட்டு, 'பெயின்ட்' அடித்தது போல இருக்கிறது என்று அதையும் கழுவி நீக்கி விட்டு, மீண்டும் வழக்கமான முறையில் அலங்காரம் செய்து கொண்டாள்.

அரசியல் தொடர்புள்ளவர் யாரும் கலந்து கொள்ளாததால், விழா குறிப்பிட்ட நேரத்தில் தொடங்கி, குறிப்பிட்ட நேரத்தில் நிறைவடைந்தது. புகுந்த, பிறந்த வீடுகளில் அனைவருமே வந்திருந்தது உதயரேகாவுக்கு மகிழ்ச்சியளித்தது.

படத்தின் பிரதி ஒன்றை எடுத்து வைத்துக் கொண்டு, அவளது அசலை அழகாகப் 'பாக்' செய்து அவளிடமே கொடுத்து விட, கிருஷ்ண சந்திரன், அவளிடமிருந்து அதை வாங்கி மணிவாசகத்திடம் கொடுத்து அனுப்பினான்.

எல்லோரும் கிளம்பிவிட, உதயரேகாவை அழைத்துக் கொண்டு நிதானமாகக் கிளம்பினான் அவள் கணவன். அவன் அழைத்துச் சென்ற இடமோ ஆனந்தமான ஆச்சரியமாக அவளைப் பிரமிக்க வைத்தது.

ஒரு பெரிய ஓட்டலின் தோட்டத்தில் விருந்து ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. ஒரு புறமாய், ஆள் உயரத்து அகல போர்டில் அடர் நீலநிற வெல்வெட் பின்னணியில் 'மணமார்ந்த வாழ்த்துக்கள்' என்று பொன் எழுத்துகள் ஒளிர, இருபுறத்துக் குடும்பங்களும் முழுமையுமே அங்கே இருந்தன. மணிவாச

கமும் இருந்தான்.

உற்சாக ஆரவாரத்துடன் எதிர் கொண்ட உறவினருக்கு உரிய விதமாய்ப் பதில் அளித்தவளை, அந்த உற்சாகம் தொற்றிக் கொள்ளவில்லை. மற்றவர் பிரமிக்க இந்த ஏற்பாடு செய்தவன் தருவதாகச் சொன்ன 'மணவிலக்கு' அவன் மனதைவிட்டு அகல மறுத்தது. ஊராரை ஏமாற்றவே இந்த ஏற்பாடு என்றுதான் எண்ணத் தோன்றியது. ஆனால், நாளை இந்த உறவினரிடம் அந்த 'விவாகரத்'தை எப்படி விளக்குவான்?

உள்ளே அடித்த புயலை வெளிக்காட்டாமல், இன்முகத்துடனே வளைய வந்தான் உதயரேகா.

உணவுத் தட்டுகள் அகற்றப்பட்ட, பழசாலடும் ஐஸ்கிரீமும் வந்தபோது, மணிவாசகம் எழுந்தான். வாழ்த்து எழுதப்பட்ட போர்டின் முன் ஒரு தாங்கியை அமைத்து, அதில் பரிசு பெற்ற படத்தை அதன் உறையை அகற்றி மாட்டினான்.

பழத்துண்டுகளும் ஐஸ்கிரீமுமாக, அவரவர் விரும்பிய வண்ணம் கலந்து எடுத்துக் கொண்டு, அதைச் சுவைத்தபடியே, எல்லோரும் படத்தின்முன் குழுமினர்.

காலைச் சிவப்புமாறி, கீழ்வானம் பொன்னிறம் கொண்டுவிட்ட நேரம். தன்னை மூடி மறைக்கும் கருமேகத் திரளை மீறிக் கொண்டு ஆதவன் வானில் எழும்ப முயற்சிக்கிறான். இங்கே பூமியில் ஒரு பாத்தி நிறைய சூரியகாந்தி மலர்கள். சூரியனின் வரவுக்காக ஏக்கத்துடன் எட்டிப் பார்க்கின்றன. பூக்களின் இதழ்கள், காம்பு முதலியவற்றை உதயரேகா வரைந்திருந்த விதம், என்னவோ அந்தச் சூரிய தரிசனத்திற்காகவே பிறந்து, வளர்ந்து, மலர்ந்து, அதைக் காணாமல் ஏங்கிக் கொண்டிருப்பது போன்ற பிரமையை ஏற்படுத்தியது. கூடவே, தூரத்தில், வரி வடிவமான ஒரு பெண்ணும், 'ஐயா, இன்னமும் வெளிச்சத்தைக் காணோமே'என்பது போலக் கழுத்தை நீட்டி எட்டிப் பார்க்கிறாள் என்றது படம்.

இலையின் வரிகள், பூவின் நடுவே மகரந்தப் பைகள், மொட்டுகள், தரை என்று சின்னச் சின்ன விஷயங்கள் கூடக் கவனித்து வரையப்பட்டிருப்பதைச் சிலாகித்தார் செல்வரங்கம்.

"எங்கள் அண்ணி எப்போதும் அப்படித்தான். கல்லூரியில் எங்கள் 'டீம்' விளையாடப் போகும்போது, தண்ணீர், குளுகோஸ் எல்லாம் கவனமாய் எடுத்து வைப்பார்கள். எல்லோரும் அண்ணி காப்டன் என்பதாலேயே எங்கள் 'டீம்' லக்கி என்பார்கள்''என்று பெருமையடித்தாள் வசுமதி.

''எங்கள் அக்கா சின்ன வயதிலிருந்தே இப்படித்தான். எனக்கு 'ரெக்கார்டு' நோட்டில் படம் எல்லாம் வரைந்து தருவாள், தெரியுமா? இதுமாதிரி அழகாய் வரைவாள்''என்று பெருமையில் தன் பங்கு உரிமையை நிலை



"புறம்போக்கு நிலத்தை ஆக்கிரமிக்கிறதுல ரெண்டு எம்.எல்.ஏ.க்களுக்குள்ள தகராறு வந்துடிச்சு."

"அப்புறம்...?"

"அமைச்சர், தானே அதை எடுத்துக்கிறதா சொல்லி பிரச்னைக்கு முற்றுப்புள்ளி வச்சிட்டார்!"

- சீர்காழி வி. ரேவதி

❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋

நாட்டினாள் பானுரேகாக.

எல்லோரும் ஒவ்வொரு விதமாய்ப் பாராட்ட, படத்தை வெறித்து நோக்கிய கிருஷ்ணசந்திரன் மட்டும் எதுவுமே சொன்னான் இல்லை.

மணிவாசகம் அதைக் கவனித்துவிட்டு, நண்பனின் தோளில் எச்சரிப்பதுபோலக் கைவைக்க, ஒரு பெருமூச்சுடன், நடப்புக்குத் திரும்பினான்.

அப்போதும் என்ன காரணமோ- கிருஷ்ணசந்திரன் தன் உறவினர் பக்கம் முகம் திருப்பாமல் வெளிப்புறம் பார்த்தபடியே அருகே அழகாக வளர்க்கப்பட்டிருந்த குத்துச் செடிகளின் பக்கமாகச் சென்றான்.

யாரும் கவனிக்கிறார்களா என்பதுபோல மணிவாசகத்தின் பார்வை சுழலத் தொடங்கவும், கைக்கிண்ணத்தில் இருந்த பழக் கலவையைக் கிளறி, அதில் ஒரு செர்ரிப் பழத்தை கண்டு பிடித்து எடுத்துவாயில் போட்டு கொண்டு மீண்டும் மணிவாசகத்தின் பக்கம் கீழ்ப்பார்வையாய் நோக்கினாள் உதயரேகா.

அதற்குள் மணிவாசகமும் நண்பனைத் தொடர்ந்து செல்லக் கண்டு, செடிகொடிகளை ரசிப்பவள் போன்ற பாவனையில் அவளும் அவர்களைப் பின் தொடர்ந்தாள்.

யாரும் அறியாமல், ஒரு வழியாக உதயரேகா அந்த நண்பர்களைக் கண்டு கொண்ட போது, கிருஷ்ணசந்திரன் தன் நண்பனிடம் "சித்திரத்தைப் பார்த்ததில் இருந்து, நெஞ்சில் பாறாங்கல்லை ஏற்றி வைத்ததுபோல இருக்கிறது மணி. படம் பிரதிபலிப்பது அவளது ஏக்கத்தையே அல்லவா! இந்தக் கொடுமை உதிக்கு நான் செய்தேனே; இன்னமும் செய்யப் போகிறேனே என்று மனம் நோகிறது''என்று மிகுந்த வருத்தத்துடன் கூறிக் கொண்டிருந்தான்.

(தொடரும்)

# ENCAR'S GOLDEN MONTH

## 21.12.95 முதல் 21.1.96 வரை மட்டும்

## 100% சொத்து உத்திரவாதம்

**24%** வருட வட்டி **+** ஊக்கத்தொகை **8%**



தங்க நாணயம்

**+**

## விசேஷ சலுகை

தங்க நாணயம் **+** Free Entry Coupon for Slogan Contest to win over 918 Prizes **+** புத்தாண்டு பரிசு



ஹீரோ ஹோண்டா

பல நிதி நிறுவனங்களுக்கு நடுவில் முதலீட்டிற்கு முதன்முதலாக
அசையா சொத்துக்களை உத்திரவாதமாக அளித்து
பல்லாயிரக்கணக்கான முதலீட்டாளர்களின் நம்பிக்கை
பெற்ற உங்கள் என்கார் நிறுவனம் வழங்கும்

| ராயல் டெபாசிட் | |
|---|---|
| குறைந்தபட்ச டெபாசிட் | வட்டி விகிதம் |
| ரூ. 10,000/- | [illegible] |
| 24% + 8% | |

| மெகா பாண்ட் | |
|---|---|
| குறைந்தபட்ச டெபாசிட் | முதிர்வு தொகை |
| ரூ. 5,000/- | ரூ. 10,000/- |
| 33 மாதங்கள் | |

| எவரெஸ்ட் பாண்ட் | |
|---|---|
| குறைந்தபட்ச டெபாசிட் | முதிர்வு தொகை |
| ரூ. 10,000/- | ரூ. 30,000/- |
| 60 மாதங்கள் | |

| யூனிட் விலை | முதிர்வு தொகை |
|---|---|
| ரூ. 3,000/- | 10வது வருடம் 15,000/-<br>15வது வருடம் 30,000/-<br>20வது வருடம் 90,000/- |
| 20 வருடங்கள் | |

| யூனிட் விலை | முதிர்வு தொகை |
|---|---|
| ரூ. 1,500/- | ரூ. 1,00,000/- |
| 20 வருடங்கள் | |

We accept Deposits Strictly under RBI Regulations Section 45S Chapter III C RBI Act 1934



தங்க நெக்லஸ்

Investments made by Depositors in ENCAR Hi-Grow Investment are reinvested by us, in our following profit making Companies

- ★ ENCAR Animal Farms & Exports (P) Ltd.,
- ★ ENCAR Cashew Gardens (P) Ltd.,
- ★ ENCAR Dairy Foods Ltd., ENCAR Builders (P) Ltd.,
- ★ ENCAR Estates (P) Ltd.,



# ENCAR Hi - Grow Investments

**Head Office** – 134/2, Royapettah High Road, Near Vivek & Co, Luz Corner, Mylapore, **MADRAS - 4.** Ph : 8526887. Fax : 91-44-840638

**Regd. Office** – 10 & 11 Varadharaju Complex, (Easwari Complex), Near Chatram Bus Stand, **TRICHY - 2.** Ph : 25963 Fax : 0431 - 462750 Telex : 0455-316 ACES IN

**Regl. Office** – 1/23, Hanumanthappa Layout, Near Manipal Center, 1/A, Ulsoor Road, **BANGALORE - 42.** Ph : 5598092

**Branches**
- 512-B, N.S.R. Road, Gowri Complex, Annamalai Stores Upstairs, Saibaba Colony, **COIMBATORE - 11.** Ph : 445062, 445065
- No. 267, Advaida Asrama Road, A.V.K. Nagar, Opp. to New Bus Stand, **SALEM - 4.** Ph : 448873
- No. 7, west Vadampokki street, Near Perumal Koil, **MADURAI - 1.** Ph : 35667
- Popular Complex, 31/A, North Pradhakshnam Road, Near Thinappa Theater, **KARUR - 2**

## For Safe and Secured Investments - ENCAR

"மிகவும் நெருங்கியவர்களாக இருப்பார்கள். ஆசையுடன்தான் கொடுப்பார்கள். நாமும் மகிழ்ச்சியுடன்தான் வாங்கிக் கொண்டு வீட்டுக்கு வருவோம். கொடுத்தவர் நினைவாக எப்படியாவது அந்த அன்பளிப்பைப் பயன்படுத்தி விட வேண்டும் என்றுதான் முயற்சி செய்வோம்... ஆனால் முடியாது! ஆவலுடன் பீரோவைத் திறந்து ஒவ்வொரு புடைவையுடனும் பொருத்திப் பார்த்தால் ஒரு புடைவைக்குக் கூட அந்த பிளவுஸ் துணி மேட்சாகாது! என்னதான் பிரியமானவர்கள் கொடுத்தது என்றாலும் பிளவுஸுக்காக புடைவை வாங்குவது என்பதெல்லாம் பத்திரிகை ஜோக்குகளில்தான் வர முடியும்..." என்கிறார் ரேவதி.

"இந்த பிளவுஸ் பிட் கொடுக்கும் வழக்கம் செண்டிமென்ட் காரணமாக ஏற்பட்டிருக்க வேண்டும். சுமங்கலிகளுக்குரிய ஐட்டங்களில் ஒன்றாக அது கருதப்பட்டது. இப்போதுதான் காலம் மாறி விட்டதே! இந்த வழக்கத்தையும் மாற்றி விடலாம்..." என்று கருத்துச் சொல்வதுடன், கொண்ட கொள்கையில் உறுதியாக, தமது மகனின் உபநயனத்துக்கு வந்தவர்களுக்கெல்லாம் சிறிய பேப்பர் மாஷ் பொம்மைகளை வாங்கிப் பரிசளித்துள்ளார் ரேவதி!

"நாம் கொடுக்கும் அன்பளிப்பு நீடித்திருக்கவும் வேண்டும்; உபயோகமாகவும் இருக்க வேண்டும்; கலையுணர்வை வெளிப்படுத்துவதாகவும் இருக்க வேண்டும். ரவிக்கைத் துணியைச் சரியான நிறத்தில், மட்டுமின்றி அளவிலும் தேர்ந்தெடுக்க வேண்டும். இது நடைமுறை சாத்தியமில்லை என்பதால் பொம்மைகள் வாங்கித்தர முடிவு செய்தோம்" என்கிறார்.

ரேவதிக்கு நேர் விரோதமாகச் செயல்படுபவர்களும் உண்டு!

"ஒரு தனியார் மருத்துவமனை உரிமையாளர்கள் குடும்பத்தில் சமீபத்தில் கல்யாணம் நடந்தது. விருந்தினருக்கு அன்பளிப்பாக வழங்க ஆயிரத்து நூறு பிளவுஸ் பிட்டுகளை எங்கள் கடைதான் 'சப்ளை' செய்தது" என்கிறார் 'தருணி லோகா' உரிமையாளர் லக்ஷ்மி வைத்யநாதன்.

"அவ்வளவையும் தனித்தனியாக 'கட்' செய்து கவர்களில் போட்டு 'பாக்' செய்து கொடுத்தோம்... இதே போல் நிறைய பேர் வாங்கிப் போகிறார்கள்" என்கிறார்.

"இப்போதெல்லாம் பிளவுஸ் பிட் என்பது வெறும் பச்சை நீலம் என்ற நிறங்களில் இல்லாமல் பலவிதமான பாரம்பரிய டிசைன்களில் கிடைக்கின்றன. அதுவும் கைத்தறி ரவிக்கைத் துணிகளென்றால் கல்லூரி மாணவிகள் கூட விரும்பி தைத்துக் கொள்கிறார்கள். பிளெயின் புடைவைகளுக்கு டிசைன் ரவிக்கை அணிவதும், கான்டிராஸ்ட் நிறங்களில் ரவிக்கை அணிவதும் இப்போது ஃபாஷன் என்பதால் அன்பளிப்பாகத் தரப்படும் ரவிக்கைத் துணிகளைப் பெரும்பாலானோர் பயன்படுத்த முடிகிறது. கைத்தறி துணி

# எழுபத்தைந்து சென்டிமீட்டர் ஏமாற்றம்!

களில் அகலம் கூடுதலாக இருக்கும். எனவே துணி போதாமல் வீணாயிற்று என்ற குறைக்கும் இடமில்லை.... எங்கள் கடையில் நிறைய பேர் வாங்கிப் போய் அன்பளிப்பாகத் தருகிறார்கள்."

ரவிக்கை துணிகளுக்குப் பெயர் போனதாக இருந்த 'தருணி லோகா' இன்று புடைவைகளுக்கு போஸ்ட் கிராஜுவேட்டாகி விட்டது! தருணி - இளம் பெண். லோகா - உலகம். பிளவுஸ் 'மாட்ச்' ஆவது இருக்கட்டும்; கடையின் பெயர் எப்படி மாட்ச் ஆகிறது பார்த்தீர்களா?!

- அம்மு

படம் : ஸ்ரீஹரி



# கட்டுரை இல்லை; திரில்லிங் கதை!

❖ ''தேர்தல் நெருங்குது, அழல் பெருகுது'' தலையங்கம் விழிப்புணர்ச்சியை எழுப்பிடும் வகையில் சிறப்பாக எழுதப் பட்டிருந்தது.
பெங்களூர் - 21, ப. மூர்த்தி.

❖ 'டெலிகாம் அழல்' பற்றிய தலையங்கம் படித்தேன். தலையங்கம் மிக அருமை. இதில் ஏற்பட்ட தவறுகளுக்குத் தமது அனுபவமின்மையே காரணம் என்ற சுக்ராமின் வாதம் சிறு குழந்தை கூட ஏற்றுக் கொள்ள முடியாத ஒன்று. இது போன்ற அனுபவமில்லாதவர்களை அமைச்சரவையில் சேர்த்தது பிரதமரின் மிகப் பெரிய தவறு. அதைவிட மிகப் பெரிய தவறு அவரை இன்னமும் அமைச்சராக நீடிக்க விட்டிருப்பதுதான்.
தஞ்சாவூர் - 5, வனிதா ரவி.

❖ ரஜினியின் பிறந்த நாள் பேட்டியைத் தயாரித்து, தொலைக் காட்சி நிலையத்தாருக்கு கேஸட்டை கொடுத்த நிகழ்ச்சியை விவரித்த போது திரில்லிங் கதையைப் படிப்பது போல் இருந்தது.
மணியக்காரன்பாளையம்,
ஏ.ஜி. கல்யாணசுந்தரம்.

❖ ரஜினி விஷயத்தில் வித்தியாசம் காட்டியது தூர்தர்ஷன் மட்டும் தானா? கல்கியும்தான். கேள்வி - பதில் பகுதியில் ரஜினிக்கு மட்டும் முழு உருவ 'ஸ்டைல்' போட்டோ. மற்றவர்களுக்கு வெறும் தலை மட்டும்! இது எப்படி இருக்கு?
சென்னை - 49, சி. ராமநாதன்.

❖ 'சிம்ப்ருக் சின்னது' எழுதிய ''மனம் ஒரு மாயா லோகம்'' போட்டிக் கதை மனதை பரவசப் படுத்தியது. பெண் குழந்தைகளை வெறுக்கும் குடும்பங்கள் மத்தியில் ஒரு பெண் குழந்தை (இல்லையில்லை இரு பெண் குழந்தைகள்) பிறந்ததற்கு இவ்வளவு தூரம் குதூகலிக்கும் குடும்பத்தைக் கதையாசிரியர் மிகவும் ரசமாக வடித்திருந்தார்.
மொரட்டுப்பாளையம்,
சு.நா. இராஜேஸ்வரன்.

❖ கீழே கிடந்த காகிதத் துண்டை பாக்கெட்டில் போட்டுக் கொண்டு இது டைட்டன் கலாசாரம் என சொல்ல வைத்த அஷ்யூரன்ஸ் ஆபீஸர், தங்கள் நிறுவனத்திற்குப் பெருமை சேர்க்க அக்கறையாய் உழைக்கும் ஊழியர்கள் ஆகியோர் மட்டும் பிரமிக்க வைக்கவில்லை; அப்படிப்பட்ட தரமான நிறுவனத்திலிருந்து வாசகர்களுக்கு மெகா பரிசை பெற்றுத் தரும் கல்கியும் தான்!
பரமக்குடி, பா. உஷா.

❖ திருநாகேஸ்வரம் நாகநாத சுவாமி கோவில் கும்பாபிஷேகம் பற்றிய செய்தி படித்ததும் அதிர்ச்சியாக இருந்தது. ஆகம சாஸ்திர வல்லுநர்கள் இதை எல்லாம் எப்படி அனுமதிக்கிறார்கள் என்றே புரியவில்லை!
கோவைபுதூர், கே. கண்ணன்.

❖ ''எனக்கென்னமோ உங்கப்பா அம்மா, எங்கப்பா அம்மான்னு பிரிச்சுப் பேசணும்னு தோணலீங்க....'' என்ற வசந்தியின் வார்த்தைகள் மட்டும் அல்ல - புகுந்த வீட்டுப் பெண்கள் அத்தனை பேரின் ஒட்டுமொத்த கருத்தாக வெளியிட்டுள்ள ஆர். ரகோத்தமனுக்கு இனிய பாராட்டுகள்.
தஞ்சாவூர் - 1,
அம்பிகா இராமநாதன்.

❖ ''ஒரு தலம், ஒரு பாடல், ஒரு நயம்'' திருத்தலங்களின் தொடர் அருமை! 21 வாரங்களும் திருத்தலங்களை வீட்டிலிருந்தே தரிசித்த பெருமை ''கவி சிவம்'' அவர்களுக்குச் சேரும்.
சென்னை - 15, கே.ஆர். ராஜா.

❖ பல்வேறு புண்ணியத்தலங்கள் பற்றிய வரலாற்றுச் சிறப்பையும், சைவ, வைணவ ஆன்மீகப் பெரியார்கள் பற்றியும் மிகச் சுவாரஸ்யமாக, எழுதிய கவி சிவம் அவர்களுக்குப் பாராட்டுகள்.
உடுமலைப்பேட்டை,
எஸ். பொன்னுசாமி.

❖ கவி சிவம் எழுதி வந்த 'ஒரு தலம், ஒரு பாடல், ஒரு நயம்' தொடரில் 'உள்ளமே கோவில்; உடம்பே ஆலயம்' என்ற தலைப் பில் வெளியான கட்டுரை அருமை. எல்லாம் வல்ல இறைவனே ஆண்டியா, அரசனா என்றால் முதல் மரியாதை ஆழ்ந்த பக்தியுள்ள ஆண்டிக்கே (ஏழைக்கு) தருவான் என்பதை உணர்த்தும் அற்புத கருத்துக் கொண்ட கட்டுரை.
சிதம்பரம்,
சிவா. கண்ணதாசன்.

❖ 'மாமன் மகள் அசத்திய ராஜுக்கு அமோக ஆதரவு தாப் போகிறார்கள்' என்ற ஒரு நல்ல வார்த்தையைக் கூற உங்களுக்கு எப்படித்தான் மனசு வந்ததோ, ஆச்சரியமா இருக்கு சார்!
கரடிகொல்லபட்டி,
கே.எம். கவிட் முருகன்.

❖ சில வாரங்களுக்கு முன் ''நீங்கள் கேட்டவை'' பகுதியில் மெகா பரிசுப் போட்டிகளை அறிவித்து, கூப்பன்கள் இணைத்து வெளியிடும் பத்திரிகைகளின் வளர்ச்சி ஆரோக்யமானதல்ல என்று கூறியிருந்தீர்கள்! அப்படிக் கூறிய தாங்களே 24.12.95 கல்கி அட்டையிலேயே 'பளபளக்கும் மெகா பரிசு' என விளம்பரப் படுத்தியுள்ளீர். இது எவ்வகையில் நியாயம்?
வந்தவாசி, அ. வெண்ணிலா.

(ஜாக்பாட் - குலுக்கல் முறை போட்டிகள் - மெகா பரிசுக்கும், அறிவு பூர்வமாக சிந்திக்கவைத்துத் தரப்படும் மெகா பரிசுக்கும் மலைக்கும் மடுவுக்கும் உள்ள வித்தியாசம் உண்டு. ஆர்.)

❖ கிராண்ட் மாஸ்டர் விஸ்வநாதன் ஆனந்தின் மறுபக்கத்தைப் படிக்க மனோகரமாயிருந்தது. ''உலக செஸ் சாம்பியன்'' போட்டியில் தம்மை வென்ற காரிகாஸ்பரோவ் பற்றி அவர் பேசிய நாலு வார்த்தைகளில் ஒரு பந்தய வீரனுக்குரிய ''போட்டி நேர்மை மனப்பான்மை''யைக் கண்டு பிரமித்தேன்.
எலந்தங்குடி, கே.எம். ஜக்கரியா.

எங்கள் நிறுவனத்தின் பங்குதாரர்கள் அனைவருக்கும் உளங்கனிந்த
புத்தாண்டு மற்றும் பொங்கல் நல் வாழ்த்துக்கள்

# BRINDAVAN NAGAR BENEFIT FUND LIMITED

(Approved by Govt. of INDIA)
REGD. OFFICE : P.Box No. 8717 III Main Road,
Brindavan Nagar, Adambakkam, Madras - 88. H.O. Phone : 2349710
EXTN. COUNTER : 1, Kootu Road, Madipakkam, Madras - 600 091.

## டெபாசிட்டுகளும் வட்டி விபரமும்

**வைப்பு நிதி திட்டம் (பொது)**

| வருடம் | 1 | 2 | 3 | 4 | 5 |
| --- | --- | --- | --- | --- | --- |
| வட்டிவீதம் | 18% | 19% | 20% | 20.5% | 21% |

**சிறப்பு வைப்பு நிதி திட்டம் Pensioner's (ஓய்வு ஊதியம் பெறுவோர்)**

| வருடம் | 1 | 2 | 3 | 4 | 5 |
| --- | --- | --- | --- | --- | --- |
| வட்டிவீதம் | 19.5% | 20.5% | 21% | 21% | 21% |

அனைத்து கூட்டு வட்டி டெபாசிட்களுக்கும் (Cumulative Deposit) 1% கூடுதல் வட்டி அளிக்கிறோம்.

தங்களின் முதலீட்டை 45 மாதங்களில் இரட்டிப்பாகப் பெறுங்கள்.

ரூபாய் 990/- மட்டுமே முதலீடு செய்து 252 மாதங்களில் ரூபாய் 50,000/- திரும்ப பெறுங்கள்.

எங்களிடம் பென்சனர், முதியோர், குழந்தைகள், திருமகள் திருமண சேமிப்பு திட்டம். ஆகிய சிறப்பு டெபாசிட் திட்டங்கள் உள்ளது.

விரைவில் எங்கள் பகுதியிலேயே (பிருந்தாவன் நகர்) சொந்தக் கட்டிடத்தில் பாதுகாப்பு பெட்டக வசதியுடன் எங்கள் அலுவலகம் செயல்பட உள்ளது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம். (Lockers facility also available)

தினசரி நகைக்கடன் உடனுக்குடன் வழங்குகிறோம். வீட்டு அடமானக் கடனும் உண்டு.

36 மாத டெபாசிட்டுகளுக்கு 1% ஊக்கத் தொகை வழங்குகிறோம்.

விபரங்களுக்கு நேரில் அணுகவும்

# பிருந்தாவன் நகர் பெனிபிட் பண்ட்



3 வது மெயின் ரோடு, பிருந்தாவன் நகர்,
ஆதம்பாக்கம், சென்னை - 600 088.
போன் : 2349710

(பரிமாற்றங்கள் யாவும் அங்கத்தினர்களுக்கு மட்டும்)

21-1-1996 முதல் எங்களின் சொந்த கட்டிடத்திலிருந்தே செயல்பட இருக்கிறோம்!



# ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள் அதிஷ்டானம் அஸோஸியேஷன்

(பதிவானது) ஊஞ்சலூர்.

**ஸ்ரீ சேஷாத்ரி நிலையம், ஆறாவது தெரு, டாட்டாபாத், கோயம்புத்தூர் - 641 012.**



காமாக்ஷி தேவியின் அருளால் காஞ்சியில் அவதரித்து, திருவண்ணா மலையில் நாற்பது ஆண்டுகள் நான்கும் கடந்த அதீத நிலையில் உலவி பக்தர்களின் இடர் நீக்கி அருட் சுடராக்கிய மகான் ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள், 1929-ஆம் ஆண்டு சமாதி அடைந்த பின்னரும், மஹா யோகினியாக வாழ்ந்த காவேரி அன்னையின் கசிந்துருகிய பிரார்த்தனையின் விளைவாக ஞான சித்தயோக விலாக்ரமத்தில் யோகபீடம் மூலமாகவும், சூக்ஷ்ம பிரவேசமாகவும் புனராவதாரமாக இன்றும் பக்தர்களுக்கு அருள்புரிந்து வருகிறார்.

ஈரோடிலிருந்து 32 கி.மீ. தொலைவில், ஈரோடு - கரூர் ரயில் மார்க்கத் தில் அமைந்துள்ள ஊஞ்சலூரில் ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகளின் சூக்ஷ்மயோக சமாதி அமைந்துள்ளது. இங்கு வைதீக முறைப்படி நித்திய, நைமித்திக பூஜைகளும் உத்ஸவங்களும் நடைபெறுகின்றன. இந்த சங்கத்தினரால் 53 ஆண்டுகளாகத் தொடர்ந்து ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகளின் ஆராதனை கொண்டாடப்பட்டு வருகிறது. ஸத்குரு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகளின் 67வது ஆராதனை உத்ஸவம் ஊஞ்சலூரில் 1996-ஆம் ஆண்டு ஜனவரி 9-ஆம் தேதி தொடங்கி ஆறு நாட்கள் விசேஷமாகக் கொண்டாடப்படும். ஆறாவது நாளான ஜனவரி 14-ஆம் தேதி ஆராதனை நடைபெறும். ஆறு நாட்களிலும் பூஜை, பஜனை, உஞ்சவிருத்தி, லக்ஷார்ச்சனை, வேதபாராயணம், இன் னிசைக் கச்சேரிகள், வித்வான்களின் உபன்யாசங்கள் நடைபெறும். தினமும் அன்னதானமும் நடைபெறும். யோகபீடம் மூலமாகவும், சூக்ஷ்ம பிரவேசமாக வும் ஸ்ரீ ஸ்வாமிகள் அருள்புரிவார். ஆராதனை நாள் இரவு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகளின் திரு உருவ ஊர்வலம் நடைபெறும்.

பக்தர்கள் அனைவரும் இந்த மகோத்ஸவத்தில் கலந்து கொண்டு ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகளின் அருளைப் பெறக் கோருகிறோம். வெளியூரி லிருந்து வரும் அன்பர்களுக்குத் தங்குவதற்கு இடவசதியும், ஆகார வசதி யும் உண்டு.

*மேலும் விவரங்களுக்குத் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி :*


**ஸ்ரீ E. S. சேஷசங்கரன், ஸ்ரீ சேஷாத்ரி நிலையம், ஆறாவது தெரு, டாட்டாபாத், கோயம்புத்தூர் - 641 012.**

**Ph : 0422 - 434361, 438474**

**ஸ்ரீ G. சுரேஷ், ஸ்ரீ கணேஷ் - ஸ்ரீநிவாஸ், 74, சத்தியமூர்த்தி தெரு, ராம் நகர், கோயம்புத்தூர் - 641 009.**

**Ph : 0422 - 231088**

● மு. இரவிச்சந்திரன், சேலம் - 9.

? தெற்காசிய விளையாட்டுப் போட்டிகளில் தங்களைக் கவர்ந்த வீரர் (அ) வீராங்கனை யார்...?

! அம்மாவும் அந்த சிங்கமும்.

● ஆர். பிரேமா, சென்னை - 36.

? South Asian Family Services என்ற அமைப்பு சென்ற ஆண்டின் சிறந்த பெண்மணி என்ற விருதை அம்மையாருக்கு அளித்து கௌரவித்துள்ளதே?

! யார் வேணுமானாலும் யாருக்கு வேணுமானாலும் விருது வழங்கிவிடலாம். பெறுபவரின் தகுதி என்ன என்று நாம் பார்க்க வேண்டும். அதைவிட முக்கியம் - விருது அளிப்பவரின் தகுதி என்ன? நோக்கம் என்ன? என்று பார்ப்பது!

● எஸ். முரளி, குறிஞ்சிப்பாடி.

? ஆதிதிராவிடர்களுக்கென்று ஒதுக்கப்பட்டுள்ள தொகுதிகளில் அந்த சமூகத்தினர் மட்டுமே வாக்களிக்க வேண்டும் என டாக்டர் ராமதாஸ் கூறியுள்ளது குறித்து....?

! அறிவாற்றல் மிக்க டாக்டர் ராமதாஸின் அபத்தமான சில கருத்துகளுள் ஒன்று!



• ஒரே.... ..... ஆறுதல்!

• 'இசை' வான யோசனை!

# டயானாவுக்குப் புதுக் காதலராமே?

● என். சண்முகம், திருவண்ணாமலை.

? 'தமிழிசையைப் பரப்ப, மாவட்டம் தோறும் இசைக் கல்லூரிகள் அமைக்க வேண்டும்' என்கிறாரே மத்திய அமைச்சர் தங்கபாலு?....

! அங்கே ஜால்ரா துறையில் டாக்டர் பட்டம் வழங்குமளவுக்கு வசதி இருக்க வேண்டும் என்றும் அவர் சேர்த்தே சொல்லியிருக்கலாம்!

● இ. மனோகரன், தெற்குப்பை. ❑

? சுய விளம்பரத்துக்காகத் தமிழக முதல்வர் இதுவரை எவ்வளவு செலவழித்திருப்பார்?

! பாவம்! ஒரு ரூபாய் சம்பளக்காரர்...! அவர் எங்கேயிருந்து செலவழிப்பதாம்! கட்சிக்காரர்களுக்கு லஞ்சம் கொடுப்பதுடன், வரியும் செலுத்தும் நம்மைப் போன்ற ஏமாளிகள்தான் செலவழிக்கிறோம். வேணாங்க! கணக்குப் பார்த்தால் வயிறு எரிஞ்சு அல்சரே வந்துடும்!

● மல்லிகை மன்னன், மதுரை - 14.

? 'தி.மு.கவும், அ.தி.மு.கவும் நரைத்த கட்சிகள். காங்கிரஸ் கட்சி மட்டும்தான் இன்னும் பசுமையான கட்சி' என்கிறாரே அமைச்சர் ப. சிதம்பரம்?

! அப்படியா சொன்னார்...? ஒரு வேளை 'டை' அடிச்சிருப்பாங்களோ!

● ஜோ. ஜெயக்குமார், நாட்டரசன்கோட்டை.

? உலகத் தலைவர்கள் வரிசையில் ஜெயலலிதா உயர்ந்து நிற்கிறாராமே?

! ஏற்க முடியாத கருத்து! சமீபத்தில் அம்பலமாகியுள்ள, முன்னாள் தென்கொரிய அதிபரின் ஊழல்களுடன் ஒப்பிட, 'ஜெகலா' ஊழல்கள் அற்ப சொற்பம்!

● கே. ஸ்ரீராம், சென்னை - 4.

? சன் டீ.வியில் ஆற்காடு வீராசாமி, திருநாவுக்கரசு, எஸ். ஆர்.பி., வாழப்பாடி ஆகியோரின் பேட்டியைப் பற்றி.....?

• செலவு என்ன...?





• புத்தாண்டில் வெறுமை

**நீங்கள் கேட்டவை - தராசு**



• கருத்தும் சீரமைப்பு!



• 'பகமைப் பேச்சு...!

! தமிழ்நாட்டை மீண்டும் 'ஜெ'வுக்குத் தாரை வார்க்க அஸ்திவாரம் அமைத்த பேட்டி!

● *ஷோபனாதாசன், நாட்டரசன்கோட்டை.*

**? 'ரஜினி சாதாரண நடிகர்தானே என்கிற எண்ணம் முன்பு இருந்தது. அவரது டி.வி. பேட்டிக்குப் பிறகு அதை நான் மாற்றிக் கொண்டேன்...' என சு. சுவாமி சொல்கிறாரே?**

! இப்போதைய இரண்டாவது கருத்தில் அவர் உறுதியாக இருக்கிறார் என்றால், எடுத்த எடுப்பில் ஒரு மனிதரை சரியாக அறிந்து கொள்ள முயற்சி செய்யாமல், வெளித் தோற்றத்தை வைத்து எடை போடுகிறார் என்றுதான் அர்த்தமாகிறது. அது சு. சுவாமிக்குப் பெருமை சேர்க்கவில்லையே!



• முதல் மார்க்!

● *ரமா ரகுநாதன், திருச்சி - 8.*

**? குழந்தைகள் டி.வி. பார்த்தால், வன்முறையும் ஆபாசமும் வெம்ப வைக்கின்றன. பார்க்காவிட்டாலோ சம வயதுப் பெரும்பான்மைக் குழந்தைகளிடமிருந்து பின்தங்க நேரலாம்... பெற்றோர்கள் செய்ய வேண்டியது என்ன....?**

! சிறந்த டி.வி. நிகழ்ச்சிகளைக் குழந்தைகளுடன் சேர்ந்து பார்க்க வேண்டும். அபத்த நிகழ்ச்சிகளைப் பார்க்காமல் நாமும் தவிர்க்க வேண்டும். இவ்வாறு டி.வி. பார்க்கும் நேரத்தைக் கட்டுப்படுத்தி, பீச், இசை நிகழ்ச்சி, புத்தகக் கண்காட்சி என்று வாரம் ஒரு முறையாவது வெளியே அழைத்துப் போக வேண்டும். நல்ல புத்தகங்கள், பத்திரிகைகளைப் படித்துக் காட்ட வேண்டும். அவர்கள் ரசனையை வளர்ப்பதென்பது நமது ரசனையைப் பொருத்தே நிகழும்.

● *எம். பிரபு, குமராட்சி.*

**? அடேங்கப்பா என்று திகைத்துப் போனது எப்போது?**

! கிருஷ்ணகான சபாவில் சஞ்சய் சுப்பிரமண்யம் கச்சேரி கேட்ட போது. ஓகோகோ! இளம் தலைமுறைக் கலைஞர்களுள் என் முதல் மார்க் இவருக்கே!

● *பா. ரஜினி ராஜன், தாராபுரம்.*

**? சென்னை நகர ஷெரீஃப் பதவியை ரத்து செய்ய தமிழக அரசு உத்தரவிட்டுள்ளதே?**

! எம்.ஜி.ஆர். தமது பங்குக்கு மேல் சபையைப் பறித்தார்; ஜெ. பின் தங்கிவிடக் கூடாது என்று ஷெரீஃப் பதவியை ரத்து செய்திருக்கிறார். இரண்டுமே ஆணவத்தின் வெளிப்பாடேயன்றி அர்த்தமுள்ள செயல்கள் அல்ல!

● *ஏ. செந்தில், போத்தனூர்.*

**? டயானாவுக்கு இன்னொரு புதுக் காதலராமே...?**

! இந்த விவகாரத்தில் சார்லஸும் டயானாவும் ஒரே மனநோய் மருத்துவரிடம் போகிறார்கள் என்ற செய்திதான் கொஞ்சத்துக்குக் கொஞ்சம் ஆறுதல்!

● *பி. பாலாஜி கணேஷ், கோவிலாம்பூண்டி.*

**? சென்னையில் இசைவிழா எப்படி?**

! திரும்பின பக்கமெல்லாம் இசை விழா என்னும் போது, 'எதை விடுவது எங்கே போவது...?' என்று பிரமிப்பு. அகில இந்திய வானொலி செய்யும் காரியம் அருமை! பிரபல பாடகர்கள் மட்டுமின்றி அபூர்வ ராகங்களாக விளங்கும் பல வளரும் கலைஞர்களையும் அறிமுகப்படுத்தி மகிழ்விக்கிறது. உதாரணம்: டாக்டர் ஓமனக்குட்டி, எம். எஸ். ஷீலா.

● *கந்தசாமி நாகம்மா இராஜேஸ்வரன், மொரட்டுப்பாளையம்.*

**? குடும்ப அட்டைக்கு இதுவரை வழங்கி வந்த 12 கிலோ அரிசியை ஜனவரி முதல் தேதியிலிருந்து இருபது கிலோவாக உயர்த்தியிருப்பது குறித்து....?**

! ஜெவுக்குத் தேர்தல் ஜுரம் ஏற ஏற சலுகைகள் அதிகரித்துக் கொண்டே போகும் என்பதற்கு மற்றும் ஓர் எடுத்துக்காட்டு!

● *ஹஜ்ப்ரியன், ரெட்ஹில்ஸ்.*

**? சமீபத்தில் உங்கள் கோபத்தைத் தூண்டிய சம்பவம்?**

! புதிய நுங்கம்பாக்கம் ஸ்டேடியத்துக்கு வரும் வழியை நேராக்கவும் அழகாக்கவும் இரண்டு காலனிகள் புல்டோசரால் ஒன்றன்பின் ஒன்றாக அழிக்கப்பட்ட செயல். எமெர்ஜன்ஸி கால சஞ்சய் ராஜ்யத்தை நினைவூட்டியது!

● *த. சத்தியநாராயணன், சென்னை.*

**? பாலு ஜுவல்லர்ஸ் அதிபர் மறைவு குறித்து..?**

! ஒன்றும் இல்லா நிலையிலிருந்து உழைப்பால் உயர்ந்தவர். இலக்கிய, கலை ஆர்வலர். சதா புன்னகை பூத்த முகம்; சம்பாதித்ததை வாரி வழங்கும் மனம்! பாரதிராஜாவுக்கு கார் பரிசு கொடுத்தது இருக்கட்டும், கல்கி வாசகர்களுக்கு வாரம் ஒரு சவரன் பரிசளித்ததை மறக்க முடியுமா? ஒவ்வோர் ஆண்டும் ஜனவரி முதல் தேதி சென்னை கந்தசாமி கோயிலில் அவரது மண்டகப்படியும் இலக்கியக் கூட்டமும் நடக்கும். இந்த முதல் தேதி? மனம் வெறிச்!!

❑ ரூ. 25 பரிசு பெறுபவர் :
கி. மனோகரன்,
37 ஏ, மெயின் ரோடு, நெற்குப்பை அஞ்சல்,
பசும்பொன் மாவட்டம் - 630 405.

# நரசுஸ்

## விழாக்காலப் பரிசு மழை

நரசுஸ் வழங்கும் விழாக்காலப் பரிசுகள். மொத்தமாகவோ சில்லறையாகவோ நீங்கள் வாங்கும் நரசுஸ் காபியுடன் கிடைக்கும் கூப்பன்களைக் கொண்டு, பரிசுகளைப் பெறுங்கள். 31.12.95 முதல் 3.02.96 வரை முடியும் விற்பனைக்கே வெகுமதிகள் உரியவை

## பரிசுகள்



■ 25 கிலோவிற்கு எவர்சில்வர் பிளேட்



■ 8 கிலோவிற்கு எவர்சில்வர் டபரா செட்



■ 4 கிலோவிற்கு எவர்சில்வர் டம்ளர்




■ 1 கிலோவிற்கு துணிப்பை



■ 250 கிராமுக்கு எவர்சில்வர் ஸ்பூன்

இதையும்தான் எதிர்பார்த்தேன்!



ஜீவனுள்ள காபி !



**நரசுஸ் காபி**

**நரசுஸ்**
**காபி கம்பெனி**

H.O. : சேலம் - 636 007
கிளைகள் : தமிழகம் மற்றும் பாண்டிச்சேரி.

Insync comm./316/95

# ஒரு வேதனை.... ஒரு சோகம்... ஒரு சாதனை!

ராமச்சந்திரா மருத்துவக் கல்லூரி வளாகத்தில் உள்ள மருத்துவமனைக்கு ஏகாம்பரம் என்பவர் ஒரு நோயாளியாக வந்தார்.

தீவிர மஞ்சள் காமாலையின் விளைவாக



• டாக்டர் வீணா

அவரது அடி வயிறு மிகவும் பெருத்து. வெடித்து விடும் போலிருந்தது. சோதனைகளின் முடிவில், அவரது கல்லீரல் மிகவும் பாதிக்கப்பட்டிருந்தது தெரிந்தது. உயிருக்கே ஆபத்தான நிலை.

இந் நிலையில், மோட்டார் சைக்கிள் விபத்து ஒன்றில் சிக்கிய ஒருவரின் கல்லீரல் தானம் தரப்படத் தயாராக இருந்தது தெரிய வர, டாக்டர் வீணா கிரிநாத் பரபரப்பானார். ராமச்சந்திரா மெடிகல் காலேஜின் புரொபசரான இவர், அப்போலோ மருத்துவமனையின் கன்ஸல்டன்ட்டும் கூட!

ஏகாம்பரத்திற்கு, கல்லீரல் மாற்று அறுவைச் சிகிச்சை செய்ய முடிவெடுத்தார்.

"ஒரு இதய மாற்று அறுவைச் சிகிச்சையை விட கல்லீரல் மாற்றுவது மகா சிக்கல்" என்கிறார் டாக்டர் வீணா.

"காரணம்? கல்லீரல் தானம் தருபவர் clinically dead என்கிற மூளைச் சாவு நிலையில் இருக்க வேணடும். அதாவது மூளையிலுள்ள நரம்புகளெல்லாம் உயிரிழந்து விட, இதயம் மட்டும் இயங்கிக் கொண்டிருக்கும் நிலை! மோட்டார் சைக்கிள் விபத்தில் படுகாயமடைந்த இளைஞர் இந்த நிலையில்தான் இருந்தார். அவர் பிழைத்தெழ வாய்ப்பே இல்லை என்று மருத்துவக் குழு ஆராய்ந்து முடிவு கூறிய பிறகுதான் உறவினர்கள் உறுப்புகளை தானம் தர முன்வந்தார்கள்.

உலகம் முழுவதிலும் முப்பத்தைந்து கிளினிக்குகளில் மட்டும் செய்யப்படும் இந்த ஆபரேஷனை இந்தியாவில் அதுவும் நம் சென்னையில் முதல் முறையாகச் செய்வது சாத்தியமாயிற்று.

"மிகவும் உற்சாகமாகவும் தவிப்பாகவும் இருக்கிறது!" என்கிறார் வீணா.

உற்சாகத்துக்குக் காரணம் இந்த முயற்சியில் அடைந்த சாதனை என்பது தெரியும்! தவிப்பு?

"புதிய கல்லீரல் பொருத்தப்பட்ட நோயாளி நன்கு குணமாக வேண்டுமே என்பதுதான்!" என்கிறார்.

"இதுபோன்ற ஒரு ஆபரேஷன் செய்து காட்டும் பெருமை – விளம்பரம் தேடிக் கொள்வதல்ல எங்கள் நோக்கம். நூறு சதவீதம் ரிஸ்க்கான இந்த ஆபரேஷன் வெற்றியடைந்து. நோயாளி பிழைத்து விட்டால், மருத்துவத் துறைக்கே இது பெருமை அல்லவா?" என்று கேட்கிறார்.

மாற்றுக் கல்லீரல் பொருத்தப்பட இருப்பவர், ஆபரேஷன் தியேட்டரில் சுமார் இரண்டு மணி நேரம் கல்லீரலே இல்லாமல் இருக்க நேரிடும்! அந் நேரத்தில் ரத்தத்தில்

• கண்கள் - சங்கர நேத்ராலயா...

• கஜேந்திர குப்தா



• ஏகாம்பரம்





• சுசீலா



• கோவிந்தராஜன்

உள்ள சர்க்கரை அளவு ஆயிரத்து ஐந்நூறு மில்லி கிராம் அளவுக்கு விர்ரென்று ஏறி விடும்! சிக்கல்தான்!

**ப**தினொரு மணி நேர ஆபரேஷனுக்குப் பின் வெற்றிக் கனியைப் பார்த்த டாக்டர் வீணா, "இது என் தனிப்பட்ட வெற்றி அல்ல! எனக்கு உதவி புரிந்த ஐந்து சர்ஜன்களுக்கும் அனெஸ்தடிஸ்டுகளுக்கும் மேற்பார்வையிட்ட டாக்டர் நாயுடுவுக்கும் இந்த வெற்றியில் சமபங்கு உண்டு!" என்கிறார் அடக்கத்துடன்.

**சா**தனையாளர், டாக்டர் மட்டுமல்ல... தானம் கொடுத்த அந்த - விபத்தில் பலியான

வரின் குடும்பத்தினரும்தான்!

எப்படியும் இறந்து விடுவார் என்று தெரிந்தவுடன், மனம் தளர்ந்து போய் விடாமல், மற்ற நோயாளிகளுக்குத் தம்மாலான உதவி செய்ய முன்வந்த அவர்களது பெருந்தன்மை போற்றப்பட வேண்டியது.

கல்லீரல் மட்டுமின்றி இறந்தவரின் இதயம் (சுஜேந்திரகுப்தா), சிறுநீரகங்கள் (சுசீலா, கோவிந்தராஜன்), கண்கள்(சங்கரநேத்ராலயா) என்று உபயோகப்படக்கூடிய அத்தனை உறுப்புகளையும் தானமளித்திருக்கிறார்கள். தானம் தந்தவர் ஒருவர்; பயன் அடைந்தவர்கள் ஐந்து பேர்!

இவ்வளவு பரந்த மனத்துடன் செயல்பட்டது யார் குடும்பம்...? "விளம்பரம் எதுவும் வேண்டாமே!"

தயங்குகிறார்கள் - முகம் காட்ட, குரல் காட்ட, முகவரி தர.

**— ஜி.எஸ்.எஸ்.**

படங்கள் : **யோகா**

# ஜெயித்து விட்டோம்!



● நீச்சலில் வென்ற (400 மீ அரிதித்) தன் தோழர் ராஜாராம் டோமாவுடன்.

☺ தமிழ்நாட்டுல எதிர்க்கட்சி ஒற்றுமை உண்டாகும்கிற நம்பிக்கைக்குப் பெரிய முழுக்கா போட்டுடறோம்!

‘ஜெயிப்போமா?’ என்று கேட்டிருந்தோம்! ஜெயித்துக் காட்டி விட்டார்கள் நம்மவர்கள்! மொத்தம் 106 தங்கம், 60 வெள்ளி, 19 வெண்கலப் பதக்கங்கள். வாழ்த்துக்களோடு நமது கற்பனை கமெண்ட்களும்...

படங்கள் : சாரி



● குண்டு எறியும் பஹதூர் பிரசாத் - தங்க வெற்றி

☺ அட, கழுத்து வலிக்கு இந்த ட்ரீட்மெண்ட் இதமா இருக்கும் போலிருக்கே!



● ஹாக்கியில் தங்கம் : ஸ்ரீலங்கா ஆட்டக்காரரை மிரளச் செய்பவர் நம் முகேஷ்குமார்.

☺ பதறாதீங்க சார்! பந்துதான்! பாம்னு
...ரோ காபரா கிளப்பி விட்டிருக்காங்க!



● டென்னிஸில் தங்கம் வென்ற நிருபமா

☺ ஊழல் பண்றவங்களைத் தேர்தல்ல
இப்படித்தாங்க பந்தாடணும்!

...டு எறிதலில் வெற்றிபெற்ற நீலம்சிங்.




☺ பெண்கள்னாலே மோகவலைதான்
நினைவுக்கு வரும் என்கிற எண்ணத்தை
உடைச்சுடுவோம்!



● 100 மீட்டர் Back Stroke நீச்சலில் வென்ற பாஜசேகல்.

☺ எனக்கும் தண்ணீர் ராசிதான்!

●● வயது 65. தனிமரம். அன்புக்காக ஏங்குகிறேன். கடிதம் மூலம் அன்பு காட்ட, நட்புக் கொள்ள விரும்புவோர் தொடர்பு கொள்ளவும்.

– எம்.டி. விமலதாசன்,
வெள்ளக்கல், மஞ்சம்பட்டி – 621 306.

●● அண்ணாமலை பல்கலைக் கழகம், பி.காம்., முதலாம் ஆண்டு புத்தகங்கள் (தமிழ் மீடியம்) இருந்தால் இரவலாகவோ, விலைக்கோ விரைந்து தந்து உதவவும்.

– ஏ. குமார்,
96/B ரயில்வே காலனி, சர்ச் ரோடு,
போத்தனூர் – 641 023.

●● வீணை கற்க ஆர்வமுள்ளோருக்கு குறைந்த கட்டணத்தில் பயிற்சி அளிக்க ஆவல். தபால் மூலமோ நேரடியாகவோ தொடர்பு கொள்ளவும்.

– எஸ். ராதா எம்.ஏ., (இசை),
36, பரோடா தெரு,
சென்னை – 600 033.

●● வி.வி. கோபாலரத்தினம் எழுதிய A Century Completed என்ற புத்தகம் தேவை. விலை குறிப்பிட்டு எழுதவும்.

– என். சுப்பிரமணியன்,
13/3, Muni Samappa Layout,
Old Madras Road, Ulsoor, Bangalore - 560 008.

●● முதலீடு ரெடி. எனது சொந்த ஊரான கடையநல்லூரில் (திருநெல்வேலி மா.வ.) சிறுதொழில் தொடங்க ஆர்வமுள்ள, படித்த நம்பிக்கையான இளைஞர்கள் தொடர்பு கொள்க.

- T.M.A. Kuthoos,
Post Box 19, HA QEL, (Via) TABUK, K.S.A.

●● ஆரியமத உபாக்கியானம் எனும் நீதிக் கதைகளடங்கிய (ஆறு தொகுதிகள்) கதைத் தொகுப்பினைப் பெற விரும்புகிறேன்.

– டி. எஸ். கோவிந்தராஜன்,
5/56 A, விக்னேஷ் நகர்,
காட்டூர் - 620 014. திருச்சி.

●● டிஜிட்டல் கால்குலேட்டர், குவார்ட்ஸ் கடிகாரம் மெகானிசம் மற்றும் பழுதுபார்த்தல் பற்றிப் படிக்கவும் கற்றுக் கொள்ளவும் விருப்பம். உதவக்கூடியவர்கள் தொடர்பு கொள்க.

– ஆர். அண்ணாமலை,
டைப்பிஸ்ட், கூட்டுறவு சர்க்கரை ஆலை,
பெரிய செவலை (அஞ்சல்)
விழுப்புரம் (மா.வ.) - 607 209.

●● பல ஆண்டுகளுக்கு முன் கண்ணன் வெளியீடாக வந்த நாவல்கள் தேவை. ஒரு நாவலுக்கு ரூ. 30/- சன்மானம்.

– எஸ். ரத்தினம் பிள்ளை,
23, தஞ்சாவூர் குளத் தெரு,
சின்னக்கடை வீதி, திருச்சி – 2.

●● கராத்தே கற்றுக் கொள்ள விருப்பம். பெண்களுக்காகப் பெண்களே கராத்தே கற்றுத் தருவதாக இருந்தால் தபாலில் தெரியப்படுத்தவும்.

– ஜி. சசிகலா,
41, நாலாவது தெரு,
பட்டு நூல்கார தோட்டம்,
சென்னை – 600 004.

●● மிஃராஜ் கும்மி நூல் – அயன்வடமலாபுரம் மு. காதர் முகைதீன் இயற்றியது. யாராவது வைத்திருந்தால் தொடர்பு கொள்ளவும்.

– ஹாஜி ஆர்.கே.எஸ். சம்சுகனி,
4/77 A, ஆயிஷா காதர் நினைவு இல்லம்,
டி. மாரியூர் - 623 703.
ராமநாதபுரம் (மா.வ.).

●● மதுரை மாவ. சின்னமனூர் வாரச் சந்தையில் ஒரு டூ வீலர் சாவிக் கொத்து கண்டெடுத்தேன். தவற விட்டவர்கள் எழுதவும் :

– கே. நாகமணி,
தாயமுத்து பவனம்,
புதுமுனிசிபல் ரோடு, கம்பம் – 626 516.

●● சிறுதொழில் தொடங்க விருப்பம். உபயோகமான தகவல்கள் உள்ள புத்தகம் தேவை.

– ராஜேஸ்வரி ஸ்ரீநிவாசன்,
H 40A, Sector 22, NOIDA (U.P.) - 201 301.

●● அனந்தராம தீக்ஷிதர் நிகழ்த்திய உபந்நியாசங்களின் ஒலி நாடாக்கள் இருந்து, ஒலிப்பதிவு செய்து தர விருப்பமுள்ளவர்கள் தகவல் தெரிவித்தால், நன்றியுடன் அணுகுவேன். வியாபாரரீதியாகப் பயன்படுத்த மாட்டேன்.

– வெ. ராமமூர்த்தி,
16, வன்னியர் தெரு,
குளைமேடு, சென்னை – 94.

# பாலம்

(பாலம் மூலம் இணையும் வாசகர்களின் வெற்றி தோல்விகளுக்குக் கல்கி நிறுவனம் பொறுப்பு ஏற்க இயலாது. - ஆர்.)



# வாழ்வில் ஒளி பிறந்திட
# வளம் யாவும் பெற்றிட
# பொங்கல் திருநாளில்
# உளமார வாழ்த்துகிறது




இப்புதிய ஆண்டில் அறிமுகம் செய்கிறோம்

## FREEDOM DEPOSIT

இத்திட்டத்தில் உங்களுக்கு விருப்பமான தினத்தில்
டெபாசிட்டை திரும்பப் பெறலாம்

**குறைந்த பட்ச டெபாசிட் - ரூ. 5000/-**

**குறைந்த பட்ச காலம் - 12 மாதங்கள் மற்றும் அதற்கு மேலாக**

**வட்டி - 20. 5% ஆண்டுக்கு.**

வழக்கமான 1% சிறப்பு ஊக்கத் தொகை, ஒரு லட்சம் மற்றும் அதற்கு மேலான டெபாசிட்டுகளுக்கு.






## ஆழ்வார்ப்பேட்
## பெனிஃபிட் ஃபண்ட் லிமிடெட்


43-B சி. பி. ராமசாமி ரோடு, சென்னை - 600 018. போன் : 4994809
சென்னை : ●அண்ணாநகர் ✆ 6262515 ●அசோக்நகர் ✆ 4825119
●அடையார் ✆ 414311 ●ஜார்ஜ்டவுன் ✆ 5231231 ●நங்கநல்லூர் ✆ 2342163
●தாம்பரம் ✆ 2366310 ●தி. நகர் ✆ 8241195 ●வளசரவாக்கம் ✆ 4826509
●பாண்டிச்சேரி ✆ 32833 ● திருச்சி ●கோயம்புத்தூர் 441694 ●ஈரோடு ✆ 76264 ●பெங்களூர்
●மல்லேஸ்வரம் ✆ 366519 ●இந்திராநகர் ✆ 5542815 ●ஜெயநகர் லக்கி பாரடைஸ் பில்டிங்
● ஓசூர் ●ஹைதராபாத் ஷெடினோவா காம்ப்ளெக்ஸ், சோமாஜிகுடா ●செகந்திராபாத் ✆ 867377


• Transactions with members only

DATTARAM




# COMPREHENSIVE CARDIAC SERVICES

- CORONARY ANGIOPLASTY
- ATHERECTOMY CORONARY STENTING
- VALVULOPLASTY
- PACE MAKER IMPLANTATION
- CORONARY BYPASS SURGERY
- VALVE REPAIR & REPLACEMENT
- OPEN HEART OPERATIONS ON CHILDREN
- ANEURYSM REPAIR
- CLOSED HEART OPERATIONS




## TAMILNAD HOSPITALS

Cheran Nagar, Madras - 601 302
Ph : 2375221. Fax : 044-2375229

| ADYAR CITY CENTER | ADAMBAKKAM FAMILY CLINIC |
|---|---|
| 30, 1st Main Road, Gandhi Nagar, Madras - 600 020. Ph : 4914013, 4919778 | 3, Vellalar Street, Madras - 600 088. Ph : 2340182 |

**INFORMATION CENTERS**

| TAMBARAM | TIRUVANNAMALAI | SALEM | KARAIKUDI |
|---|---|---|---|
| 115, Mudichur Road, Madras 600 045. Ph : 2367908 | 3, Unnamalai Amman Nilayam, Tiruvannamalai 606 601 | 25-D, Ramakrishna Road, Opp: L.R.N. Bus Stop, Salem 636 007 | 364, Sekkalai Road, Karaikudi 623 001, Ph : 33073, 22715 |
| **ERODE** | **COIMBATORE** | **TRICHY** | **TIRUPUR** |
| 372-E E.V.N. Road, (Mettur Road) Erode 638 009. Ph : 216727 | 185, Ravindranath Layout, New Siddhapudur, GP Hospital Back Side, Coimbatore 641 044. Ph : 432074 | A-18, 1st Floor, XI Cross Main Road, Thillai Nagar, Trichy 620 018. Ph: 32049 | 199 Union Mill Road, Tirupur - 641001. |

# 'சிரி'ப்பளியுங்கள்!


அன்பளிப்பு பெறும் அலுவலகம்
ரொக்கம்
தங்கம்-வெள்ளி ஐட்டங்கள்
இதர பொருட்கள்
தேர்தல் வருதில்லையா? அதான் இப்படி ஏற்பாடு பண்ணிட்டேன்!




இவ்ளோ வரும்னு எதிர்பார்க்கலை!




உங்களுக்கு கர்சீஃப் வாங்கலாம்னுதான் போனேன்.. அப்படியே....!




பூங்கொத்து, மாலை மாதிரி அன்பளிப்பெல்லாம் கூடாதுன்னு சொன்னதுக்கப்புறம்தான் நம்ம வேலை கொஞ்சம் டென்ஷன் இல்லாம இருக்கு!



# KALKI SHOPPING PAGE

## B.M. SILK SAREES

**பொங்கல் சிறப்பு தள்ளுபடி**
**10% முதல் 25% வரை**
**1-1-96 முதல் 16-1-96 வரை**

**B.M. சில்க் சாரீஸ்**
Mfs. of : Kancheepuram Silk Sarees.




5. வடக்கு மாட வீதி
மைலாப்பூர்
சென்னை–4
(கபாலீஸ்வரர் கோவில் அருகில்)
போன்: 4940291

ALL CREDIT CARDS ACCEPTED

## மணமக்கள் தேவை கம்யூட்டர் ஜாதகம்

அனைத்து சமூகத்திலும், ஆயிரக் கணக்கான வரன்கள் பெற உடன் பதிவு செய்ய தொடர்பு கொள்ளவும்.

கம்யூட்டர் ஜாதகங்கள் நொடிப் பொழுதில் ஆங்கிலம், தமிழ் ரூ. 40/-
எதிர்கால கணிப்புடன் ரூ. 120/-
ஆண்டு பலன் : ரூ. 50/-
கல்யாண பொருத்தம் : ரூ. 40/-

ASTROLOGY SOFTWARE FOR SALE.

**ஸ்வயம்வரமாலா**

(GOVT. REGD.)

18, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை - 33. போன் : 425822.

7-ஏ, சாந்தி வஹார் காம்ப்ளக்ஸ், லஸ், சென்னை - 4. போன் : 846278.

88, 1, 16th Cross, 6th Main, Malleswaram, Bangalore - 560 055. Ph. : 3340146

## திருமகள் நிலைய புதிய வெளியீடுகள்

**பாலகுமாரன்**

| | |
|---|---|
| திருப்பூந்துருத்தி | 70.00 |
| பெரியபுராணக் கதைகள் | 43.00 |
| மீட்டாத வீணை | 45.00 |
| கடலோரக் குருவிகள் | 50.00 |
| என்னவளே அடி என்னவளே | 26.00 |
| என்னுயிரும் நீயல்லவோ | 45.00 |
| பணம் காய்ச்சிமரம் | 33.00 |
| நாயகம் ஒரு காவியம் - மு.மேத்தா | 60.00 |
| மனிதநேயம் – கமலி ஸ்ரீபால் | 20.00 |
| மனிதபந்தங்கள் – கிருஷ்ணமாணி | 38.00 |

**அனுராதாரமணன்**

| | |
|---|---|
| காதோடு ஒரு காதல் கதை | 42.00 |
| மனச்சிறை | 37.00 |
| நெருப்புடன் உறவு | 33.00 |
| கொஞ்சம் நில்லுங்களேன் | 34.00 |
| உறவு ஒன்று வேண்டும் | 50.00 |

**சுஜாதா**

| | |
|---|---|
| ஆஸ்டின் இல்லம் | 13.50 |
| தூண்டில் கதைகள் | 44.00 |
| ஆயிரம் கணிப்பொறி வார்த்தைகள் | 33.00 |
| தலைமைச் செயலகம் | 40.00 |
| பட்டாம்பூச்சியும் தூக்கமும் – சிவசங்கரி | 25.00 |
| சொர்க்கங்களில் சில நாட்கள் " | 15.00 |

**ஜாதகம்**

| | |
|---|---|
| ஜாதக அலங்கார யோக விளக்கம் S.P. பாலசுப்பிரமணியன் | 22.00 |
| சோதிட ரகசியமென்றும் ஆயுள் கணித உரையும் விளக்கமும் | 45.00 |
| நந்தித் தேவர் அருளிய ஸ்திரீ புருஷ ஜாதகத் திறவுகோல் | 33.00 |
| செட்டிநாட்டு உணவு வகைகள் – விசாலாட்சி | 40.00 |
| காட்டுக் குறத்தி | 23.00 |
| கருப்பு மலர்கள் – நா. காமராசன் | 15.00 |
| ஆத்திசூடி நீதிக் கதைகள் | 13.00 |
| திருமகள் தமிழ் - தமிழ் கையகராதி | 20.00 |
| இந்து சமயக் களஞ்சியம் மு. திரவியம் | 77.00 |

தனிப்பிரதி வேண்டுவோர் புத்தக விலையுடன் ரூ. 6/- சேர்த்து M.O. செய்யவும்.



**திருமகள் நிலையம்,**
55, வெங்கட் நாராயணா சாலை,
தி. நகர், சென்னை - 600. 017.
Ph: 434 2899 Fax : 434 15 59

# KALKI SHOPPING PAGE

# KALKI SHOPPING PAGE



• படம் - கிருஷ்ணமூர்த்தி

# கேட்கும் ஒலியெல்லாம்...

பார்வைப் பதம் பார்க்காத பரிசுப் பொருள்களில் காஸட்டுக்கு முக்கிய இடம் உண்டு. திருமணம், பிறந்த நாள் உள்ளிட்ட எந்த ஒரு சந்தர்ப்பத்துக்கும் காஸட்டுகள் பரிசளிப்பதில் இரண்டு லாபங்கள். 1. விலை குறைவு. (மிஞ்சிப் போனால் ரூ. 40.), 2. கேட்கிறபோதெல்லாம், பரிசளித்தவரின் இனிய நினைவுகள்.

"டீ.வி. வீடியோ இவற்றாலெல்லாம் ஆடியோ காஸட்டுகளின் மார்க்கெட் சரிந்து விடவில்லை. மாறாக தேர்ந்தெடுத்துக் கேட்டு ரசிக்கிற பழக்கம் அதிகரித்திருக்கிறது" என்றார் சங்கரா ஹாலில் (டிசம்பர் சீசன்) கேஸட் விற்பனையில் மும்முரமாயிருந்த ஒரு இளைஞர்.

கர்நாடக இசை காஸட்டுகள் தவிர, சினிமாப் பாடல்கள் தவிர, மேலைநாட்டுப் பாணியில் தனிப் பாடல் காஸட்டுகள் நிறைய வரத் தொடங்கியிருக்கின்றன.

சங்கரா ஹாலில், தம் மகனுக்குப் பிறந்த நாள் பரிசாக காஸட் தேர்ந்தெடுக்க வந்திருந்த லக்ஷ்மி என்கிற பெண்மணி, "என் பையன் ஒரு மியூஸிக் பைத்தியம். குறிப்பா வெஸ்டர்ன் மியூஸிக். சாப்பாடு கூட வேண்டாம். பாட்டு கேட்டுட்டு இருந்தால் போதும். அவனுக்கே தெரியாது, நான் காஸட் பிரஸன்ட் பண்ணப் போறது. ட்ரெஸ் வாங்கப் போவதாக நினைச்சிட்டிருப்பான்!" என்றவர், புதுப்புயல் அலிஷாவின் இரண்டு ஆல்பங்களையும் பாபா சேகல் காஸட் ஒன்றையும் வாங்கிப் போனார்.

''நண்பர்களுக்கு காஸெட் பரிசளிக்க ஆசைதான். ஆனா, ஒவ்வொரு தரம் தேர்ந்தெடுத்து வாங்கியபின், குடுக்க மனம் வராமல் நானே பிரிச்சி யூஸ் பண்ணிடுவேன். வேற ஏதாவது பிரஸன்ட் வாங்கித் தந்துடுவேன்" - இது ஸ்ரீமதி என்கிற சத்யபாமா - கல்லூரி மாணவி.

பரிசளிக்கவென்றே எச்.எம்.வி., மியூஸிக் டுடே போன்ற காஸட் கம்பெனிகள் 2,4 காஸட்டுகள் கொண்ட கிஃப்ட் ஆல்பங்கள் அளித்திருப்பதைக் காண முடிந்தது.

பஞ்சபூதங்களில் நீர், நிலம், காற்று, நெருப்பு - இவற்றை உருவகப்படுத்தி, இசை வடிவங்களாக்கி, மியூஸிக் டுடே அளித்திருக்கும் புதிய ஹிந்துஸ்தானி ஆல்பம் (நான்கு காஸட்டுகள், ஒவ்வொன்றும் ரூ. 65) கேட்க வெகு சுகம்.

''பாஸ்கர் சந்தோர்க்கரும் சிவகுமார் சர்மாவும் ஹரிபிரசாத் சௌராஸியாவும் உருகி உருகி இழைத்திருக்கும் இந்த இசை ஓவியங்களுக்கு நல்ல டிமாண்ட்" என்றார் ஒரு சேல்ஸ் பையர்!

''கல்யாணம், உபநயனம், அமாவாசை போன்ற காரிய மந்திரங்களுக்கெல்லாம் கூட காஸட்டுகள் வந்து விட்டன. அவரவர் வயது, தேவைக்கேற்பப் பரிசளிக்க இத்தகைய காஸட்டுகளையே அதிகம் வாங்கிப் போகிறார்கள். ரூ. 130லிருந்து 160 வரை இந்த கிஃப்ட் பேக்குகள் இருக்கின்றன" என்றார்கள் தி.நகர் லக்ஷ்மி மியூஸிகல் நடார்கள்.

- தில்லப்பா



• படம் - ஸ்ரீஹரி

# என் கடைசி காலத்தில், 'கவர்ச்சிகரமான ஆதாயம் கிடைக்கும்' என்பது போன்ற பசப்பு வார்த்தைகளை நம்பி நான் ஏமாற முடியாது".



திரு. V. கிருஷ்ணன்,
(ஓய்வு பெற்ற ராடார் இன்ஜினியர்)
1, பிரபாகரன் தெரு, ஹிந்துஸ்தான் லீவர் காலனி,
சென்னை – 600 075. போன் : 403605

"தொந்தரவு ஏதும் படாமல் வரும் நிலையான வருமானம் தரும் நிம்மதியே அலாதி!

அதற்காக, ரிசர்வ் பாங்கின் விதிமுறைகளைக் கடைப் பிடிப்பதோடு, முதலீடு செய்தவர்களின் பாதுகாப்பிலும் கண்ணும் கருத்துமாக இருக்கும் ஒரு நிறுவனத்தைத் தேடிக் கொண்டிருந்தேன். ராம் காஷ்யப் இன்வெஸ்ட்மெண்ட் லிமிடெட்டைக் கண்டு பிடித்தேன்!"




ராம் காஷ்யப் நிறுவனத்தின் சிறப்பு அம்சங்களை கண்டறியுங்கள்

- வட்டி வழங்குவதிலும் அசலைத் திருப்பிக் கொடுப்பதிலும் நம்பிக்கைக்கு CARE நிறுவனத்தார் கொடுத்துள்ள தகுதிச்சான்று 'BBB-FD' (அதாவது போதிய பாதுகாப்பு)
- பங்கு வெளியீடு முதல் ஃபிக்ஸட் டெபாஸிட் வரை மக்களிடம் பெற்றிருக்கும் பூரண நம்பிக்கை.
- நேர்மைக்கும் செயலாற்றலுக்கும் பெயர் பெற்றவர்களைத் தன்னகத்தே கொண்டு திறமையான சேவை அளிக்கிறது.
- தமிழ்நாடு மற்றும் ஆந்திராவிலுள்ள எல்லா முக்கிய நகரங்களிலும் கிளைகள். (அது மட்டுமல்லாமல் நாடு முழுவதிலுமே கிளைகளைத் துவக்க உள்ளது).

* குமுலேடிவ் டெபாஸிட் திட்டத்தில்

**ஆகவே, வாழ்வின் பரபரப்புக்கள் ஓய்ந்த உங்களது காலகட்டத்தில் எந்தத் தொந்தரவும் படாமல் நீங்கள் பலனை அனுபவிக்க முடியும்.**



**Ram Kaashyap**
*Investment Ltd*

**உலகக் கண்ணோட்டம்; தனி மனித மேம்பாடு**

**பதிவு அலுவலகம்** : 53, பிஷப் கார்டன் (கிரீன்வேஸ் சாலை அருகில்),
சென்னை – 600 028. போன் : 4936931, 4936932

**நிர்வாக அலுவலகம்** : மூகாம்பிகா காம்ப்ளெக்ஸ், 5 'D' ஐந்தாவது மாடி,
4, லேடி. தேசிகாச்சாரி ரோடு, ஆழ்வார்பேட்டை, சென்னை – 600 018. போன் : 4995148.

கிளைகள் : • சென்னை : • மயிலாப்பூர் • மேற்கு மாம்பலம் • அண்ணா நகர் (கிழக்கு)
• அடையாறு • கோயம்புத்தூர் • திருச்சி • தஞ்சாவூர் • கும்பகோணம் • மதுரை • விஜயவாடா
• சித்தூர் • ஹைதராபாத் • செகந்திராபாத் • விசாகப்பட்டினம்
• ராஜமுந்திரி • பெங்களூர்

**டெபாசிட் திரட்டும் விழா நடைபெறுகின்றது**

சட்ட பூர்வமான ஃபிக்ஸட் டெபாசிட் விளம்பரம் 30.05.1995 தேதியிட்ட 'ஹிந்து' நாளிதழில் வெளியிடப்பட்டுள்ளது.

Insight 1027

## 23

சென்னையில் ஸி.பி.ஐ. கவனத்தை திசை திருப்பக் குண்டுகளை வெடித்தது போல், ஐரோப்பாவிலும் இன்டர்போல் கவனத்தைத் திசை திருப்ப சூர்யாசுவாமிக்கு அவசியம் இருந்தது. ஸான் ரோக்கோவாக வேஷமணிந்து பாரிஸின் நைட் கிளப் ஒன்றில் புகுந்தான். 'கிரேஸி ஹார்ஸ் சலூன்' என்பது அதன் பெயர். அங்கு பத்திரிகை நிருபர்கள் பரபரப்பு செய்திக்காக அடிக்கடி வருவார்கள். வெய்ட்டர் ஒருவனிடம் அவன் தந்த ஐம்பது டாலர் நோட்டு, அடுத்த நிமிஷமே ஒரு நிருபரை அழைத்து வந்தது. ஸான்ரோக்கோ பேட்டியை, இரண்டு நைட் கிளப் அழகிகளுடன் அவர் சேர்ந்திருப்பது போன்ற வண்ணப்படத்துடன், 'ஸ்கூப்'பாக அந்தப் பத்திரிகை வெளியிட்டது. தொடர்ந்து, எந்த அக்கிரமம் எங்கு நடந்தாலும் அது 'ஸான்



# இருட்டு அரண்மனைகள்

ரோக்கோவின் வேலையாக இருக்கக்கூடும்' என்று பத்திரிகைகள் எழுதின. ஸான் ரோக்கோவை ஃபிரெஞ்சு போலீஸும் இன்டர்போலும் தேட ஆரம்பித்தன. அவனிடம் அழைத்துப் போவான் என்று எதிர்பார்த்தே சூர்யாசாமியைப் பிடிக்காமல் உலவ விட்டன. சூர்யாசாமி தன் வியாபாரத்தைத் தங்குதடையின்றி நடத்தி, இப்போது இறுதிக் கட்டத்துக்கு வந்து விட்டிருந்தான்.

"இந்த முறை நல்ல மகசூல். சாயாவைக் கோவேறு கழுதையாகப் பயன்படுத்தி முக்கால் மிலியன் டாலர் ஸ்விஸ் வங்கியில் போட்டிருக்கேன்" என்று கதைச் சுருக்கம் கூறிய சூர்யாசாமி, தொடர்ந்து பேசினான்:

"இப்படி நீ ஏமாறக் காரணம் என்ன தெரியுமா? அடிமை புத்தி! ஐம்பது வருஷ சுதந்திரத்துக்குப் பிறகும் 'வெள்ளைக்காரன் சொன்னால் தப்பா இருக்காது' என்று நினைக்கிறே. இல்லாவிட்டால், 'பென்ஜமினா உருமாறக்கூடிய சூர்யாசாமி, ஸான்ரோக்கோ வேஷமும் போடலாம்'னு முன்பே ஊகிச்சிருப்பே. அந்த மடையன் ஜான்கார்மிக் இருக்கானே, அவனுக்கு கர்வம் மட்டும் டன் கணக்குல தேறும். 'ஒரு இந்தியன் ஒரு மாஃபியா சாம்ராஜ்யத்தை நிர்வகிக்க முடியும்'னு நம்புவதற்குக் கூட அவன் தயாராயில்லே. அத்தனை நிறவெறி! வெள்ளைத் தோல் படைச்சவன்தான் அவன் கணக்குல புத்திசாலி! அதனாலதான் ஸான் ரோக்கோவை எங்கெங்கோ தேடி அலைஞ்சான்!"

"ரொம்ப சுலபமாத்தான் ஏமாத்திட்டே" என்றான் இன்பசாகரன். "ஆனா இப்ப என்னிடம் உண்மையை வெளியிட்டு ஆபத்தைத் தேடிக்கிறியே!"

"ஆபத்து எனக்கில்லை, உனக்குத்தான்" என்று துப்பாக்கி எடுத்தான் சூர்யாசுவாமி. "சாயா எனக்கு ஃபோன் செய்த போதே, 'நீ எழுதிய நாடக வசனத்தைத்தான் அவள் பேசுகிறாள்' என்பது எனக்குப் புரிந்து விட்டது. நீ என் பக்கம் சேர விரும்பறதா சொன்னதோட அவள் நிறுத்தியிருந்தால் ஒருவேளை நம்பியிருப்பேன். அடுத்ததா ஸான்ரோக்கோ ஃபோன் பண்ணினதாகவும் உன்னை அவன் சந்திக்க விரும்புவதாகவும் கூறிய போது புருடா விடறது தெரிஞ்சு போச்சு. ஆனா அப்பவே நான் உங்க நாடகத்துக்குத் திரை போட விரும்பலே. சாயாவுக்கு இன்னும் கொஞ்சம் வேலை இருந்தது; எனக்கு வந்து சேர வேண்டிய பணமும் பாக்கியிருந்தது. அதனால் உங்களோட சேர்ந்து நானும் நடிச்சேன். உன்னை லண்டனுக்கு வரச் செய்து, இங்கே எனக்கு முன்னால் தருவிச்சும் விட்டேன், பார்!"

"இப்ப என்ன செய்வதாக உத்தேசம்?"

"வேறென்ன, உன்னை புல்லெட்டால் துளைக்கணும், அவ்வளவுதான். என்னை ஏமாற்ற முற்பட்டதற்காக உனக்கு மரண தண்டனை. உன்னை இழந்து விதவையாகும் சாயாவுக்கு அதுவே தண்டனை!"

உச்சந்தலை முதல் உள்ளங்கால் வரை பயத்தின் ஊடுருவலை உணர்ந்தான் இன்பா. இருதயம் திடுக் திடுக். ஆனாலும் அவற்றை மறைத்துப் புன்னகை புரிந்தான்.

"என்னைக் கொன்று விட்டு நீ வாழ முடியும்னு நிஜமாவே நினைக்கிறியா? இன்டர்போல் அதிகாரிகள் என்னை

கி. ராஜேந்திரன்

## அருள்வாக்கு

தங்களுடைய 'லிமிடெட் ஸர்க்கிளை'த் தாண்டி 'நாலெட்ஜ்' (அறிவு) வெளியே பரவக் கூடாதென்ற vested interest (சுயநலக் கும்பலின் கொள்கை) தான் நம் பூர்விகர்கள் ஸயன்ஸ் உண்மைகளைக் கூறாமல், கதையிலே போர்த்தி மூடி வைத்ததற்குக் காரணம் என்றும் சிலர் குற்றம் சொல்கிறார்கள். இது ரொம்பத் தப்பாகும். மனஸ் கட்டுப்படாதவர்களுக்கு அறிவை மட்டும் கொடுப்பது அனர்த்தத்தில்தான் முடியும்.



பெரும்பாலான ஜனங்கள் மனஸ் கட்டுப்படாதவர்களாகத்தான் இருப்பார்கள். ஸயன்ஸ் ஸகல ஜனங்களுக்கும் பரவி முன்னேறிக் கொண்டேயிருக்கும் போது, அந்த முன்னேற்றத்துக்கு எதிர் ratio-வில் (விகிதாசாரத்தில்) லோகத்திலே தர்மம் பின்னே போய்க் கொண்டேயிருப்பதை நாம் பிரத்யக்ஷமாகப் பார்த்துக் கொண்டுதானே இருக்கிறோம்? இதை அநேக நூற்றாண்டுகளுக்கு முன்பே போஜன் "ஸமராங்கண ஸூத்ர"த்தில் சொல்லியிருக்கிறார். அதிலே 'ஏரோப்ளேனை'ப் பற்றிக் கூட 'வ்யோம யானம்' என்று சொல்லி, ஆனாலும் அதன் theory-ஐக் கொஞ்சம் மாத்திரம் கொடுத்து விட்டு, "இதைச் செய்யும் Procedure-ஐ இங்கே விஸ்தாரம் பண்ணாததால் அது தெரியாதாக்கும் என்று நினைக்க வேண்டாம். நன்றாகத் தெரியும். ஆனாலும் புஸ்தகத்தில் எல்லாருக்கும் தெரியும்படியாக எழுதி வைத்து விட்டால், அதனால் லோகத்துக்கு நன்மையை விடக் கெடுதியே ஜாஸ்தி உண்டாகும் என்றுதான் இங்கே சொல்லவில்லை" என்று காரணங்காட்டியிருக்கிறார். அவர் சொன்னதிலுள்ள உண்மையை நாம் கண்கூடாகப் பார்த்து விட்டோம் : ரணபூமியில் மட்டும் யுத்தம் என்றில்லாமல் நாடு நகரமெல்லாம் குண்டு போட்டு World War நடந்ததற்குக் காரணம் விமானப் படையெடுப்புத்தானே? ஹ்ருதயம் சுத்தியாவதற்கு முந்தி புத்தி மட்டும் விருத்தியானால் அனர்த்தந்தான் என்பதை ஸமயாசாரங்கள் எடுபட்டுப் போய் ஸயன்ஸ் மட்டும் அபிவிருத்தியாகிக் கொண்டிருக்கிற இக் காலத்தில் பார்க்கிறோம். இதனால்தான் சுத்தர்களான நல்ல கல்ச்சருள்ளவர்களுக்கென்று மாத்திரம் நம் பூர்விகர்கள் அநேக விஷயங்களை வைத்து விட்டனர்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

சதா பின்தொடர்ந்தபடி இருக்காங்க. நான் இங்கே வந்ததும் இந்த ஹோட்டலை நாலாபுறமும் சூழ்ந்து கொண்டிருப்பாங்க. நான் இன்னும் பதினைந்து நிமிஷங்களில் உன்னைக் கைது செய்து கொண்டு வெளியே வராட்டா அவங்க உள்ளே நுழையப் போறாங்க. உன்னால தப்பவே முடியாது. வெளியேறுவதற்கான எல்லா வாசல்களும் மூடப்பட்டு காவல் நிக்கறாங்க."

சூர்யாசுவாமி அட்டகாசமாய் சிரித்தான். "நீ இந்த அறைக்குள் நுழையறபோதே சொன்னேன், 'என்னிடம் வித்தை காட்டாதே; உனக்கு மேல் பெரிய வித்தைக்காரன் நான்'னு."

"ஆமா, சாயா ஏதோ குண்டு சுமந்து வரதாக பயமுறுத்தினே. ஆர்.டி.எக்ஸா? பிளாஸ்டிக் பாம்? இல்லே வெறும் புரளியா?"

"உனக்காகப் பரிதாபப்படறேன் இன்பா. நீ என் ஆற்றலை உணரலே. குண்டு வெடிக்கும்போது புரளியா இருக்காது; பிரளயமாவே விளங்கும்! சாதாரண குண்டு இல்லே அது; சின்னதான, அழகான அணுகுண்டு! அது வெடிக்கிறப்ப சாயா மட்டுமில்லே, அவளோட அந்த ரயில்ல பிரயாணம் செய்யும் அத்தனை பேரும் பரலோகம் போவாங்க. ரயில் சின்னாபின்னமாகும். அது கடந்து வரும் டன்னல் உடைந்து தூளாகும். சமுத்திர நீர் உள்ளே நயாக்ராவாகக் கொட்டும். பல்லாயிரக் கணக்கான ஊழியர்கள், பல நூறு விஞ்ஞானிகள் சேர்ந்து, பல்லாண்டு பாடுபட்டு, கோடிக் கணக்கான டாலர் செலவில் அமைத்த டன்னல் தவிடுபொடி! கடலில் கதிரியக்கம் பரவி அந்த வட்டாரத்தில் உள்ள உயிரினங்கள் சப்ஜாடா குளோஸ்!"

பிரமிப்பை வெளிக்காட்டாமல், ஏளனக் குரலில், "என்ன பிதற்றல் இது? அணுகுண்டு நீ தயாரிக்கிறதாவது, அதை சாயா கொண்டு வருவதாவது? பொய் சொன்னாலும் பொருந்தச் சொல்ல வேண்டாமா?" என்றான்.

பெருமூச்சு விட்டான் சூர்யாசுவாமி. "நீ இத்தனை அசடா இருப்பேன்னு எதிர்பார்க்கலே. விஞ்ஞான முன்னேற்றங்கள் உனக்குத் தெரியலே. இன்று ஒரு அணுகுண்டை புத்திசாலியான பொறியியல் மாணவன் கல்லூரியின் கொல்லைப்புறம் தயாரிச்சுடுவான். அதற்கு வேண்டிய பொருள்களைக் கள்ளத்தனமாகக் கொண்டு வந்து தர என்னை மாதிரி மாஃபியா ஆசாமிகள் காத்திருக்காங்க."

"சாயா மாதிரி அப்பாவிப் பெண்களும் கைகொடுக்கிறாங்க."

"ஆமா இந்த முறை சாயாவுடைய ஸூட்கேஸ்கள் மட்டும் மாறலே, வேனிடிகேஸும்

''ஐயய்யோ! என்னங்க இது 'ஆதிராஜாராம் மிருதங்கம்'னு போட்டிருக்கு...''

''வேற ஒண்ணுமில்லே, இவர் ஆதி தாளம் நல்லா வாசிப்பாராம்! 'டாபிக்கலா' இருக்கட்டுமேன்னு இப்படி போட்டிருக்காங்க!''

— அகில்




மாறியிருக்கு. மேக்-அப் சாதனங்களுக்குக் கீழே, மறைவாக, வாமனாவதாரத்துல சக்தியை யெல்லாம் உள்ளடக்கியிருக்கிற அணுகுண்டு!"

"ரயில்ல ஒரு டைம்பாம் – அது அணுகுண்டாவே இருக்கட்டும் – வெடிக்கிறதால இங்கே நீ எப்படி இன்டர்போலிடமிருந்து தப்ப முடியும்?"

"அங்கேதான் என் சாமர்த்தியம் செயல்படுது" என்று பிரீஃப்கேஸ் எடுத்துத் திறந்தான். கம்ப்யூட்டர்! போர்ட்டபிள். "டைம் பாம் இல்லே இன்பா! ரிமோட் கண்ட்ரோல்! இங்கே ஓ போர்ட் தட்டினா, அங்கே டமால்!"

'டமால்' என்று குரல் உயர்த்தாமல் வேடிக்கையாகச் சொன்னான்.

''அடப்பாவி!''

''பாவிதான்! பாவத்துக்குப் பயந்தால் போதைப் பொருள் கடத்துவேனா? கோடி கோடியாய் பணம் குவிப்பேனா? இப்ப சொல்லு, இந்த பிரீஃப்கேஸ் என் உயிருக்கு உத்தரவாதமா, இல்லையா? நான் பத்திரமாக தப்பிச் செல்ல முடியுமா, முடியாதா?"

"நான் நம்பவில்லை. இங்கிருந்தபடி, சமுத்திரத்தின் அடியில் டன்னலில் வரும் ஒரு ரயிலில் உள்ள அணுகுண்டை வெடிக்கச் செய்வது சாத்தியமேயில்லை. அப்படியே அது சாத்தியமானாலும் அந்த விஞ்ஞான நுட்பம் உனக்குத் தெரிந்திருக்க முடியாது. என்னை மிரட்டி, ஏமாற்றி தப்பி ஓடப் பார்க்கிறே!"

சூர்யாசாமி சத்தம் வராமல் சிரிக்க, அவன் உடல் குலுங்கியது. "எனக்கு அந்த நுணுக்கம் தெரியுமா என்பதா பிரச்னை? என்னால் அந்த அறிவை விலை கொடுத்து வாங்க முடியுமே! எப்பேர்ப்பட்ட விஞ்ஞானியும் பணத்துக்கு அடிமை. அது என்னிடம் கொட்டிக் கிடக்கு."

''நீ சொல்ற மாதிரி ஜேம்ஸ் பாண்ட் சினிமாவுல நடக்கும்; அல்லது ஒருவேளை ஸ்டீவன் ஸீகல் படத்துல."

"கதாசிரியர்களின் நேற்றைய கற்பனை இன்றைய நிஜம். விமானம், கம்ப்யூட்டர், விண்வெளிப் பயணம் எல்லாமே. இன்னமும் சந்தேகம் இருந்தா உன்னோட மதிப்புக்குரிய ஜான் கார்மிக்கை வேணும்னா கேட்டுப் பார். வெள்ளைக்காரன் சொன்னா நம்புவே இல்லையா? உன்னோட ஃபோன்கால், நான் இங்கேயிருந்து தடங்கல் இன்றி வெளியேறிப் போக பாஸ்போர்ட்டாகவும் இருக்கும்."

நடுங்கும் கரங்களால் ரிஸீவர் எடுத்தான்.

"இன்னும் பதினைந்து நிமிஷங்களில் அந்த ரயில் டன்னலுக்குள் புகும். அதன் பிறகு அரைமணி நேரம் அந்த இருட்டு அரண்மனை வழியே சென்று கரையேறும். பிறகு மேலும் ஒரு மணி நேரம் ஓடி லண்டனை அடையும். அப்புறமும் கூட டன்னலுக்குப் பதில் வாட்டர்லூ ஸ்டேஷனுக்கு ஆபத்து நீடிக்கும். அதனால் நான் சாவகாசமாகத் தப்பிச் செல்லலாம். இந்த பிரீஃப்கேஸ் என்னிடம் இருக்கும் வரை யாருமே என்னை நெருங்கப் பயப்படுவாங்க" என்றான் சூர்யாசுவாமி.

"உன் ஊட்டி பங்களாவை விட இருட்டான அரண்மனை, நீ இருட்டுப் பணம் குவித்துள்ள ஸ்விஸ் வங்கிகள். அவற்றை விடவும் இருட்டு, உன் மனக்குகை. எத்தனை பேருக்கு போதைப் பழக்கம் ஏற்படுத்திய படுபாதகமான இருட்டு டன்னல் அது!"

டயல் செய்த அடுத்த கணம், "ஜான் கார்மிக் ஹியர். சுருக்கமாய்ச் சொல்லு. சீக்கிரம்" என்று உத்தரவிட்டான்.

"இங்கிருந்தபடியே ரிமோட்டில், டன்னலில் வந்து கொண்டிருக்கும் ரயிலில் உள்ள குண்டை வெடிக்கச் செய்ய முடியுமா?"

"சாத்தியம்தான், இன்பா. ஆனால் இதைக் கேள். உங்களுடைய உரையாடல் ஆரம்பித்ததுமே உன் கைகடிகாரத்தில் நாங்கள் பொருத்தியுள்ள மைக்ரோ டிரான்ஸ்மிட்டர் மூலம் எல்லாம் கேட்டோம். தொடர்ந்து கேட்டு வருவோம். மொழிபெயர்ப்பாளர் கூட ஏற்பாடு செய்திருந்தோம். ஆனா ஆங்கிலத்தில் பேசி உதவிட்டீங்க. அவன், சாயா குண்டு சுமந்து வருவதா சொன்னதுமே ரயிலைச் செலுத்தும் இன்ஜினீயர், டிரைவர் ஆகியோரோடு தொடர்பு கொண்டு, ரயிலை நிறுத்தி, பின்னேறி வரச் செய்து, சின்ன ஸ்டேஷன் ஒன்றில் இப்போ நிற்கிறது. லக்கேஜ் நீங்கலாக பயணிகளை மட்டும் இறங்கச் செய்து, ஸ்டேஷனை விட்டு வெளியேற்றிக் கொண்டிருக்கிறோம். குறைந்த



பட்சம் இன்னும் பதினைந்து நிமிஷமா வது தேவை. முக்கால் மைல் சுற்று வட்டாரத்தில் மனித நடமாட்டமே இல்லாமல் செய்வோம். அந்தப் பைத்தியக்காரனிடம் தொடர்ந்து பேசு; முடிந்த மட்டில் தாமதப்படுத்து..."

"என்ன இவ்வளவு நேரப் பேச்சு?" என்று சந்தேகித்து லைன் கட் செய் தான் சூர்யாசுவாமி.

ரிஸீவர் வைத்தபடியே, "சாத்தியம் தான்; அது எப்படி சாத்தியம் என்பதை ஜான் விளக்கிக் கொண்டிருந்தான்" என்றான் இன்பசாகரன். "கம்ப்யூட் டரில் சில சங்கேத மொழிகளை நீ தட் டியதும் அது, ஸாட்டிலைட்டுக்கு அனுப்பப்பட்டு, அங்கிருந்து ரயிலில் நீ பதுக்கியிருக்கிற சிறிய ரேடார் மூலம் அணுகுண்டை இயக்கக்கூடிய குட்டி கம்ப்யூட்டரை அடைய..."

"டமால்" என்று சிரித்தான் சூர்யா சுவாமி. "இப்ப என்ன சொல்றே?"

சல்யூட் வைத்தான். "யு ஆர் தி க்ரேட்டஸ்ட். இன்னும் கொஞ்ச காலத் தில் உலகமே உன் காலடியில்."

"இப்போதைக்கு என் மாஃபியா ராஜ்யத்தைக் காப்பாத்திக்கிறேன். நான் சார்ட்டர் பண்ணியிருக்கிற ஸ்பெஷல் பிளேன், இதற்குள் ஹீத்ரோ விமான நிலையத்தில் இறங்கி எனக்காகக் காத் திருக்கும். நான் இந்தியாவுக்குப் பறப் பதை யாரும் தடைசெய்யாத வரை சன னல் ரயிலுக்குச் சேதமில்லை. உன் உட லைப் பதப்படுத்தி சவப்பெட்டியில் வைத்து சென்னைக்குக் கொண்டு போய் இறுதிச் சடங்கு நடக்கும். அடுத்த குடியரசு தினத்தில் உனக்கு, 'டியூட்டியில் செத்ததற்காக' வீரப் பதக்கம். உன் பெண்டாட்டி தப்பிப் பிழைத்து வந்தால் பெற்றுக் கொள் வாள். நான் அந்த நிகழ்ச்சிக்கு அவசி யம் போறேன்" என்று மறுபடி துப் பாக்கி உயர்த்தினான்.

"நில்லு, நில்லு!" என்றான் இன்பா. "ஒரு விஷயம் யோசி."

"இன்னும் என்ன? அரட்டை அடித் துக் கொண்டிருக்க எனக்கு நேர மில்லை."

"இந்தியாவுக்குப் போனாலும் சட் டம் உன்னைச் சும்மா விடுமா? நான் என்னோட பாஸ் மயில்வாகனத்துக்கு அப்பப்ப தகவல் அனுப்பிட்டுத்தான் இருக்கேன்."

"ஆக மொத்தத்துல முட்டாள்கள் நீயும் உன் பாஸும்தான். பிழைக்கத் தெரியாதவங்க. பாஸ்போர்ட் ஆபீஸிலிருந்து ஆரம்பிச்சு, டி.ஐ.ஜி. மருதகாசி போன்ற சில அதிகாரிகள், மந்திரிகள் எல்லாருக்கும் நான் அப்பப்ப வாய்க்கரிசி போட்டுக்கிட்டிருக் கேன். எனக்கு ஒரு சங்கடமும் நேராமல் பார்த் துப்பாங்க. 'பணம்னா பிணமும் வாயைத் திறக் கும்'னு இதுக்குத்தான் சொல்றது. குட்பை!" - குறிபார்த்தான்.

"இரு இரு ஒரு முக்கியமான விஷயம்."

"என்ன? படிஞ்சு வரேன்றியா? இல்லே, சுட வேண்டாம், பயத்துலயே செத்துடறேன் றியா? எதுக்கும் உன்னை இனிமே நம்ப முடி யாது."

"அதில்லே..." என்று இழுத்தான் இன்பா. 'எதைச் சொல்லி எப்படி தாமதப்படுத்தலாம்?' என்று யோசித்தவனுக்கு, பளிச்சிடும் மின்ன லாக, பாரிஸில் ஜேம்ஸ் பிளாக் சொன்ன செய்தி நினைவு வந்தது! அதை வைத்து இன் னும் ஒரு ஐந்து நிமிஷமாவது ஓட்ட முடி யாதா..? "ருஷ்ய மாஃபியா பற்றி யோசிச்சியா?"

சூர்யாசுவாமியின் முகம் கறுத்தது. "அவங்களைப் பற்றி என்ன?"

"கேள்விப்படலையா? ஐரோப்பா முழுக்க மாஃபியா வர்த்தகத்தை ஒன்றன் பின் ஒன்றா கக் கைப்பற்றி வராங்க. இன்றைய தலைவ னைத் தீர்த்துக் கட்டிட்டு அவனோட சாம் ராஜ்யத்தை ஏஜெண்டுகள், ஊழியர்கள், நெம் பர் அகௌண்ட் உள்பட சகலத்தையும் - சுவீகரம் பண்றாங்க. அவங்களோட அடுத்த இலக்கு ஸான்ரோக்கோதான். இன்டர்போலின் உளவுத் துறைக்கு இந்தச் செய்தி கிடைச் சிருக்கு. ஸான்ரோக்கோவைச் சந்திக்கத்தான் நான் இங்கே வந்திருக்கேன்னு ருஷ்ய மாஃபி யாவுக்கு நிச்சயம் தெரிஞ்சிருக்கும். அதனால இப்ப நீ வெளியே போனா ஒண்ணும் ஒன் ணும் ரெண்டுன்னு கணக்குப் போட்டு உன்னை உடனே சல்லடையா துளைச்சு எடுத் துடுவாங்க. ரயில்ல அணுகுண்டு வெடிக்கு மேன்ற பயத்துல உன்னை இன்டர்போல் சும்மா விடும். ஆனா ருஷ்ய மாஃபியாவுக்கு அந்தக் கவலையோ கருணையோ இல்லே. இந்த ஹோட்டலைச் சுற்றி இன்டர்போல் போலவே அவங்களும் முற்றுகை இட்டிருக் கலாம்! சுற்றுவட்டார கட்டடங்களில் ஒளிஞ் சிருந்து டெலஸ்கோப் பொருத்திய துப்பாக்கி களுடன் காத்திருக்கலாம்."

ஒருகணம்தான் யோசித்தான் சூர்யா சுவாமி. அடுத்த கணம் அவன் முகத்தில் கல வரம் நீங்கி தந்திரம் பரவியது. "அப்படின்னா... பாவம், உன்னைத்தான் நான் குண்டு துளைக் கிற கவசமா பயன்படுத்தணும்" என்றான்.

(அடுத்த இதழில் முடியும்)

● திருக்குறளில் 133 அதிகாரங்கள் இருக்கின்றன என்பது தெரிந்த செய்தி. ஆனால் 132 தலைப்புக்கள்தான் இருக்கின்றன. 'குறிப்பறிதல்' என்னும் தலைப்பு இன்பத்துப்பால், பொருட்பால் ஆகிய இரண்டிலும் இருக்கும். - ஆதாரம் : "தமிழ்ப்பாவை" தகவல் : தி. பரமேஸ்வரி

உணவே மருந்து! மருந்தில்லா மருத்துவ ஆய்வு நூல்! மருந்தே உணவு!

பச்சைக் காய், கனிகள் உண்போம்! பற்பல நோய்களையும் போக்குவோம்!

# இயற்கை உணவே நோய் தீர்க்கும் மருந்து

இரண்டாம் பதிப்பு விலை ரூ. 100

**ஆசிரியர் : இயற்கை உணவு நிபுணர் : மூ. ஆ. அப்பன்**

(இவர் இயற்கை உணவுச் சித்தர், சிவசைலம் நல வாழ்வு ஆசிரம ஸ்தாபகர், தேங்காய் பழ சுவாமிகளின் பிரதம சீடரும் தம்பியும் ஆவார்)

மருந்து மாத்திரைகள் இல்லாமல், பக்க விளைவுகள், பின் விளைவுகள் இல்லாமல் அறுவை சிகிச்சைகள் இல்லாமல் இயற்கை உணவுகளை அதாவது பச்சைக் காய், கனிகளை மட்டுமே உண்டு எப்படிப்பட்ட நோயாயினும், எவ்வளவு நாட்பட்ட நோயாயினும், மொத்தத்தில் டாக்டர்களால் கைவிடப்பட்ட தீராத நோய் எதுவாயினும் தீர்த்துக் கொள்ள முடியும் என்பதற்கு இந்நூல் ஓர் ஆதாரம்.

முடி உதிர்தல், தீராத தலைவலி, குடிப்பழக்கம், நாட்பட்ட மலச்சிக்கல், மூலம், அல்சர், அலர்ஜி, சைனஸ், சுகனோபிலியா, அப்பென்டிக்ஸ் போன்ற சிறிய நோய்களினின்றும், தொழுநோய், இரத்த அழுத்தம், ஆஸ்துமா, நீரிழிவு, ஆர்த்தரைடிக் ரொமாட்டிஸம், வலிப்பு, காசம், புற்று, எய்ட்ஸ், இதய நோய், சிறுநீரக நோய், ஆண்மைக் குறைவு, நரம்புத் தளர்ச்சி, மலடு, மனநோய், வெண்குஷ்டம் போன்ற பெரிய நோய்களினின்றும் விடுதலை பெறலாம் என்றால் நீங்கள் நம்பத்தான் மாட்டீர்கள். ஆனால் அவ்வளவும் உண்மை. உண்மை. உண்மையேதான். அனைத்துக்கும் ஆதாரம் உண்டு! உண்டு! அனுபவக் கடிதங்கள் மூலமாக உண்மைகளை வெளிப்படுத்துகிறார் ஆசிரியர்.

ஆசிரியரே ஒரு தொழு நோயாளியாக இருந்து பிணி நீங்கப் பெற்றவர் என்பதே இயற்கை உணவுக் கொள்கைக்கு ஒரு சிறந்த அத்தாட்சியாக அமைகிறது. அவர் தாம் நலமடைந்த விவரத்தையும் மேற்கொண்ட உணவு முறையையும் நூலில் விளக்குகிறார்.

எந்தெந்த நோய்க்கு எந்தெந்தக் காய், கனிகள் உண்ண வேண்டுமென்று இந்நூலில் விளக்கப்பட்டுள்ளது ஒரு தனிச் சிறப்பாகும். எனவே, உங்களுக்கு நீங்களே மருத்துவராகி உங்கள் நோய் எதுவாயினும் போக்கிக் கொள்ளலாம் என்பது உறுதி.

எனிமா, சுரத் துணிப்பட்டி, சுரமண் துணிப்பட்டி, இடுப்புக் குளியல், முதுகுத் தண்டுக் குளியல், மண் குளியல், வாழையிலைக் குளியல், சூரிய ஒளிக் குளியல், நீராவிக் குளியல், காந்த சிகிச்சை, கோதுமைப் புல்சாறு மருத்துவம், அருகம்புல் சாறு மருத்துவம், மூலிகைத்தூள் சாறு மருத்துவம், சிறுநீர் மருத்துவம் ஆகிய மருத்துவ வகைகள் யாவும் விளக்கப்பட்டுள்ளன. இயற்கை நலவாழ்வு வாழ விரும்புவோருக்கும் தீராத பிணிகளுக்கு உட்பட்டு திக்கு திசை தெரியாமல் அலைபாயும் பிணியாளர்களும் இந்நூல் வழிகாட்டும் ஒளிவிளக்காய் அமையும் என்பது திண்ணம்.

புத்தகத்தைப் படிக்க உண்மைகளை நீங்களே உணருவீர்கள். இன்னும் என்ன யோசனை? என்னடா நோய் ஒன்றும் இல்லாதபோது இந்தப் புத்தகத்தை ஏன் வாங்க வேண்டும் என்று நினைக்கிறீர்களா; பிணியாளர்களுக்கு மட்டுமல்ல சார்! உங்களுக்காகவும்தான் இந்நூல் எழுதப்பட்டுள்ளது.

இயற்கை உணவுகளை - பச்சைக் காய், கனிகளை உண்டு உங்களது, உங்கள் குடும்பத்தாரது, ஆரோக்கியத்தை மேம்படுத்திக் கொள்ளக் கூடாதா? நோய் வருமுன் காக்கக் கூடாதா? உங்கள் நலம் கருதி உங்களுக்காகவே இந்நூல் எழுதப்பட்டுள்ளது. நீங்கள் அன்றாடம் உண்ணும் காய், கனிகளைக் கொண்டே எப்பேர்ப்பட்ட நோய்களையும் போக்கிக் கொண்டு விடலாம். தொழுநோயே குணமாகிவிட்ட பிறகு மற்ற நோய்களைப் பற்றி ஏன் கவலைப்பட வேண்டும்? நிச்சயம் குணம் காணலாம். கவலையே வேண்டாம். இந்நூலைப் பெறுங்கள். வழிமுறைகளைக் காணுங்கள். இயற்கை உணவைக் கொள்ளுங்கள். இன்பம் அடையுங்கள். இப்போது இந்நூல் இரண்டாம் பதிப்பாக விற்பனையாகிறது. முதற் பதிப்பு நூலைப் பெற்றவர்கள் ஏகோபித்துப் பாராட்டுகிறார்கள். பலர் நோய் நீங்கி வாழ்கிறார்கள். வாயார வாழ்த்துகிறார்கள்.

தனிப்பிரதி விரும்புவோர் புத்தக விலையோடு தபால் செலவிற்கு ரூ. 5 சேர்த்து M.O. அனுப்பவும். வி.பி.பி. செலவு தனி. புத்தகக் கடைகளிலும் கிடைக்கும்.



**ஸ்ரீ இந்து பப்ளிகேஷன்ஸ்,**

2, முத்துக்கிருஷ்ணன் தெரு, த.பெ. எண். 1040, பாண்டி பஸார், தி.நகர், சென்னை - 17. தொலைபேசி : 8281902.

கிடைக்குமிடங்கள்: ● கோயமுத்தூர்: ராதாமணி ஸ்டோர்ஸ், 137, ராஜவீதி, விஜயா பதிப்பகம், 20, ராஜ வீதி, வசந்தம் ஸ்டோர்ஸ், 53 கிராஸ்கட் ரோடு ● சேலம்: வள்ளலார் புத்தக நிலையம், 266-A, செரி ரோடு, சந்திரா புக் ஹவுஸ், 5, தேர்வீதி, ஏ.வி.எஸ்.புக் சென்டர், தேர் அருகில், ● மதுரை: சர்வோதய இலக்கியப் பண்ணை, 32/1, மேல வெளி வீதி, மதுரைவாணி புக்சென்டர், 11, மேலவெளி வீதி, செந்தில் புக் சென்டர், தியு காலேஜ் ஹவுஸ், செல்வி புக் ஹவுஸ், நேதாஜி ரோடு, ● திருச்சி: சமதி பப்ளிகேஷன்ஸ், 46-A, மேலபுலிவார்டு ரோடு, இளங்கோ புத்தக நிலையம், 32, மேலபுலிவார்டு ரோடு, ● தஞ்சாவூர்: முரசு புத்தக நிலையம், மணிக்கூண்டு, ● திருநெல்வேலி: எஸ்.ஆறுமுகம் பிள்ளை அண்டு சன்ஸ், ஜஹாரோடு, ● ஈரோடு: வேலா புக் கம்பெனி, 5 அண்ணாஜி தெரு, ராசி புக்சென்டர், 1021 பிரப் ரோடு.

# சாத்தியமில்லாத உறவுகள்...

கவிதா சந்தோஷத்தில் பூவாய் மலர்ந்தாள். தன் காதல் தந்தையால் இத்தனை சுலபமாய் ஏற்கப்பட்டு விடும் என்று கனவிலும் அவள் எண்ணவில்லை. அப்பா முற்போக்கான எண்ணம் படைத்தவர்தான். ஆனால் தன் திருமணத்திற்கு இந்த அளவு சுதந்திரம் தருவார் என்று கவிதா துளியும் எண்ணி இருக்கவில்லை.



வழக்கம் போல் - இன்று காலையில் சாப்பிடும் போது அப்பா பேச்சைத் துவக்கினார். "கவி.. படிப்பு முடிஞ்சிடுச்சு... நீ எதிர்பார்த்த மாதிரி ஒரு நல்ல வேலையும் கிடைச்சிடுச்சு. இனி எதுக்காக உன் கல்யாணத்தைத் தள்ளிப் போடணும்?"

கவிதா பதில் சொல்லவில்லை. அவள் கண்முன்னே கண்ணன் தோன்றி மறைந்தான். கவிதா பதில் பேசாததைக் கண்டு அப்பாவே தொடர்ந்து கேட்டார். "கவி... மனசில் யாரையும் நினைச்சிட்டு இருக்கியா? அப்படி நினைச்சிட்டு இருந்தா சொல்லிடு... நல்ல பையனா இருக்கும்பட்சத்தில் - நானே கல்யாணத்தை நடத்தி வைச்சிடுறேன். உன் சிந்தனை, உன் ரசனை தனி. அதற்கேற்ற நபரை நீ சந்தித்து இருக்கலாம்...."

இப்போதும் கவிதா பதில் சொல்லவில்லை. திரும்ப அவள் கண்முன்னே கண்ணன் தோன்றி மறைந்தான்.

"என்ன கவிதா பதிலையே காணோம். யாரையும் மனசில்..."

"அப்படியெல்லாம் கிடையாதுப்பா..."

"அப்ப வரன் பார்க்கவா... உனக்கு கிருபாகரன் சாரை தெரியுமில்லையா... நம்ம வீடு கட்டின இன்ஜினியர். அவர் தம் பையனுக்கு உன்னைக்



கேட்கிறார். பையனும் இன்ஜினியர்தான். உன் டான்ஸுன்னா அவனுக்கு ரொம்பப் பிடிக்கும். நீயும் அவனைப் பார்த்து இருப்பே..."

"சங்கர்தானே..."

"ம்... ரெண்டு மூணு தடவை உன்னைக் கேட்டு வந்தாங்க. நாந்தான் சாக்குப்போக்குச் சொல்லி அனுப்பிடுறேன். பர்ஸ்டைம் 'படிக்கிறேன்'னு சொல்லி அனுப்பினேன். பிறகு கேட்ட போது 'வேலை கிடைக்கட்டும்'னு சொன்னேன்... இப்போ திரும்ப வந்து இருக்காங்க. என்ன பதில் சொல்ல.. பெண் பார்த்தல் எல்லாம் கிடையாது. உனக்கு ஓகேன்னா - ஜாதகத்தைக் கொடுத்து, பொருத்தம் பார்க்க வேண்டியதுதான்... என்னம்மா சொல்றே...?"

"அப்பா... ஒன் மன்த் என்னை ஃப்ரீயா இருக்க விடுங்க. அப்புறம் என்

மேரேஜ் பத்திப் பேசலாம்."

அப்பா கவிதாவைப் பார்த்தார். "எத்தனையோ வருஷம் பொறுத்து இருந்தாச்சு. இனி ஒரு மாசம்தானே. சரி" என்று கூறின அப்பாவையே கவிதா பார்த்தாள்.

கண்ணனைப் பற்றி அப்பாவிடம் சொல்லலாமா... அப்பாதான் சொல்லி விட்டாரே, மனசில் யாரையேனும் நேசித்தாயானால் சொல்லி விடு' என்று.

ஆனாலும் இன்னும் கண்ணனிடமே என் காதலை நான் தெரியப்படுத்தவில்லையே. தெரியப்படுத்த கூச்சமாய், அச்சமாய் உள்ளது. கண்ணனாக – காதலை முதலில் வெளிப்படுத்தினால் நன்றாக இருக்கும். இல்லை காதல் என்று லேசாக ஒரு புள்ளி வைத்தால் போதும். நானே கோலம் போட்டு விடுவேன். ஆனால் கண்ணன் இன்னும் எதுவும் சொல்லாமல் இருக்கிறான். பெண்ணான நான் எப்படி தயக்கத்தை விட்டுச் சொல்வேன்...

ஆனால் கண்ணன் என்னை விரும்புகிறான். இல்லையேல் தினசரி ஒரு முறையாவது ஆபீஸுக்கோ இல்லை வீட்டுக்கோ போன் பண்ணுவானா. எங்கு என் நாட்டிய நிகழ்ச்சி நடந்தாலும் தவறாமல் வந்து விடுகிறானே... குறையோ, நிறையோ அக்கறை எடுத்துக் கொண்டு விமர்சிக்கிறானே...

அதோடு நான் பத்திரிகைகளுக்கு எழுதும் கட்டுரைகளைப் படித்த கையோடு பாராட்டத் தயங்குவதே இல்லையே கண்ணன்... காதல் இல்லை என்றால் இத்தனை ஈடுபாடு ஏன்?

அவ்வப்போது – அவன் தன் அலுவலகப் பணி நிமித்தமாய் வெளியூருக்குப் போகும் போதெல்லாம் பரிசுப் பொருட்களை அள்ளி வந்து குவிக்கிறானே... இதெல்லாம் காதல் இல்லை என்றால் செய்வானா?

பிறகேன் காதலிப்பதை சொல்லத் தயங்குகிறான். நான் என்ன சொல்வேன் என்றா... நாளை பம்பாயில் இருந்து வந்து விடுவான். வேலை நிமித்தமாய்ச் சென்று இருக்கிறான். வந்ததும் போன் பண்ணுவான்... ஏதாவது பரிசுப் பொருள் கொடுத்தால் – மறுத்து அவன் காதலைப் பரிசாகக் கேட்க வேண்டும்.

கொடுத்து விடுவான்... பிறகென்ன அப்பாவிடம் சொல்லி திருமணத்திற்கு ஏற்பாடு செய்ய வேண்டும்.

கவிதா தயங்கித் தயங்கித் தன் காதலை வெளிப்படுத்தி விட்டாள். அதற்குள் அவள் முகத்தில் ஏராளமான வியர்வைப் பூக்கள். கைக்குட்டையால் முகத்தைத் துடைத்துக் கொண்டாள். காலையில் பம்பாயில் இருந்து கண்ணன் வந்ததும் கவிதாவுக்கு போன் செய்தான்.

# யோகி

'மாலையில் சந்திப்போம்' என்றான்.

மாலையில் – பம்பாயில் பிரபலமாய் இருக்கும் ஒரு கஜல் ஆடியோ கேசட்டை பரிசாக கொடுக்க கண்ணன் எத்தனிக்கையில் 'வேண்டாம்' என்றாள். அவனுக்கு ஆச்சரியம். இதென்ன... தான் தரும் பரிசை இவள் மறுப்பாளா... என்று.

''என்ன கவிதா... ஏன் வேணாங்கறே...''

"எனக்கு வேறு ஒன்னு வேணும்."

"எது..."

"காதல்... கண்ணன் ஐ லவ் யூ... நீங்களா இதப் பத்திப் பேசுவீங்கன்னு எதிர்பார்த்தேன்... பேசலை... என்னால் உள்ளுக்குள் வைச்சிட்டு இருக்க முடியலை... அதை மறைக்கிற ஒவ்வொரு நிமிஷ





"பாதிக் கச்சேரி போனதே தெரியலை!"
"அப்புறம்?"
"சமர்த்தா இருந்த குழந்தை திடீர்னு அழுது என் தூக்கத்தைக் கலைச்சிடுச்சு!"

– லீலா ஜெயபாண்டியன்

மும் உங்களை இழந்துடுவேனோன்னு பயம் வரும்."

கண்ணன் சற்று நேரம் மௌனமாய் இருந்தான். பிறகு தொண்டையை செருமிக் கொண்டான். தன் மௌனத்தைக் கலைத்து விட்டுச் சொன்னான். "கவிதா... இது எனக்கு ஆச்சர்யம்தான். நீ என்னை விரும்பறதா சொல்றது... நா உன்னோட வைச்சுக்கிட்ட ப்ரண்ட்ஷிப்பை நீ காதல் என்று எப்படி அர்த்தம் கொண்டுக்கிட்டே... சாதாரண பெண் மாதிரியா நீயும் ஒரு சிநேகத்தை காதலா கொச்சைப்படுத்தறது..."

கவிதா அதிர்ந்து போனாள். இவன் என்ன சொல்கிறான். அவளுக்கு அவனது பதில் தந்த ஏமாற்றத்தால் அழுகை கூட வந்தது. கட்டுப்படுத்திக் கொள்ள முயன்றாள். முடியவில்லை. அழுதே விட்டாள்.

கண்ணன் பயந்து போனான். என்ன இது.. சின்னக் குழந்தை போல் அழுகிறாள். "கவிதா ஏன் அழுறே... நா உன்னை ஒண்ணும் சொல்லலையே...!"

"கண்ணன்... வெறும் நட்பினால் மட்டும் தானா உங்களுக்கு என் மீது அத்தனை ஈடுபாடு?"

"நிச்சயமா... நா எப்போதாவது உன்னை ஈர்க்கிற மாதிரி, வசப்படுத்தற மாதிரி நடந்துக்கிட்டேனா?"

"இல்லை." அந்த விதத்தில் கண்ணன் கண்ணியமானவன்.

"பிறகு எப்படி கவிதா நீ அப்படி அர்த்தப்படுத்திக் கொள்ளலாம் நம் நட்பை..." என்றவன் சிறிது நேரம் பேசாமல் இருந்து விட்டு பிறகு சொன்னான்.

"கவிதா... என் மனசில் உன்னைப் பற்றி எந்த மாதிரியான எண்ணங்கள் இருக்குன்னு சொல்றேன். அப்புறம் என் விருப்பமின்மைக்கான காரணம் உனக்குப் புரியும்."

"என்ன?" என்பது போல் கவிதா பார்த்தாள்.

"கவிதா... உன்னை முதன் முதலா பார்த்தப்ப என் மனசில் மெலிதான ஒரு பரவசம் ஏற்பட்டது. அப்போ உன்னை ஏன் என் வாழ்க்கைத் துணையாக்கிக்கக் கூடாதுன்னு கூட ஒரு எண்ணம் ஏற்பட்டது... ஆனா உன்னோடு பழக ஆரம்பிச்சதுக்கப்புறம் என்னுடைய எண்ணங்கள் மாறுபட ஆரம்பிச்சது...

"நீ சாதாரண பெண் இல்ல. எல்லா விதத்திலும் மேம்பட்டவள். இன்னிக்கு நீ பேர் சொல்ற ஒரு சிறப்பான டான்ஸர். ஒரு நல்ல பத்திரிகையாளர். இதோட நீ உன் லட்சியத்தைத் தொட இன்னும் எவ்வளவோ நடக்க வேண்டி இருக்கு. என்னைக் கல்யாணம் பண்ணிட்டா – அதெல்லாம் சாத்தியம் இல்லை."

"ஏன்?"

"உங்க அப்பாவைப் பார்க்கும்போதெல்லாம் எனக்கு ஆச்சர்யமா இருக்கும். நீ ஒன்றை விரும்பிட்டா அதை அந்த நொடியே வாங்கித் தந்துடுவார். உன் விருப்பம் போலவே உன் வாழ்க்கை அமைய சற்றும் தயங்காதவர். இன்று நீ விரும்பின துறைகளில் எல்லாம் நம்பர் ஒண்ணா இருப்பதற்கு அவரும் ஒரு காரணம். அவர் உனக்கு இந்தளவு சுதந்திரம் கொடுத்து இருக்கலேன்னா உன் ஆர்வம், உன் திறமை முளையிலேயே கிள்ளி எறியப்பட்டு இருக்கும்..."

கவிதா – அவன் சொல்வதைக் கேட்டு விட்டு – பொறுமை இழந்தாற்போல் கேட்டாள். "நீங்க சொல்வதற்கும் – என்னை நீங்க நிராகரிப்பதற்கும் என்ன தொடர்பு இருக்கு?"

"சொல்றேன் கவிதா... நீ இன்னும் உன் வாழ்க்கையில் ஜெயிச்சுட்டே இருக்கணும்னா – முற்போக்கான, பரந்த எண்ணம் கொண்ட கணவர்தான் உனக்கு வரணும்... என்னை நீ கல்யாணம் பண்ணிட்டே, நிச்சயம் எதுக்கும் பிரயோஜனம் இல்லாதவளா போயிடுவே. நா என்னதான் உன் மீது அக்கறை செலுத்தினாலும் அதெல்லாம் சிநேகிதியா நீ இருக்கிற வரைதான். நீ என் துணைவியாயிட்டேனா என் ஈகோ சும்மா இருக்காது. என் மேல் ஷாவனிஸம் சும்மா இருக்காது... என் ஒரு முகம் இளகியதுன்னா இன்னொரு முகம் மோசமானது. நம் கல்யாணத்துக்குப் பிறகு நீ இன்னொரு ஆணிடம் பேசினாக் கூட என்னால் சகிச்சுக்க முடியாது... ஏன்னா – நா வளர்ந்த சூழ்நிலையும் வாழ்ந்த சூழ்நிலையும் அப்படி."

கவிதா அவன் சொல்வதை நம்பாதது

போல் அவனைப் பார்த்தான்... "நீங்க என்னை நிராகரிக்க ஒரு காரணம் கண்டுபிடிச்சுச் சொல் லீங்க..''

''இல்ல கவிதா... உன்னை மணக்க யாருக்குத்தான் பிடிக்காது. பிரமிப்பூட்டும் அழகு. உன் மீதுள்ள அபிமானத்தால்தான் உன்னை நிராகரிக்கிறேன். என்னால் நீ சிதைஞ்சு போயிடக் கூடாது. உன் திறமை வீணாகி விடக் கூடாது. என் மாதிரியான நபர்கள் உனக்கு சரிப்பட்டு வராது. நீ பின்னாடி ஏமாந்து போயி அழக் கூடாது."

கவிதா எதுவுமே பேசவில்லை. அவனது பேச்சு அவளுக்கு பைத்தியக்காரத்தனமாய்ப்பட்டது. அதேசமயம் அதில் சின்ன உண்மை இருப்பது விளங்கிற்று. எத்தனையோ திறமைசாலியான பெண்களின் வாழ்க்கை – திருமணத்திற்குப் பிறகு சிதைந்து போய் இருக்கிறதே. அவர்களின் அபிலாசைப்படி வாழ இயலாமல் போய் இருக்கிறதே. பிறரைப் பற்றிக் கவலைப்படாதவர்கள் கணவன் எனும் வட்டத்தை விட்டு வெளியே வந்து தங்களை நிலைநிறுத்தி இருக்கிறார்கள்.

சில பெண்கள், 'கணவனே உலகம் அவன் சொல்லே வேதம்' என்று தங்களை குறுக்கிக் கொண்டு பேருக்கு வாழுகிறார்கள்.

ஐயோ... தன்னால் அப்படி வாழ முடியுமா... அப்பாவை மாதிரி எல்லா ஆண்களும் இருந்துவிட மாட்டார்கள். அவர்களின் ஈகோ சும்மா இருக்காதே. கண்ணன் அந்த உண்மையை உரைத்து விட்டானே.

ஆனாலும் – அவனை மனசில் இருந்து முழுசுமாய்த் துடைக்க முடியவில்லை..

"கவிதா... உன் மீதுள்ள விருப்பத்தால் நீ ஒரு தாரகையாகவே மின்னணுங்கிற ஆசையால்தான் உன்னை விலக்குகிறேன்'' என்றவன் கிளம்பினான்.

கவிதாவுக்குக் குழப்பமாய் இருந்தது. அப்பா சொன்ன இன்ஜினியர் பையன் எப்படிப்பட்ட குணம் படைத்தவனாக இருப்பானோ என்று பயப்பட ஆரம்பித்தாள்.

# இனி கிண்டல் பண்ண முடியாது!

● பான் பராக் விற்றுக் கொண்டிருந்தார் மேத்தா. அவர் கடையில் இதர சில ஐட்டங்களும் இருந்தன. ஒரு பெண்மணி, அத்தனை துடைப்பங்களை அலசி ஆராய்ந்து, ஒன்றைத் தேர்ந்தெடுக்க அரைமணி நேரம் செலவிட்டதைப் பார்த்தார் மேத்தா. 'ஒரு brand name உடன் துடைப்பம் தயாரித்து விற்றால் என்ன...?' என்று தோன்றப் போக, 'மங்கி பிராண்ட்' துடைப்பம் மார்க்கெட்டுக்கு வந்தது! மேத்தாவின் மனைவி இம்முயற்சியை பயங்கரமாகக் கிண்டல் செய்தாலும் அவர் வணங்கும் ஆஞ்சநேயர் ('மங்கி' பிராண்ட் பெயரே ஆஞ்சநேயர் நினைவாகத்தானாம்!) அவரைக் கைவிடவில்லை. வருடத்தில் முந்நூறு கோடி ரூபாய்க்கு வியாபாரம் ஆகிறதாம்! 'துடைப்பக்கட்டைக்குப் பட்டுக் குஞ்சலம்' என்று இனி ஒருத்தரும் நக்கல் பண்ண முடியாது!

– எஸ். சுமதி




● டெலிபோன் வசதி நவீனமடைந்துள்ளதால் கடிதம் எழுதும் கலையே அழிந்துவிடும் என்று பயப்படுகிறார்கள் ஜப்பானியர்கள். அப்பழக்கத்தை நினைவூட்டி ஊக்குவிக்க ஜூலை 23 ஆம் தேதியை 'லெட்டர் ரைட்டிங் டே' என்று கொண்டாடி, சிறப்புத் தபால் தலையும் வெளியிடுகிறார்கள். இதற்கு மக்கள் அளிக்கும் ஆதரவைக் கண்டு பிற நாடுகளிலும் இதே கொண்டாட்டத்தை ஆரம்பித்துள்ளனர். நெதர்லண்டு கொண்டாடிய கடித தினத்தையொட்டி வெளியிடப்பட்ட தபால் தலைதான் மேலுள்ளது.

– அ. குமார்

● இரண்டாம் உலகப் போர் நடந்து கொண்டிருந்த சமயம்... இங்கிலாந்தின் பிரதமராக இருந்தவர் வின்ஸ்டன் சர்ச்சில். ஒரு பள்ளியின் 150 வது ஆண்டு விழாவில் மாணவர்களிடையே பேச அவரை அழைத்தார்கள். அவர் மனஉறுதி பற்றிப் பேசுவதைக் கேட்க பெருங் கூட்டம். சொன்னார் :

NEVER
NEVER
NEVER
NEVER
GIVE UP



பேச்சு அவ்வளவேதான்! அவருடைய வாழ்க்கையின் வெற்றி இரகசியத்தை இந்தே வார்த்தைகளில் கூறி விட்டார். விடாமுயற்சியின் பலம் புரிந்து அரங்கம் கைதட்டி ஆரவாரித்தது.

– இந்திராகாந்தி திறந்தவெளி பல்கலைக் கழகத்தின் MBA பாடப் புத்தகத்திலிருந்து :
எஸ். எம். வள்ளியப்பன்



அருகதை கூட எனக்கு இருக்கவில்லை.

ஆனால் அந்த யோசனையெல்லாம் அப்போது தோன்றவில்லை. புறப்பட்டு காஞ்சிபுரம் போய் விட்டேன். அங்கு சென்ற பிறகுதான் அவர் மௌன விரதம் மேற்கொண்டிருந்தது தெரியவந்தது. ஆனால் மிகச் சிறப்பான தரிசனம் கிடைத்தது. அந்தச் சமயத்தில் அகில உலகமும் என் நினைவிலிருந்து அகன்றது. இனம்புரியாத இன்பம் மட்டுமே மனத்தில் வந்து சூழ்ந்தது. நகரவும் மறந்து அவரெதிரில் நின்றேன். சிப்பந்திகள்தான் 'மற்றவர்கள் தரிசிக்க வேண்டும்' என்று என்னை அகற்றினார்கள்.

அதன் பிறகு அடிக்கடி காஞ்சிபுரம் போக ஆரம்பித்தேன். ஒருமுறை புதிதாக ருத்ராட்ச மாலை வாங்கி, பெரியவரின் திருமுடியில் வைத்துப் பிரசாதமாகப் பெற விரும்பிக் கொடுத்தேன். ஆனால் மகா பெரியவர் அதைக் கையில் வாங்கி ஜபிக்க ஆரம்பித்து விட்டார். அவர் ஜபித்து அருளிய அந்த மாலையைப் பெற்றுக் கொண்டதே மிகப் பெரிய திருப்பமாக

# மெய்சிலிர்த்த அனுபவங்கள்!

## மௌனமாய் அருளினார்!

கண்ணதாசனின் 'அர்த்தமுள்ள இந்து மதம்' புத்தகத்தைப் படித்த போது எனக்குள் ஒரு பாதிப்பு... அதில் ஸ்ரீ மஹா பெரியவரைப் பற்றிக் குறிப்பிட்டிருந்தார் கவிஞர். அவரைத் தரிசிக்க வேண்டும் என்ற ஆவல் வந்தது. அப்போது (1990) நான் பலவிதமான கெட்ட பழக்கங்களுக்கு ஏறத்தாழ அடிமையாகவே இருந்தேன்! பெரியவரின் அண்மையில் செல்லும்

என் வாழ்வில் அமைந்தது. அன்று முதல் தீய பழக்கங்களை ஒவ்வொன்றாகக் கைவிட முடிந்தது. நெஞ்சில் தூய எண்ணங்கள் நிறைய ஆரம்பித்தன.

எல்லாவற்றுக்கும் காரணம் அவருடனான எனது முதல் சந்திப்புதான். அப்போது ஏற்பட்ட பரவசத்தை வர்ணிக்க எனக்கு ஆற்றலுமில்லை; சொற்களுமில்லை.

– கே. சிவசுப்ரமணியன், பூவாளூர்.

(அனுபவங்கள் தொடரும்...)

பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் : வி. முரளி, பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : கி. ராஜேந்திரன்.
ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவஹர்லால் நேரு சாலை, ஈக்காட்டுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா, விளம்பரம் : 2345622; மானேஜிங் டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.

# Sreemathi™

பண்டிகை

நேரங்களுக்குப்

பரவசமூட்டும்

படைப்புகள்



## Aishwarya™

HANDWOVEN

ஐஸ்வர்யா அழகு கைத்தறி புடவைகள்.
சில்க் டச் மெருகுடன் நுண்மையாக
நெய்த நளினங்கள்.



PATHI GROUP

**PATHI BHASKARIAH & BRO,**
149, Nagarthpet Bangalore 560 002
Tel : 2224093, 2237870
Fax : 91 - 080 - 2224093 Grams : 'PATHISILKS'

